உ

கணபதிதுணை.

# தனிப்பாடற்றிரட்டு.

இஃது,

இராமநாதபுரம் சமஸ்தானம்-ம-ா-ா-ஸ்ரீ,

பொன்னுசாமித்தேவரவர்கள்

அநுமதியினால்

தில்லையம்பூர்ச்

சந்திரசேகரகவிராஜபண்டிதர்.

காஞ்சிபுரம்-வித்வான்

**கச்சபாலைய ஐயர்**

இவர்களால் முன்பதிப்பித்த

மற்பலபிரதிகளைக்கொண்டும்

இன்னுஞ்சிலபாடல்களு நூதனமாகச்சேர்த்து

இஃது

மயிலம்

சுப்பிரமண்ணியசுவாமிகளால்

பார்வையிடப்பட்டு

கூ - வெங்கிடாஜலமுதலியார்

குமாரர்

கூ. முனிசாமிமுதலியாரது

மாதவநிவாசவச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது

1887 ஹ

ROJA MUTHIAH

LIBRARY SERVICE INDIA

KOTTAIYUR-623106

உ

சிவமயம்.

ஸ்ரீமகாபாரதகீர்த்தனஞ்செய்த

ம-ா-ா-ஸ்ரீ-முத்துராமமுதலியாரவர்கள்-தமையனார்குமாரர்

கோ - சபாபதிமுதலியாரவர்கள்.

இயற்றிய

# சிறப்புப்பாயிரம்.

(கழிநெடிலடியாசிரியவிருத்தம்)

தண்ணளிமிழற்றுபைங்கற்பகநன்னீழலிற்றனியரசு புரியிந்திரனும் தலைமைசேரும்ராமநாதபுரநற்சமஸ்தானமானேசனொன்னும், அண்ணன்மதவேள்பொன்னுசாமிதேவப்ரபலர் அமராராமகிலத்தினோர் அகமகிழ்ந்துட்கொளத்திருமாலெனுந்தில்லையம்பூரரும்புவிதுதி பண்ணவழுயர்சந்த்ரசேகரக்கவிராஜபண்டிதரெழிற்கச்சியம்,பதிமருவுவித்துவான்கச்சபாலயனெனப்பகருமிவ்விருவரைக்கொண், டெண்ணரும்புலவர்புகல்கவிகளாங்கடலையவரிணையின்மதிமந்திரத்தால், இனிதிற்கடைந்தமுதமாந்தனிப்பாடலையெடுத்திங்களித்தனரரோ. (க)

தலைமைபெறுமதிசைவர்சிவஞான தேவர்சுதர்தகுராமநாதபுரநற்சமஸ்தானமதனுக்குமுயர் பரமசிவனடிதனக்குமானேசர்வழுதி, தானென்னமுத்தமிழ்ப்பைங்கூழ்தழைத்திடச்சந்ததம் பொன்மாரி பெய்தகைமையதனாற்பொன்னுசாமிதேவர்பெயர்கொள் தனுமாரர்புகலவளவில்.—கலைகளுணர்ந்தில்லையம்பூர்ச்சந்த்ரசேகரக் கவிராஜபண்டிதரும்வண், காஞ்சிமாநகர்மேவுமுசிதகனவித்துவான்கச்சபாலயருமவர்தம்,கருத்தின்படிக்குச்செய்தீருமோமெனவக்கணங்கங்கணங்கட்டியே, கனைகடலிடைப்பலவிடங்களினீசிதறிவெகுகாலமுன்வீழ்ந்திருந்த—அலகினற்பொருடனைக்கண்டெடுத்ததினடிசெலர்தமிவைதாறுமாறு, அவனியில்வழங்கு மெண்ணறுதனிப்பாடல்களவைக்குணயமுற்றவைகளை, அன்றுசொன்னவர்கருத்திற்கணுவும்வழுவாதனந்த முறையநிரூபமாய், ஆராய்ந்தொருங்குசேர்த்ததிலமெல்லாம்புகழவச்சிற்பதித்ததைக்கண்.—டுலகிலிவ்விருவர்தங் கல்வித்திறத்தையோர்ந் துரைாதுவித்தைக்கியான், ஒருவனேயென்றெண்ணவிழிவென்னவறுமுகவனொளிரகங்குன்றினின்றான், உயர்முனிவனெண்சாணுடம்புமொருசாணினுமொடுங்கினனிவர்புலமைதோர்துரகவேந்தொருகாலருந்திவிழியிமையாவலோடியதமுற்றனனரோ, (உ)

சிறப்புப்பாயிரம்-முற்றிற்று.

ROJA MUTHIAH

உ

சிவமயம்.

# சாத்துகவிகள்.

இஃது

சென்னைத்துரைத்தனக் கல்விச்சாலையில தமிழ்த்தலைமைப்புலமை.

நடாத்தும் இயற்றமிழாசிரியராகிய

திருத்தணிகை.

விசாகப்பெருமாளையரவர்களாலியற்றப்பட்டது.

(நிலைமண்டில் ஆசிரியப்பா)

சீர்மலியோர்பெறுதிகழ்கடலுடுத்த
பார்தனிலார்தருபற்பலமொழிகளுள்
பன்னருந்தமிழாம்பாற்கடலதனைச்
சொன்னயப்பொருணயச்சுவைமிகவுணர்ந்த
துங்கமிகுத்திடுசங்கப்புலவர்கள்
வள்ளுவரௌவைவான்காளமேகம்
தெள்ளுபொய்யாமொழிதிகழ்கம்பாதியாம்
நாவலரொன்னுநன்முகில்பருகி
ஓவறவாங்காங்கொழுக்கியகவியாம்
தண்ணுறுமமுதமன்னவாசெவியால்
உண்டுகளிப்பதேயுறுதியென்றோர்ந்து
தென்னாடதனிற்பொன்னேடொக்கும்
நிலமகளவதனத்திலகியதிலகமாம்
பலர்புகழிராமநாதநற்பதியினில்
இனிதுவீற்றிருந்துமநுநூல்விதிவழிச்
செங்கோனடாத்துசங்கேந்துதிருமால்
தரியலர்மடங்கல்சற்குணமேரு
அறிவையர்க்குருவமாகியவங்கசன்
மன்னுறுகலிதனைமாற்றுமருந்து
சென்னியின்மதிபுனைசிற்பரனடிதொழூஉம்
சிவஞானதேவன்செய்தவப்பயனே
புவிமிசையுருக்கொடுப்போந்தெனத்தோன்றிய
பொன்னுசாமியெனும்பூபாலன்
தன்மனமுவந்துதயங்குமெழுதா
வெழுத்திற்பொறித்தே யீந்திடுகென்ன
அரியதவத்தரும்பெரியோர்களும்வாழ்
வொன்னிசூழ்சென்னிபுன்னாடதனில்
மன்னுதில்லையம்பூரென்னும்பதிவாழ்
வாகுறுசந்திரசேகரனென்னும்
புவிராஜர்புகழ்கவிராஜபண்டிதனால்
பழுத்திடும்வருக்கையின்செழுத்தகனியினை

வான்கவிகவ்வுழூஉமந்திக்கீந்து
காணுடநீர்க்குந்தண்டலையுடுத்த
மணலியம்பதிவாழ்மாண்புறுநல்லோன்
குணநிதிநறுமலர்க்குவளைத்தாரான்
பெரியதம்பியாமுரியபெயரினன்
வழூஉக்களைவித்துவாகுறுமச்சிற்
கெழூவுநப்பதித்துக்கிளர்வித்தனனரோ
இஃது.

காஞ்சீபுரம்-பச்சையப்பமுதலியாரவர்கள் கல்விச்சாலையில்
தமிழ்த்தலைமைப்புலமைநடாத்திய

வித்வான்-காஞ்சீரபுரம்.

சபாபதிமுதலியாரவர்களாலியற்றப்பட்டது.

(நேரிசையாசிரியப்பா)

திங்கள்சேர்செஞ்சடைத்தேவனிமய
மங்கைமணாளன்மதுரைப்பெருமான்
இறையெனமேவியியற்றமிழாய்ந்த
பொறைமிகுசங்கப்புலவரேயாதி
யாண்டுளபுலவருமினிதின்முன்னரே
பூண்டுளவளமெலாம்பொற்புடனினிவரும்
நற்றமிழ்வல்லோர்நாமுமதன்வளம்
தெறெதற்னவுரைக்குதுஞ்சிறிதெனத்தத்தம்
நாப்புடைபெயராவண்ணநலந்திகழ
கோப்புடைக்கவியாற்கூறியதாகி
அன்னவர்பின்வருமறிஞர்களனையோர்ந்
தென்னெனப்புகழ்ந்துமித்தமிழ்நாட்டினை
ஒல்லும்வகையாலுரைத்துமென்னிலோ
சொல்லியசொல்லுஞ்சுகமாகுதுமென
எண்ணியெண்ணியேக்கங்கொண்டப்
புண்ணியசங்கப்புலவர்புகன்ற
செய்யுட்களனைவையுஞ்செவ்விதினோதி
உய்வதேபயனெனவுவப்புறாவும்பாண்டிநன்
னாட்டுளவிராமநாதர்தங்கமலத்
தாட்டலைகொண்டுதகவுடனேத்தி
அவமெலாமகற்றவருளமுதுண்ணுஞ்
சிவஞானதேவர்செய்தவக்கடலிடைத்
தோற்றியசெம்மணிதூயகுணமணி
நாற்கவிப்புலவர்நாடுமபுகழ்மணி
அந்தணர்சிவபிரானடியவரெவர்க்கும்
வந்துளவளமெலாம்வழங்கவுண்மதித்தாங்
கியாதொருபொருளுமில்லையென்றுதருள்

சேதுபதியெனுஞ்செல்வன்செங்கோல்
கோடாவகைகிறீஇக்குடிகள்பலரும்
வாடாவகையான்மகிழ்ந்துபுரந்தே
அறத்தாறிற்றென்றறிந்தான்றமைந்தசொற்
றிறத்தாறறியுந்தேர்ச்சிநன்னூலொடு
மதிநுட்பமுமுளமாண்பமைவள்ளல்
அதிநுட்பமியாவையுமகற்றுமாண்டகை
தன்பெயரதனுற்றனபதியிவனென
மண்புவியோர்கண்மதிக்கிடவாய்ந்த
பொன்னுசாமிப்புரவலர்சிகாமணி
தன்னுற்சாகமொடுதொகுத்தியற்றுக
என்றுரைசெய்யவியற்றமிழ்க்கடலைக்
குன்றுடைமுனியெனக்குடியாதுகுடித்துக்
களிப்புறுகின்றகவிராஜபண்டிதன்
தளிப்புறுசெஞ்சடைச்சங்கரன்பதமலர்
அல்லும்பகலுமன்புடனேத்தும்
தில்லையம்பூர்ச்செந்நாப்புலவன்
சந்திரசேகரகருபெயரறிஞன்
புந்தியினுய்ந்தபொறபுளகாந்தனிப்
பாடற்றிரட்டெனும்பாற்றிரட்டதனை
நீடக்கருங்கொலாணிகழ்வித்திடாது
பாருள்வாழ்வோர்பண்டுகண்டிலாச்
சீருள்வரியாற்றிகழப்பதித்தனன்
கனிதமிலாவளங்காட்டுபுவிளங்கும்
மணலிநன்னகர்வாழ்மகிபதிகனவிலும்
சிவனடிமறவாச்சிந்தையன்சான்றோர்
தவவிலாக்கேள்வித்தகைசாலறிஞன்
பெரியதம்பிப்பெயரினன்
உரியவுலகமுவப்புறற்பொருட்டே

இஃது,

சென்னைத்துரைத்தனக்கல்விச்சங்கத்தில் தமிழ்ப்புலவ[ராகிய
அஷ்டாவதானம
வீராசாமிசெட்டியாரவர்களாலியற்றப்பட்டது

(நேரிசையாசிரியப்பா)

திருமலிகூடற்பெருநகர்விளங்கிய
புலம்புரிபுலவராமவலம்புரிச்சங்கமும்
காளமேகமாநீளகரிமருப்பும்
வள்ளுவரென்னுந்தெள்ளுநற்கதலியும்
சீருயரௌவையாரெனுஞ்சாலியும்
ஒட்டக்கூத்தராம்வட்டவாரிசமும்

புகழேந்தியென்னுந்திகழேந்துறுகிரியும்
உம்பர்வியந்திடுங்கம்பராங்கன்னலும்
அழிவறுபொய்யாமொழியெனும்பூகமும்
தேசுறுசிவப்பிரகாசராமதியமும்
மாசிவஞானதேசிகப்புயலும்
ஏனைப்புலவராம்பானிறவிப்பியும்
அற்புதமாகப்பற்பலவமையத்
தாங்காங்குதவியபாங்காகியதனிப்
பாடலென்னும்பீடுறுபல்வகைச்
சந்தங்கெழீஇநந்துநன்மணியின்
வர்க்கமதனைப்பொற்கம்மியன்போல்
வடுத்தவிர்ந்திடவாய்ந்தெடுத்துவிளுத்தகச்
சேர்த்தொருவடமாக்கோத்துநிரல்பட
இப்புவியோர்களிறும்பூதெய்தச்
செப்பமாகத்திரட்டியச்சிடுகென்
றரசரேறுவிரைசெய்பூந்தாரான்
இரவலர்க்கற்பகம்வரகுணமேரு
மருவலர்க்கசனிகருணைவாரிதி
பல்வளமோங்குஞ்செல்வப்புவிமகள்
இலகுமுகத்திற்றிலகமெனக்கிளற்
மேதகுராமநாதபுரம்வாழ்
சிவஞானதேவன்றவமோருருவாய்
வந்தவதரித்தமைந்தனிலத்திடை
அருங்கலையனைத்துமொருங்கினிதுணர்ந்தோன்
தென்னவன்போற்றமிழ்தன்னைவளர்ப்பவன்
பொன்னுசாமியென்னும்புரந்தரன்
நன்னயமாகச்சொன்னசொன்மேற்கொளீஇ
ஆழ்திரைப்பொன்னிசூழ்புனனாட்டினில்
மல்லலம்பழனத்தில்லையம்பூர்வரும்
இந்திரதருநிகர்சந்திரசேகரகவி
ராசபண்டிதனுலாசறத்திருந்தித்
தேமலர்ச்சோலையுந்தாமரைவாவியும்
மன்னியமணலியென்னுமாநகரோன்
சால்புறுகின்றசைவசிகாமணி
பாலியென்னுஞ்சீலமார்நல்யினன்
திவளுநல்லொளிசேர்குவளைமாலையான்
விரிபுகழ்நிலவியபெரியதம்பி
எனனப்பெயர்மருவியவனப்புறுகுணநிதி
கவிஞர்குழாங்கண்டுவகையின்வியக்கப்
பற்பலதிசையும்பரவப்
பொற்புடன்பதித்துப்புலப்படுத்தினனே

சென்னைக்கல்விச்சங்கத்து மதறசா-ஈ-ஆஜம்என்னும்பாடசாலையில்
தமிழ்ப்புலமைநடாத்தும்-கூவம்
சு-சிதம்பரமுதலியாரவர்களாலியற்றப்பட்டது.
(கழிநெடிலடி-ஆசிரியவிருத்தம்)

சொல்லையமபூரணமதியிற்றபுத்தாய்ந்துண்மை
நொடர்பெருடோர்திருக்கடவுட்பலகைச்சங்கத்
தொலைவிலபுகழ்க்கவிஞர்முதற்றமிழ்மேதக்க
சுருதிமொழித்தலைவர்பண்டுதொகுத்துச்சேர்த்த
செல்லையமபூநகத்தினியசுவையாலிக்குஞ்
செழுநகனியவெனப்பயத்தற்கிியைநூலன்றீச்
சிலசிமித்தக்துஞற்றுபலசவிதைச்செமபொன்
நிகமறைந்தக்குறைவுளிகாண்பரியதாகத்
தில்லையம்பூர்ச்சந்திரசேகரப்பேர்வாய்ந்த
தெளிதருநாவலெனுமஞ்சனங்கண்கொண்டு
தெரிந்தெடுத்தச்சினிற்பதிப்பித்தெவர்க்குங்கல்விச்
சிறுமைகெடக்களிதுலங்குந்திறந்தந்தானற்
றொல்லையமபூர்சடிலனையுண்ணெகிழ்ந்துபோற்றுந்
தூய்மையும்வாய்மையுமுடையான்ராமநாதச்
சொன்மருவுபுரன்பொன்னுசாமிமாறன்
சோலமணவிப்பதிப்பதிப்பெரியதம்பிவேளே,

இஃது-தமிழ்ப்புலவராகியகூடலூர்
இரிசப்பஉபாத்தியாயரவர்களாலியற்றப்பட்டது

கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

நற்கவிஞராங்கம்பர்காளமேகப்நவில்பொய்யாமொழியெளவை
நயந்துரைத்த, பொற்கவியைதிரட்டியச்சிற்பதிக்கவென்னைப்பொன்
னுசாமித்தேவன்மொறையான்மிக்கோன், சிற்குணன்றுள்பணியன்ப
ன்சொல்லச்சந்திரசேகரனுங்கவிராஜன்திருத்திநலக, வற்குலவுமெரி
யதார்பிமணலிவாசன்இருஞ்சிலைமேலெழுத்துப்யோலியற்றினனே,

தனிப்பாடல்களைத்திரட்டிக் கொடுக்கதிருக்காட்டுப்பள்ளி
இராமசாமிமுதலியாரவர்கள்சிறப்பு.

கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

சீர்கொண்டமணிமாடமேனிலையின்றுகிலுலவச் சிறப்பினேக்கு
ம் திருக்காட்டுப்பள்ளியெனுமெழிலூரான் செங்குவளைச்செழும் பூ
சாரன்,கார்கொண்டவேங்கடநன்மலையானேர்பாலிகதியுடையோன
ன்னன்,கடலுலகப்புகழ்ந்திநல்வேளாளர்மரபுதித் தோன்கருதுமே
லோன் வார்கொண்டமுலைமாதர்மடலூநமொழின்மாசன்மதிக்குஞ்
ரன்,வாய்மைவெரிராமசாமிக்குரிசில் ரைம்பானவருடங்காருர,வ
கொண்டவன்பிறெநிபொருள்செலவிட்டருஞ்செய்புளிதினிற்றேடி
எழுதிவைத்தபலபாட்டுப்பிரதியொன்றுதந்துபுகழீங்குற்றனே,

சாத்துகவிகள்-முற்றுப்பெற்றன.

உ

சிவமயம்.

வித்வசிரோமணியாகிய

# காளமேகப்புலவர்.

அவ்வவ்மயங்களிற்கூறிய தனிப்பாடற்றிரட்டு.



காப்பு,

வெண்பா,

ஏரானைக்காலிலுறை யென்னானைக்கன்றளித்த
போரானைக்கன்றுதனைப்போற்றினல்-வாராத
புத்திவரும்பத்திவரும்புத்திரவும்பத்திவரும்
சத்திவருஞ்சித்திவருந்தான்,



வெள்ளைக்கலையுடுத்துவெள்ளைப்பணிபூண்டு
வெள்ளைகமலத்தில்வீற்றிருப்பாள்-வெள்ளை
அரியாசனத்திலரசரோடென்னைச்
சரியாசனம்வைத்ததாய் (க)

(சிலேடைகள்)

ஆமணக்குக்கும்-யானைக்கும்

முத்திருக்கும்கொம்பசைக்குமூரித்தண்டேந்திவரும்
கொத்திருக்குநேரேகுலைசாய்க்கும்-எத்திசைக்கும்
தேமணக்குஞ்சோலைத்திருமலைராயன்வரையில்
ஆமணக்குமால்யானையாம் (உ)

வைக்கோலுக்கும்-யானைக்கும்

வாரிக்களத்தடிக்கும்வந்துபின்புகோட்டைபுகும்
போரிற்சிறந்துபொலிவாகும்-சீருற்ற
செக்கோலமேனித்திருமலைராயன்வரையில்
வைக்கோலுமால்யானையாம் (ங)

பாம்புக்கும்-வாழைப்பழத்துக்கும்

நஞ்சிருக்குந்தோலுரிக்குநாதர்முடிமேலிருக்கும்
வெஞ்சினத்திற்பற்பட்டான்மீளாது விஞ்சுமலர்த்

தேம்பாயுஞ்சோலைத்திருமலைராயன்வரையில்
பாம்பாகும்வாழைப்பழம் (ச)

பாம்புக்கும்-எள்ளுக்கு

ஆடிக்குடத்தடையுமாடும்போதேயிரையும்
மூடித்திறக்கின்முகங்காட்டும்-ஓடிமண்டை
பற்றின்பரபரெனும்பாரிற்பிண்ணாக்குமுண்டாம்
உற்றிடுபாம்பெள்ளெனவேயோது (ரு)

பிண்ணாக்கு-பிளவுள்ளநாக்கு

பாம்புக்கும்-எலுமிச்சம்பழத்துக்கும்

பெரியவிடமேசேரும்பித்தர்முடியேறும்
அரியுண்ணுமுப்புமேலாடும்-எரிகுணமாம்
தேம்பொழியுஞ்சோலைத்திருமலைராயன்வரையில்
பாம்புமெலுமிச்சம்பழம்(அரி-காற்று-அரிபடல்) (சு)

முகுந்தனுக்கும்-முறத்துக்கும்

வல்லரியாயுற்றிடலான்மாதர்கையில்பற்றிடலான்
சொல்லரியமாப்புடைக்கத்தோன்றுதலால்-வல்லோர்
அகந்தனிலேவாழ்தலாலன்றுலகளந்த
முகுந்தனுமேயாகும்முறம் (எ)

சந்திரனுக்கும்-மலைக்கும்

நிலவாய்விளங்குதலானீள்வான்படிந்து
சிலபோதுலாவுதலாற்சென்று-தலைமேல்
உதித்துவரலாலுயர்மாமலையை
மதிக்குநிகராகவழுத்து (அ)

நாய்க்குந்-தேங்காய்க்கும்

ஓடுமிருக்குமதனுள்வாய்வெளுத்திருக்கும்
நாடுங்குலைதனக்குநாணாது-சேடியே
தீங்கானதில்லாத்திருமலைராயன்வரையில்
தேங்காயுநாயுமெனச்செப்பு (கூ)

மீனுக்கும்-பேனுக்கும்

மன்னீரிலேபிறக்குமற்றலையிலேமேயும்
பின்னீச்சிற்குத்தும்பெருமையால்-சென்னேன்கேள்
தேனுற்றுசோலைத்திருமலைராயன்வரையில்
மீனும்பேனுஞ்சரியாமே (ய)

பனைமரத்துக்கும் வேசைக்கும்

கட்டித்தழுவுதலாற்கால்சேறவேறுதலால்
எட்டிப்பன்னாடையிழுத்தலால்-முட்டப்போய்
ஆசைவாய்க்கள்ளையருந்துதலாலப்பனையும்
வேசையெனலாமேவிரைந்து. (௰

வெற்றிலைக்கும்-வேசைக்கும்

கொள்ளுகையானீரிற்குளிக்கையான்மேலேறிக்
கிள்ளுகையாற்கட்டிக்கிடக்கையால்-தெள்ளுபுகழ்ச்
செற்றலரைவென்றதிருமலைராயன்வரையில்
வெற்றிலையும்வேசையாமே, (௰௨)

கண்ணாடிக்கும்-அரசனுக்கும்

யாவருக்கும்ரஞ்சனைசெய்தியாவருக்குமவ்வவராய்ப்
பாவனையாப்திதகலப்பார்த்தலால்-மேவும்
எதிரியைத்தன்னுள்ளாக்கியேற்றரசத்தால்
சதிருறலாலாடியரசாம். (௰௩)

கூத்தியாருக்கும்-குரங்குக்கும்

ஓட்டங்கடியதாலுள்ளவரைமேவுதலால்
சேட்டையெவரிடத்துஞ்செய்தலால்-நாட்டமுடன்
காத்திரத்திற்குட்டியுறக்கட்டுதலாற்றெட்டுதலால
கூத்தியர்க்குநேராங்குரங்கு. (ஒட்டம்-உதடு) (௰௪)

குதிரைக்கும்-காவிரியாற்றுக்கும்,

ஓடுஞ்சுழிசுத்தமுண்டாகுந்துன்னலரைச்
சாடும்பரிவாய்த்தலைசாயக்கும்-நாடறியத்
தேடுபுகழான்றிருமலைராயன்வரையில்
ஆடுபரிகாவிரியாமே, (துன்னலர்-பகைவர்-மலர்) (௰௫)

கீரைபாத்திக்கும்-குதிரைக்கும்

கட்டியடிக்கையார்கான்மாறிப்பாய்கையால்
மெட்டிமறிக்கின்றமேன்மையால்-முட்டப்போய்
மாறத்திரும்புகையால்வண்கீரைப்பாத்தியுடன்
ஏறப்பரியாகுமே. (௰௬)

கதவுக்கும்-ஆட்டுக்கும்

செய்யுட்கிடைமறிக்குஞ்சேர்பலகையிட்டுமுட்டும்
ஐயமறமேற்றாளடர்க்குமே-துய்யமிலை

தேடும்புகழ்சேர்திருமலைராயன்வரையில்
ஆடுங்கதவுநிகராம். (௰எ)

குதிரைக்கும்-ஆட்டுக்கும்

கொம்பிலேயேதினிதின் றுங்கொண்டதன்மேல்வெட்டுதலால்
அம்புவியினன்னடையதர்தலால்உம்பர்களும்
தேடுநற்சோலைசதிருமலைராயன்வரையில்
ஆடுங்குதிரையுநேராம். (௰அ)

துப்பாககிக்கும் ஓலைச்சுருக்குக்கும்

ஆணிவரையுமவாலானகுறிப்பேதரலால்
தோணக்கருப ருந்தைத்தோய்ந்திடலால்-நீணிலத்தில்
செப்பார்க்குதவாத்திருமலைராயன்வரையில்
துப்பாக்கியோலைச்சுருள் (௰கூ)

வானவில்லுவுக்கும்-விஷ்ணுவுக்கும்-வெற்றிலைக்கும்

நீரிலுளவானிறம்பச்சையாற்றிருவால்
பாரிற்பகைதீர்க்கும்பான்மையால்-சாருமனுப்
பல்வினையைமாற்றுதலாறபாரீர்பெருவான்
வில்விண்டுநேர்வெற்றிலே. (பல்வினை-பலநோய்-தந்தரோகம்) (உ0)

பூசுணிக்காய்க்கும்-பரமசிவனுக்கும்

அடிநந்திசேர்தலாலாகம்வெளுத்துக்
கொடியுமொருபக்கத்திறகொண்டு வடிவுடைய
மாசுணத்தைப்பூண்டுவளைத்தழும்புபெற்றதனால்
பூசுணிககாயீசனெனப்போற்று, (நந்தி-காம்பு) (உக)

ஓடத்துக்கும்-நிதம்பத்துக்கும்,

பலகையிடுமுள்ளேபருமாணிதைக்கும்
சலமிறைக்குமாளேரித்தள்ளும்-வுலகரிய
ஓடமுமொன்றேயுலகநாதன்பெண்டீர்
மாடமுமொன்றேற்றமயிர். (உஉ)

கரண்டகற்றுக்கும்-பெண்குறிக்கும்

இட்டிட்டுவாங்குதலாலின்பவெள்ளைத்தோன்றுதலால்
மட்டிட்டுமூடிமறைக்கையால்-மூட்டத்
தெருண்டோர்கள்போற்றுந்திருமலைராயன்சீர்க்
கரண்டகமும்பெண்குறியுங்காண் (உங)

அரகரதிருச்சிற்றம்பலவாணுவங்
தாரூபம்கேச்சிதம்-பரதே

வசிதம்பரதேவசிதம்பரதே
வசிதம்பரதேனே (௨௪)

இங்கோதிலச்றுதல்ராமராமாவனசக்
கொங்தோகளபமூலேகோவிந்தா-சந்ததமும்
வேலே, விணைவிழிகள்வேங்கடவாநல்லவயி
ருலோகாணாராயணா (௨௫)

ஒன்றிரண்டுமூன்றுநான்கைந்தாறுவேழெட்டு
ஒன்பதுபத்துப்பதினொன்று-பன்னி
ரண்டுபதின்மூன்றுபதினான்குபதினைந்துபதி
னாறுபதினேழ்பதினெட்டு (௨௬)

ரு-டு-வரப்பாடியது.

ஓ, கா, மா, வீ, தோ, வுரைப்பன் டு, டு, டு, டு, டு,
நாகார்குடந்தைநகர்க்கதிபர்-வாகாய்
எடுப்பர்கடமிடுவரேறுவரன்பர்க்குங்
கொடுப்பாரணிவர்குழைக்கு (௨௭)

எடுப்பர்-ஓடு, நடமிடுவர்-காடு, ஏறுவர்-மாடு, அன்பர்க்குக்கொடுப்பர் வீடு, குழைக்கணிவர்-தோடு,

குடத்திலேகங்கையடங்குமெனப்பாடியது,

விண்ணுக்கடங்காமல்வெற்புக்கடங்காமல்
மண்ணுக்கடங்காமல்வந்தாலும்-பெண்ணை
இடத்திலேவைத்தவிறைவர்சடாம
குடத்திலேகங்கையடக்கும் (௨௮)

பச்சைவடம்-பாகு-சேலே-சோமன்-என்றுபாடியது

மாயன்றுயின்றதுவுமாமலரால்சொல்லதுவும்
ஏயகுருந்திற்கொண்டேறியதும-தூயை
இடப்பாகன்சென்னியின்மேலேறியதும்பச்சை
வடப்பாகுசேலேசோமன் (௨௯)

மாயன்றுயின்றதுபச்சைவடம்-மாமலராள்சொல் பாகுகுருந்திற்கொண்டேறியது சேலேபாமசிவன்சிரசின்மேலேறியது சோமன் பச்சைவடம் ஆலிலே

கின்னரிவாசிக்குங்கிளியெனப்பாடியது.

ஆடல்புரிந்தானென்றுமங்நாளிலேமூவர்
பாடலுகந்தானென்றும்யான்மையினல்-கூடலிலே

நன்னரிவாசிக்குநடைப்பயிற்றினென்றும்
இன்னரிவாசிக்குங்கிளி (௧௰)

பொன்னுவரையிலைகாய்பூவென்றுபாடியது

உடுத்ததுவுமேய்த்ததுவுமும்பர்கோன்றன்னால்
எடுத்ததுவும்பள்ளிககிரையப்-படுத்ததுவும்
அந்நாளெறிந்ததுவுமன்பினிரந்ததுவும்
பொன்,னு,வரை,யிலை,காய்,பூ, (௧௧)

தோய்ந்தான்மேய்த்தான்குடையாத்தூக்கினான்
சாய்ந்தாளெறிந்தான்பின்சாப்பிட்டான்-ஆய்ந்துசொலும்
மன்னுவரத்தில்வருமால்சாமிநாதாகேள்
பொன்னுவரையிலைகாய்பூ (௧௨)

செங்கழுநீர்க்கிழங்கென்றுபாடியது

வாதமணரேறியதுமாயன்றுயின்றதுவும்
ஆதிதடுததாட்கொண்டவவ்வுருவம்-சீதரனார்
தாள்கொண்டளந்ததுவுந்தண்கச்சிக்காவலா
கேள்செழுங்கழுநீர்க்கிழங்கு (௧௩)

அமணரேறியது-செங்கழு-மாயன்றுயின்றது.நீர் - ஆதிதடுத்தா
ண்டவுரு-கிழம்-தாள்கொண்டளந்தது-கு(பூ-மி)

நாநீநூநேயென்றுபாடியது

அரையின்முடியிலணிமார்பில்நெஞ்சில்
தெரிவையிடத்தமர்ந்தான்சேவை-புரையறவே
மானார்விழியீர்,ம,ல,ர,ண,வொற்றிற்குற்கும்
ஆனலா,நா,நீ,நூ,நே. (௧௪)

நேம்-நெஞ்சில்-நூல்-மார்பில்-நீர்-முடியில்-நாண். அரையில்-நே
அன்பு-நேமெனமருவியது

ஈயேறமலைகுலுங்கப்பாடியது.

வாரணங்களெட்டுமகமேருவுங்கடலும்
தாரணியுமெல்லாஞ்சலித்தனவால்-நாரணனைப்
பண்வாயிடைச்சிபருமத்தினலடித்த
புண்வாயிலீமொய்த்தபோது (௧௫)

கடுங்காற்றுமழைகாட்டும்- கடுநட்புப்பகைகாட்டுமெனப்பாடியது

நீரேபிறவாநெறிகாட்டியாரெமக்கு
நீரோசமுசைநிலையிட்டீர்-நீரேயிவ்
விங்களமேன்செய்தீரவிடுங்கடுங்காற்றும்மழைகாட்
டுங்கடுநட்புப்பகைகாட்டும். (௧௬)

விநாயகர்·முருகர்-பரமசிவனுக்குச்சிலேடை.

சென்னிமுகமாறுளதாற்சேர்கரமுன்னாலுகையால்
இன்னிலத்திற்கோடென்றிருக்கையால்-மன்னுகுலக்
கண்ணுறுதலானுங்கணபதியுஞ்செவ்வேளும்
எண்ணரனுநேராவரே. (௧௭)

நாலுகை-தொங்குங்கைகுளம்-வெல்லம்-நெற்றி

மும்மூர்த்திகளின் உணவுமுதலியன

சிறுவனளாவயறுசெந்நெற்கடுகு
மறிதிகிரிதண்டுமணிநூற்பொறியரவம்
வெற்றேறுபுள்ளன்னம்வேதனரன்மாலுக்குக்
கற்றூழம்பூவேகறி(கல்-மலை-தாழம்-ஆழமானநீர்- (௧௮)

இராசியைஅடைசொல்லில்லாமற்பாடியது

பகருங்கான்மேடமிடமம்மிதுனங்கர்க்க
டகஞ்சிங்கங்கன்னிதுலால்விர்ச-சிகந்த
நுசுமகரங்கும்பமீனம்மன்னிரண்டும்
வசையறுமிராசிவளம். (௧௯)

தை-மாசி-பங்குனி-மாதமென்றுபாடியது

பாணர்க்குச்சொல்லுவதும்மைம்புன்னைமூடுவதும்
தானுவுரித்ததுவுஞ்சக்கரத்தோன்·ஊணதுவும்
எம்மானையேத்துவதுமீசனிடத்துஞ்சிரத்தும்
தைமாசிபங்குனிமாதம். (௨௰)

பாணர்க்குச்சொல்லுவது-தை- மைம்புனலைமூடுவது· மாசு- தா
னுவுரித்தது-இபம்-சக்கரத்தோனூண்-எம்மானை-யேத்துவது,உணி
ஈசனிடத்து-மாது-சிறத்து-அம்-உன்னி-உணியென்றாயிற்று

ஞானசபைகனசபையிற்றம்பலம்மே
ரானந்தக்கூடந்திருமூலட்-டானம்பே
ரம்பலம்பஞ்சாவரணகாற்கோபுரம்பொற்
கம்பமண்டபஞ்சிவகங்கை (௨௧)

சங்குதீர்த்தந்திருச்சாளரவாயில்வீர
சிங்காசனந்திருவந்திக்காப்பு-பங்குனிமா
தத்திருநாடீர்த்தனதிருவிளைதன்கோயில்
உத்தரபாகந்திருவாரூர். (௪௨)

அப்பாகுமரகோட்டக்கீரைசெவிலிமேட்
டுப்பாகற்காய்பருத்திக்குழிநீர்-செப்புவா
சற்காற்றுக்கம்பத்தடியிற்றவங்கரும
திப்பாய்ச்சல்யார்க்குமினிது, (௪௩)

பாதிவெண்பாவில் மாலவதாரஞ்சொன்னது.

மெச்சுபுகழ்வேங்கட்வர்வெண்மாவிற்பாதியிலைன்
இச்சையிலுன்சென்மமெடுக்கவா-மச்சாகூர்
மாகோலாசிங்காவாமாராமாராமாரா
மாகோபாலாமாவாவாய் (௪௪)

திருக்குடந்தையாதிகும்பேசர்சேந்தா
மரைக்குளங்கங்கைமகங்கா-விரிக்கரையின்
ஓரங்கீழ்க்கோட்டங்காரோணமங்கைநாயகியார்
சாரங்கபாணிதலம் (௪௫)

மன்னென்றெடுத்துமலுக்கென்றுமுடித்தது

மன்னுதிருவண்ணமலைச்சம்பந்தாண்டார்க்குப்
பன்னுந்தலைச்சவரம்பண்ணுவதேன்-மின்னின்
இளைத்தவிடைமாதரிவன்குடுமிபற்றி
வளைத்திழுத்துக்குட்டாமலுக்கு (௪௬)

சோகாமா-ஏவாதாவென்றுபாடியது

சோ கா,மா,ஏ,வா,தா,சொல்லின்மனைக்கூட்டியுமை
பாகார்ந்ததில்லைப்பரமேசர்-வாகாய்த்
தரித்தாரெரித்தார்கறித்தாருதைத்தார்
உரித்தார்கணைபடைத்தாரூர்க்கு (௪௭)

சோமன்-காமன்-மாமன் ஏமன்(வாமன்-தாமன்-வாமன் - கொட்
டைப்பாக்கென்றெடுத்துக்களிப்பாக்கென்றுமுடித்தது.

கொட்டைப்பாக்கும்கொருகண்கூடையைப்பார்க்கும்மடியில்
பிட்டைப்பாக்கும்பாகம்பெண்பாக்கும்-முட்டநெஞ்சே
ஆரணனுநாரணனுமாதிமறையுந்தேடும்
காரணனைக்கண்டுகளிப்பாக்கு (௪௮)

பார்க்குமென்பது-பாக்குமெனமருவியது.

செருப்பென்றெடுத்து விளக்குமாறென்றுமுடித்தது

செருப்புக்குவீரர்களைச்சென்றுழக்குமவேலன்
பொருப்புக்குநாயகனைப்புல்ல-மருப்புக்குத்
தண்டேன்பொழிந்ததிருத்தாமரைமேல்வீற்றிருக்கும்
வண்டேவிளக்குமாறே(விளக்குமாறு-விளக்கும்வழி) (சசு)

கரியென்றெடுத்து உமியென்றுமுடித்தது

கரியதனையேயுத்தகையாவளையேந்
தரியயற்குமெட்டாதவையா-பரிவாக
அண்டரெல்லாங்கூடியமுதங்கடைந்தபொழு
துண்டநஞ்சையிங்கே யுமி (ருO)

கரிக்காய்பொரித்தாள்-கன்னிக்காயைத்தீர்த்தாள்
பரிக்காயைப்பச்சடியாய்பண்ணுள்-உருக்கமுள்ள
அப்பக்காய்நெய்துவட்டலாக்கினுளத்தைமகள்
உப்புக்காண்சீசீ யுமி (ருக)

கூதிக்கெட்டேழுங்குலைந்துநடுங்கிப்
பூதிக்கொப்பாகவென்றேபோய்விடுமே-ஆதி
நரக்காட்டகவரியைகற்சாபமாகிச்
சுருக்காவிடினஞ் சுணி (ருஉ)

சித்துப்பூத்தென்றுபாடியது.

அப்பூருஞ்செஞ்சடைமே லம்புலியைப்பார்த்துப்பார்த்
தெப்போதுஞ்சீத்துப்பூத் தென்னவே முப்போதும்
வாலங்காட்டாநிற்கும் வாயங்காக்காநிற்கும்
ஆலங்காட்டான்பூ ணரா (ருஙு)

பாற்கடலிற் செந்துளெழும்பப்பாடியது,

சுத்தபாற்கடலினடுவினிற்றாளிதோன்றியவதிசயமதுகேள் மத்தசுக்கரியையுரித்தவன்மீதுமதன்பொருகருந்திடமாற்றம், வித்தககமலைசெவியுறகேட்டாள்விழுந்துநொந்தயர்ந்தழுதேங்கிக், கைத்தலமலரான்மார்புறப்புடைத்தாளெழுந்ததுகலவையுஞ்செந்துள (ருச)

தடக்கடலிற்பள்ளிக்கொள்வோமகனைநற்சங்கரனார்
அடற்புலிக்குட்டிக்களித்தனராமலுகேட்டுநெஞ்சில்
நடுக்கம்வந்துற்றதுகை காலெழாநளினத்தியெனனை
இடுக்கடிபாயைச்சுருட்டியேகடியம்பலத்தே (ருரு)

செற்றலரைவென்ற திருமலேராயன்கரத்தில்
வெற்றிபுரியும்வாளே வீரவாள்-மற்றயவாள்
போவான்வருவாள் புகுவாள்புறப்படுவாள்
ஆவாளிவளாவா ளாம் (௫௬)

தெருமுட்டப்பாளை சிதறிவளர்பூகத்
திருமுட்டச்செவ்வாளை தாவும்-திருமுட்டத்
தூரிலேகண்டே னொருபுதுமைபன்றிக்கு
மூரிலேகொம்பான வாறு (௫எ)

நாலாநாலாயிரநா னூற்றுநாற்பத்தொன்பான்
மாலாநாநூற்றுநாற்பத் தொன்பான்-மேலாநாற்
பத்தொன்பான்சங்க மறுபத்துநாலாடலுக்கும்
கர்த்தன்மதுரையிற் சொக்கன் (௫அ)

இம்மென்னுமுன்னே யெழுநூறுமெண்ணூறும்
அம்மென்றாலாயிரம்பாட்டாகாதே-சும்மா
இருந்தாலிருந்தே னெழுந்தேனேயாயின்
பெருங்காளமேகம் பிளாய் (௫௯)

குரங்கனலில்வீழ்ந்து வெறிகொண்டுதேள்கொட்டக்
கரஞ்செறியப்பாம்பலவன் கவ்வ-விரைந்துபோய்
பற்றவேகள்ளுண்டு பச்சைமிளகைக்கடித்தால்
எத்தனைபார்சேட்டைக்கிடம் (௬0)

நீறுவாய்நெற்றி நெருப்பாவாயங்கமிரு
கூறுவாய்மேனி கொளுந்துவாய்மாறாத
கட்டமாலாய்சோறு நஞ்சாவாய்நாயேனை
இட்டமாய்க்காப்பா யினி (௬௧)

கருக்கவிழ்நதமுன்குடுமிச் சோழியாசோற்றுப்
பொருக்குலர்தவாயா புலையா-திருக்குடந்தைக்
கோட்டானேநாயே குரங்கேயுனையொருத்தி
போட்டாளேவேலையற்றுப்போய் (௬௨)

பெருமாளுநல்லபெருமாளவர்தந்
திருநாளுநல்ல திருநாள்-பெருமாள்
இருந்திடத்திற்சும்மா யிராமையினாலேயோ
பருந்தெடுத்துப்போகிறதேபார் (௬௩)

வாலெங்கேநீண்ட வயிறெங்கேமுன்னிரண்டு
காலெங்கேயுட்குழிந்த கண்ணெங்கே-சாலப்
புவிராயர்போற்றும் புலவீர்காணீவிர்
கவிராயரென்றிருந்தக் கால் (௧௪)

நச்சரவம்பூண்டதில்லை நாதரேதேவரீர்
பிச்சையெடுத்துண்ணப் புறப்பட்டும்-உச்சிதமாம்
காளமேன்குஞ்சரமேன்-கார்க்கடல்போற்றான்முழங்கும்
மேளமேன்ராஜாங்கமேன் (௧௫)

கத்துகடல்சூழ்நாகைக் காத்தான்றன்சத்திரத்தில்
அத்தமிக்கும்போதி லரிசிவரும்-குத்தி
உலையிலிட வூரடங்கு மோரகப்பையன்னம்
இலையிலிடவெள்ளி யெழும் (௧௬)

இஃது-துதியும்-வசையும்

மாயனார்போற்று மதுராபுரிச்சொக்க
நாயனார்பித்தேறினா ரென்றே-நேயமாங்
கன்னன்மொழியங்கயற்கட் காரிகையாளையையோ
அன்னமிறங்காமலிருந் தாள் (௧௭)

எட்டொருமாவெண்காணி மீதேயிருந்தகலை
யட்டொருமாநான்மாவிற் பாய்ந்தே-சிட்டந்தொழுந்
தேவாதிதேவன் றிருவொற்றியூருடையான்
மாவேறிவீதிவரக்கண்டு (௧௮)

மூப்பான்மழுவும் முராரிதிருச்சக்கரமும்
பார்ப்பான்கதையும் பரிபோச்சே-மாப்பார்
வலிமிகுத்தமும்மதத்து வாரணத்தையையோ
எலியிழுத்துப்போகின்ற தென் (௧௯)

முக்காலுக்கேகாமுன் முன்னரையில்வீழாமுன்
அக்காலரைக்கால்கண் டஞ்சாமுன்-விக்கி
இருமாமுன்மாகாணிக் கேகாமுன்கச்சி
ஒருமாவின்கீழரையின் றோது (௨௰)

வண்ணங்கரியனென்றும் வாய்வேதநாறியென்றுங்
கண்ணனிவனென்றுங் கருதாமன்-மண்ணை
அடிப்பதுமத்தாலே யளந்தானையாய்ச்சி
அடிப்பதுமத்தாலே யழ (௨௧)

காலனையுங்காமனையுங் காட்டுசிறுத்தொண்டர்தரு
பாலனையுங்கொன்ற பழிபோமோ-சேலமூட
னாட்டிலேவீற்றிருந்த நாதரேநீர்திருச்செங்
காட்டிலேவீற்றிருக் கால் (௭௨)

நானக்கியாறுகால் புள்ளினத்துக்கொன்பதுகால்
ஆனைக்குக்கால்பதினே ழானதே-மானேகேள்
முண்டகத்தின்மீது முழுநீலம்பூத்ததுண்டு
கண்டதுண்டுகேட்டதில்லை காண் (௭௩)

அப்பனிரந்துண்ணி யாத்தாண் மலைநீலி
ஒப்பரியாம னுறிதிருடி-சப்பைக்கால்
அண்ணன்பெருவயிற் றாறுமுகத்தானுக்கிங்
கெண்ணும்பெருமை யிவை (௭௪)

கூத்தாள்விழிகணெடுங் கூர்வேலாங்கூத்தாள்தன்
மூத்தாள்விழிகண் முழுநீளம்-மூத்தாள்தன்
ஆத்தாள்விழிக ளரவிந்தமாத்தாள்தன்
ஆத்தாள்விழிகளிரண்டம்பு (௭௫)

என்னைக்கெடுத்தா லிரக்கமுனக்குண்டாமோ
வன்னக்கமலமுகவல்லியே-துன்னுமதக்
காட்டானைகோட்டுமுலைக் காரிகையேநீபயந்த
கோட்டானைத்தானே கொடு (௭௬)

முன்னேகடிவாள மூன்றுபேர்தொட்டிழுக்கப்
பின்னேயிருந்திரண்டு பேர்தள்ள-எந்நேரம்
வேகம்போம்வாயான் விகடராமன்குதிரை
மாதம்போங்காத வழி (௭௭)

ஆறும்பதினாறு மாமூரில்வேங்கட்டன்
ஏறும்பரிமாவே யேற்றமா-வேறுமா
எந்தமாசும்மா வெறுமாகளிகிளற
வந்தமாசந்தமா மா (௭௮)

ஆடாரோபின்னிபவ ரன்பரெலாம்பார்த்திருக்க
நீடாரூர்வீதியிலே நின்றுதான்-தோடாரும்
மெய்க்கேபரிமளங்கள் வீசுந்தியாகேசர்
கைக்கேபணமிருந்தக் கால் (௭௯)

வள்ளலெனுமபெரிய மாயூரநாதருக்கு
வெள்ளிமலைபொன்மலையு மேயிருக்கத்-தெள்ளுமையாள்
அஞ்சலஞ்சலென்றுதின மாண்டையிலேதானிருக்க
நஞ்சுதனையேனருந்தி னார் (௮௰)

நல்லதொருபுதுமை நாட்டிற்கண்டேனதனைச்
சொல்லவாசொல்லவா சொல்லவா-தொல்லை
மதுரைவிக்கினேச்சுரனை மாதுமையாளபெற்றாள்
குதிரைவிற்கவந்தவனைக் கூடி (௮௧)

வெள்ளையானையேறும் விமலாடிபணியும்
பிள்ளையார்வாழும் பெருந்தெருவில்-வள்ளை
இலைக்கறிவிற்பாண்மருங்கு விற்றுவிடுமென்று
மூலைக்கறிவிப்பாரிலையே முன் (௮௨)

சட்டியிலேபாதியந்தச் சட்டுவத்திலேபாதி
இட்டகலத்திற்பாதி யிட்டிருக்கத்-திட்டமுடன்
ஆடிவந்தசோமேச ரன்றழைத்தபோதுபிள்ளை
ஓடிவந்ததெவ்வா றுரை (௮௩)

நேற்றிராவங்கொருவ னித்திரையிற்கைப்பிடித்தான்
வேற்றூரானென்று விடாயென்றேன்-ஆற்றியே
கஞ்சிகுடியென்றான் களித்தின்றுபோவென்றேன்
வஞ்சியரேசென்றான் மறைந்து (௮௪)

கண்டீரோபெண்காள் கடம்பவனத்தீசனார்
பெண்டீர்தமைச்சுமந்த பித்தனார்-எண்டிசைக்கும்
மிக்கானதங்கைக்கு மேலேநெருப்பையிட்டார்
அக்காளையேறினா ராம் (௮௫)

மாட்டுக்கோன்றங்கை மதுரைவிட்டுத்தில்லைநகர்
ஆட்டுக்கோனுக்குப்பெண் டாயினாள்-கேட்டிலையோ
குட்டிமறிக்கவொரு கோட்டானையும்பெற்றாள்
கட்டிமணிச்சிற்றிடைச்சி தான் (௮௬)

நாட்டுக்குளாட்டிக்கு நாலுகாலையாநின்
ஆட்டுக்கிரண்டுகா லானாலும்-நாட்டமுள்ள
சீமெய்தில்லைச்சிவனேயிவ்வாட்டைவிட்டுப்
போமோசொல்லாயப் புலி (௮௭)

தாண்டி யொருத்தி தலையின்மேலேருனோ
பூண்டசெருப்பாலொருவன் போடானோ-மீண்டொருவர்
வையானோ வின்றுமிய மாட்டானோ தென்புலியூர்
ஐயா நீ யேழையானால் (௮௮)

கொங்குலவுந்தென்றில்லைக் கோவிந்தக்கோனிருக்கக்
கங்குல்பகலண்டாயலர் காத்திருக்கச்-செங்கையிலே
ஓடெடுத்தவம்பலவா வோங்குதில்லையுட்புகுந்தே
ஆடெடுத்தெந்த வுபாயம் (௮௯)

ஆடுநெகியாகரே யாட்டமென்றுனுமக்கு
வீடுஞ்சமுசார மேலிட்டுக்-கூடிச்
செறுக்கிவிளையாடச் சிறுவரிரண்டாச்சே
இருக்குழுறொற்றியாச்சே (௯௰)

திங்கணுதலார்திரு மனம்போலேசீறிப்
பொங்குகடலுப்பைப் புசட்டிபே-எங்களிடே
ஆர்சாளுக்கூறுகா யாகாமலாறுககாக்
காயச்சாய்வடுகமாங் காய் (௯௧)

அம்பேந்துங்கையானவன்பதியிலம்மாவைக்
கொம்பேந்திதந்தைபணி கொண்டதோ
அரிந்தமகவை யமுதுக்கழைமென்
றிருந்தவன்றன்செங்காட்டிலே (௯௨)

அம்பேந்துகையான் அகத்தியன் கொம்பேந்திதந்தை பரமசி
வன்ஐம்மாகால்(கால்-காற்று)

முற்றாதகாஞ்சியினு முல்லையினும்பாலையினுங்
கபாலன்பின்சென்ற கருணைமால-பெற்றமகன்
ஆலைப்பதித்தா ரகளத்தியாட்கயனார்
வேலைப்பதித்தார்விழி (௯௩)

கஞ்சாவுகையுங் களிற்றானையின்கொப்பும்
அஞ்சுவுலைநாலுவுலை யனதுவும்-மிஞ்சுபுகழ்
பெற்றான்றமைமாலை பிரார்க்களித்ததுங்குழலை
கற்றான்பிறந்த பிணைபு (௯௪)

தங்கைபிறந்திறவாத் தன்மையினாற்றன்மாமன்
வந்துபிறந்திறக்கும் வண்மையினால்-முன்டொருநாள்

வீணிக்குலேயோ யெரித்தான்மகன்மாமன்
காணிக்குவந்திருந்தான் காண் (கரு)

தாதிதூதோதீதுதத்தைதூதோதாது
தூகிதூதொத்திதத் தூதகே-தாதொத்த
துத்திதத்தாதேது தித்தித்தெத்தோத்தீது
தித்தித்ததோதித் திதி (கசு)

முந்நான்கிலொன்றுடையான் முந்நான்கிலொன்றெடுத்து
முந்நான்கிலொன்றின்மேன் மோதினன்-முந்நான்கில்
ஒன்றறிந்தாலாகுமோ ஒழுமடமயிலே
அன்றணைந்தான்வாரா விட்டால் (கஎ)

ஆனைிலேயே யயனுந்திருமாலும்
காணரடிமுடிமுன் காண்பதற்கு-மேனாள்
இரவுதிருவாரூரி லெந்தைபிரான்சென்ற
பரவைதிருவாயிற் படி (கஅ)

சங்கரர்க்குமாறுதலை சண்முகர்க்குமாறுதலை
ஐங்கரற்குமாறுதலை யானதே-சங்கைப்
பிடித்தோர்க்குமாறுதலை பித்தர்கின்பாதம்
படித்தோர்க்குமாறுதலை பார் (கக)

வாதக்காலாந்தமக்கு மைத்துனற்குநீரிழிவாம்
போதப்பெருவயிறும் புத்திரனுக்-கோதக்கேள்
வந்தவினை தீர்க்க வகையறியார்வேளூரார்
எந்தவினைதீர்த்தா ரிவர் (ஙா)

சீரங்கத்தாருந் திருவானைக்காவரும்
பேரங்கமாகப் பொருவதேன்ஓங்கள்
வேண்டாமிதென்ன விபரந்தெரியாதோ
ஆண்டானுந்தாதனு மானல் (ஙக)

உத்திரத்துக்கோர்நா ளுரோகணிக்குப்பத்தாநாள்
சித்திரைக்குநேரே சிறந்தநாள்-எத்திசையும்
காராரும்பூஞ்சோலைக் கன்னபுரம்வாழ்சவரி
நாராயணனபிறந்த நாள் (ஙஉ)

சிறித்துப்புரமெரித்தான் சிந்துரத்தைப்பற்றி
உரித்துதிரம்பாய வுடுத்தான்-வருத்தமுடன்

வாடும்டியாருடனே வானவருந்தானவரும்
ஓடிபயந்தீர்த்தநஞ் சுண்ணி (௰௩

ஆலங்குடியானை யாலாலமுண்டானை
ஆலங்குடியானென் றூர்சொன்னார்-ஆலங்
குடியானேயாயிற் குவலயத்தோரெல்லாம்
மடியாரோமண் மீதிலே (௰௪)

காவலனெங்கள் கனவைப்பாஞ்சோளேசன்
மாவலிகக்கை மணவாரி-ஆவனசென்
றப்புளங்கைதோய்க்க வதிலவாரியமுதத்தைக்
கொப்புளமென்றூறுங் குரங்கு (௰௫)

பொன்னஞ்சடையருகம் புல்லுக்குப் பூம்புணற்கும்
தஞ்னெசுவகையுந் தாவுமே-அன்னங்கள்
செய்க்கமலத்துற்றுலவுந்-தில்லைநடராஜன்
கைக்கமலத்துற்றமான் கன்று (௰௬)

ஏய்ந்தகனங்களிகண்டுமிருபாகற்காய்
வாய்ந்தவிடைசெக்குலக்கை மாத்திரமே-தோய்ந்தகுழல்
மூக்கலச்சிகும்பிக்கு மூதேவியாள்கமலலைக்
குக்கலுச்சிக்குங்கலைச் சிக்கு (௰௭)

நஞ்சுகுடிகொண்டகணை நாலுந்தெரிந்துமதன்
இஞ்சிகுடிதன்னிலும்வந் தெய்வானே-விஞ்சு
மூலைச்சிகரத்தாலமூத்தி முத்தமிட்டுச்சற்றே
கலைச்சிகரத்தாலணைத்தக் கால் (௰௮)

தீத்தானுன் கண்ணிலேதீத்தானுன்கையிலே
தீத்தானுமுன்றன் சிரிப்பிலே-தீத்தானுன்
மெய்யெலாம்புள்ளிருக்கும் வேளூராவுன்னையிந்தத்
தையலாலெப்படிச் சேர்ந்தாள் (௰௯)

வெண்ணெய்திருடியுண்ட வேணியானூரிருக்கக்
கண்ணன்மேல்வைத்த களவேது-வெண்ணைத்
தலையிற்சுமந்தான்மால் சர்ப்பத்திலேறி
அலையிற்றுயின்றா னரன் (௨௰)

எட்டிகுளத்தி லிருந்துசரக்குவிற்கும்
குட்டிசெட்டிதன்மகளைக் கொண்டுபோய்-நொட்டுதெற்கே

ஆயிரம்யானை யெழுநூறுகூன்பகடு
பாயும்பகடெண்பத் தைந்து (௱௰௧)

தண்டாங்கூர்மாசனங்காள் சற்குணரென்றிருந்தேன்
பண்டங்குறையவிற்றபாவிகாள்-பெண்டுகளைத்
தேடியுண்ணவிட்டவூர்தெருக்கள்தெருக்கடோறும்
ஆடிமுதலானி வரைக்கும் (௱௰௨)

நாராயணனைநாராயண னென்றேகம்பனை
ஓராமற்சொன்னவுறுதியால்-நேராக
வாரென்றால்வாரென்பேன் வாளென்றால்வள்ளென்பேன்
நாரென்றானாரெனபேன் நான் (௱௰௩)

வாழ்த்ததிருநாகை வாகானதேவடியாள்
யாழ்த்தகுரலெடுத்துப் பாடினாள்-நேற்றுக்
கழுதைகட்டவண்ணான் கண்டேன்கண்டேனென்று
பழுதையெடுத்தோடிவந்தான் பார் (௱௰௪)

காலையிலும்வேலை கடையக்கயிறாகும்
மாலையிலும்பூமுடித்து வாழுமே-சோலைசெறி
செய்யிலாரம்பயிலுஞ் செந்துருத்திமாநகர்வாழ்
பொய்யில்லாமெய்யரிடும் பூண் (௱௰௫)

மண்டலத்திலுளும் வயித்தியராய்த்தாமிருந்தும்
கண்டவினைதீர்க்கின்றார் கண்டீரோ-தொண்டர்
விருந்தைப்பார்த்துண்டருளும் வேளூரென்னூதா
மருந்தைப்பார்த்தாற்சுத்த மண் (௱௰௬)

கூடல்புனைவாயல் குற்றாலமாப்பனூர்
ஏவகநெல்வேலி-யிராமேசம-ஆடானை
தென்பரங்குன்றஞ்சுழியல் தென்றிருப்புத்தூர்காசி
வன்கொடுங்குன்றம் பூவணம் (௱௰௭)

பண்புளருக்கோபறவை பாபத்திற்கோரிலக்கம்
நண்பிலரைக்கண்டக்கானற்காலி-தின்புவிளைய
ஆள்வார்மதுரையழகிய சொக்கர்க்கரவம்
நீள்வாகனநன் னிலம் (௱௰௮)

சதுரங்கர்சங்கத் தழகர்செங்கைச்சங்கை
அதரமிசைவைத்திலரேயாயின்-முதலே

வருங்குளத்தின்றூண்டகக்கை வைப்பரன்றேயன்று
பொருங்களத்திலூற்றுவர்முன் போய் (௱௰௯)

கண்டக்காற்கிட்டுங்கயிலாயங் கைக்கொண்டுட்
கொண்டக்கான்மோட்சங்கொடுக்குமே-கொண்டத்தூர்
தன்னடைக்காலம்மை சன்மைத்துவைத்த பூசணிக்காய்
அண்டர்க்காமீசருக்குமாம் (௱உ௰)

போலகிறமாவார்க்குப் பூணூரமாவாரை
வலவனைசெய்தா லியல்பாமோ-சாலப்
பழிக்கஞ்சுந்தென்மதுரைப் பாவையிருநான்கு
விருக்கஞ்சன்சோமனலே வேந்து (௱உக)

கண்ணிடுங்கறியுங்காட்டு சிறுத்தொண்டான்பிற்
பண்ணுசிறுவன் கறியும்பற்றுதோ-தண்ணோடு
மட்டியையுஞ்சோலை மருந்தீசரேயன்றிக்
குட்டியையேன்தித்தீர் குறித்து (௱உஉ)

மாடுதின்பான்பார்ப்பான் மறையோதுவான்குயவன்
கூடிமிகமண்பிசைவான் கொல்லனே-தேடி
இரும்படிப்பானூன்செக்கா னெண்ணெய்விற்பான்வண்ணான்
பரும்புடைவைதயபும் பறை (௱உ௩)

ஆயனுக்குக்கண்மூன்று மாதிசிவனுக்கிருகண்
மாயனுக்குச்செங்கையிலேமான்மழுவாம்-நேயமுடன்
சங்கரனுக்குச்சங்காழிதான் மாலுக்காலமாம்
மங்கையிடத்தாற்காகு மண் (௱உ௪)

கண்ணபுரங்கோயிற் கதவடைத்துத்தாழ்போட்டார்
மண்ணையுண்டார் வெண்ணெயுண்டமாயனார்-எண்ணும்
சிரக்கப்பரையேந்திச் செங்காட்டிலீசர்
இறக்கப்புறப்பட்டாரென்று (௱உ௫)

கொன்றைமலர்தரித்தான்-கோபாலன்கோலெடுத்து
நின்றுகுழலூதினனீள்சடையோன்-பொனதிகழும்
அக்கணிந்தான்மாயனரவணையிற்கண்வளர்ந்தான்
சிக்கலிலேவாழுஞ் சிவன் (௱உ௬)

திருக்காடரவணியுந் தென்கமலையீசர்
இருந்தாடதென்செய்திடுவார்-பொருந்த

இருகாலேயல்லவே யொண்டொடிக்காவன்
றிருகாலுஞ்சந்துபோ னல் (௩௨௭)

சந்துபோதல் தூதுபோதல் உண்டைவிலகல்

உள்ளங்கால்வெள்ளெலும்பு தோன்றவொருகோடி
வெள்ளங்காலலந்திரிந்து விட்டோமே-உள்ளபடி
ஆரூர்முதலியமரர் கோனிக்கிருக்கப்
போரூரறியாமற் போய் (௩௨௮)

கம்மாளனங்கிக் கணக்கனெனவேதுதித்தார்
செம்மான்மதுரைத் திருவரிசை-அம்மாகேள்
வாணியனும்பொன்னேரி வாழும்வெள்ளாழனுமே
சேணியனுமன்றே தெரிந்து (௩௨௯)

கம்மாளன்-கபாலத்தையுடையவன்-அங்கிக்கணக்கன-அழற்கண்ணையுடையாக்கன்-செமமான்-சக்கிலி- இலந்தமாலையுடையவன்வாணியன்-பிரமன்-பொன்னேரி- அழகையுடையஇலக்குமி- வெள்ளாழன்-பாற்கடலையுடையான்-சேணியன்-இந்திரன்

பாரளக்குந்தூதுசெல்லும் பையரவின்பேணடிக்கும்
சிரகலிசாபத்தைத் தீர்க்குமே-ஊரருகில்
சண்டச்சகடுதைக்குந் தையலார்கார்கீல
கண்டத்தாரூரான் கழல் (௩௩௰)

காலாற்படியளக்குங் கண்ணிடந்துபூசிக்கும்
சேலாங்கமடமாஞ் சிங்கமாம்-பாலாகும்
ஆழியப்பிலேதுயிலு மைவர்க்குத்தூதாகும்
வீழியப்பரேறும் விடை (௩௩௧)

கமடம்-ஆமை.

கடம்பவனச்சொக்கருக்குக் கணைன்றான்வேறோ
இடம்பெரியசண்ணென்றை-யீந்தான்-உடம்பதனிற்
சொம்பாதியானை சுமக்கவெருதானான்
அம்பானானறேவியுமானான் (௩௩௨)

கனையுரமாலே கடவுளிலுகீயதிகம்
உன்னிலுமோயானதிக மொன்றுகேள்-முன்னமே
உன்பிறப்போபத்தா முயர்சிவனுக்கொன்றுமில்லை
என்பிறப்பெண்ணத் தொலையாதே (௩௩௩)

ஆனைகுதிரைக்கு மன்னைதனைக்கொன்றகரி
சேனைமன்னரைக்காய்தான் றியவரமூவெயுடன்

கூட்டியமூதிட்டான் குருக்களமராபதியான்
வீட்டிலுண்டுவந்தேன விருந்து (கங.ச)

அன்னவயல்சூழ்திருக்கு மாரூராநெஞ்சத்தில்
இன்னம்வயிரமிருப்பதா-முன்னமொரு
தொண்டன்மகனைக்கொன்றுஞ் சோழன்மகனைக்கொன்றுஞ்
சண்டன்மகனைக்கொன்றுந்-தான் (கங.இ)

வாலிமடிந்ததுவும் வல்லரக்கர்பட்டதுவுங்
கோலமுடிமன்னர் குறைந்ததுவுஞ்-சால
மதியுடையநூற்றொருவர் மாண்டதுவுமையோ
சதவிகரத்தால்வந்த தாழ்வு (கங.கு)

கோளரிருக்குமூர் தோள்கரவுகறக்கூர்
காளைகளாய்நின்று கதறுமூர்-நாளையே
விண்மாரியற்று வெளுத்துமிகக்கறுத்து
மண்மாரிபெய்கவிந்தாவான் (கங.எ)

க்ம்பத்தானைக்கடையிற் கட்டினான்கால்சாய
அம்பைத்தாவித்தான் காலானதே-வம்புசெறி
பூவைகாள்கிள்ளைகாள் பூங்குயில்காளன்றில்காள்
பாவையாளாண்டபதி (கங.அ)

கம்பத்தான்-இராவணன்-சடையிற்கட்டினான்-வாலி - அம்பைத்தாவித்தான்-கால்-அரிதாள்

சாரங்கபாணியரஞ் சக்கரத்தர்கஞ்சனைமுன்
ஓரங்கங்கொய்தவுகிர் வாளர்-பாரெங்கும்
ஏத்திடுமையாக ரினிதாயிவரும்மைக்
காத்திடுவரெப்போதுங் காண் (கங.கூ)

சாரங்கம்-மான்-வில்-கஞ்சன்-பிரமன்- கம்சன்- உமைபாகர்-சிவன்மையாகர்-மால்.

கட்டளைக்கலித்துறை

விண்ணீரும்வற்றிப் புவிநீரும்வற்றிவிரும்பியழத்
தண்ணீரும்வற்றிப்புலவோர்தவுக்கின்றகாலத்திலே
உண்ணீருண்ணீரென் றுபசாரஞ்சொல்லியுபசரித்துத்
தண்ணீருஞ்சோறுந் தருவான்திருப்பனந்தாட்டட்டனே (கசய)

விள்ளப்புதுமையொன் றுண்டாளவாயினின்மேவுதென்னம்
பிள்ளைக்கொருகுலை மூன்றேகுரும்பைபிடித்ததிலே

கொள்ளிக்கணன்றிட்டி யாலோர்குரும்பைகுறிந்தயிர்தம்
உள்ளிற்பொதிந்தவிரண் டிளநீர்கச்சுறைந்தனவே (௱௪௧)

ஆட்டுக்கிசைந்தவ ரம்பலவாணரவர்க்கெதிரே
நீட்டிற்றுமால்வட பாலினிற்காலெனநீநினையேல்
சூட்டுற்றமும்புரஞ் செற்றவர்தம்மைச்சுமந்தலுத்த
மாட்டுக்கென்னேவிடங்காணீட்டல்சொல்லவழக்கிலையே (௱௪௨)

பாரூரறியப்பலிக்குழன் றீர்பற்றிப்பார்க்குமிடத்
தோரூருமில்லையிருக்கவென் றாலுமுள்ளூருமொற்றி
யேரூரறியதியாகரென்றேபெரும் பேருமபெற்றீர்
ஆரூரிலேயிருப்பீரினிப்போய்விடுமம்பலத்தே (௱௪௩)

வாணியன்பாடவண்ணான்சுமக்க வடுகன்செட்டி
சேணியன் போற்றக்கடற்பள்ளிமுன் றொழத்திங்கரும்பைக்
கோணியன் வாழ்த்தக்கருமான்றுகிலினைக்கொண்டணிந்த
வேணியனானவன்றட்டான் புறப்பட்டவேடிக்கையே (௱௪௪)

வாணியன்-பிரமன்-வண்ணான்-நந்தி-வடுகன்-வைரவன்-செட்டி-
முருகன்-சேணியன்-இந்திரன்-கடற்பள்ளி-மாயன்-சுரும்பைக்-கோணி
யன்-மதன்-கருமான்றுகில்-யானைத்தோல்-தட்டான்-காண்டற்கரியவனா
மசிவன்.

கரியும்பிழைபொருட்டள்ளிநன் னூலங்கடலினுண்டு
வழியும்பொதியவரையினிற்கால்கொண்டு வன்கவிதை
மொழியும்புலவர்மனத்தேயிடித்து முழங்கிமின்னிப்
பொழியும்படிக்குக்கவிகாளமேகம்புறப்பட்டதே (௱௪௫)

வில்லாலடிக்கச்செருப்பாலுதைக்க வெகுண்டொருவன்
கல்லாலெறியப்பிரம்பாலடிக்க விககாசியினில்
அல்லார்பொழிற்றில்லை யம்பலவாணற்கொரன்னைபிதா
இல்லாத்தாழ்வல்லவோ விங்ஙனேயெளிதானதுவே (௱௪௬)

வாங்குபெறுந்திரு வைந்நூற்றிரட்டிப்பணவிடையில்
தூங்குமதிலொருமாவேறமுண்டு சுரர்முனிவர்
ஆங்கவர்செப்பிற்கடங்காதுலக மனைத்தும்பெறும்
ஓங்குமரங்கத்திருத்து பெட்டகத் தொருமணியே (௱௪௭)

சத்தாதியைந்தையுந்தாங்காதெய்வந் தனிமறையும்
கர்த்தாவெனுந்தெய்வமம்பலத்தேகண்டு கண்களிரு

பத்தானவன்மைந்தன் பொய்த்தேவினைக்கொல்லப்பார்த்தமுத
பித்தனவன்றனையோ தெய்வமாகப்பிதற்றுவதே (௱௪௮)

திரண்டிமையோர்தொழுந் தென்னரங்கேசர்முன் செங்கைகளா
லிரண்டிடையோனுமெதிர்சென்றதாலெதிர்ந்தார்தமைக்கண்
டருண்டெழுமைவர்க்குத்தேரூர்பவன்கொள்ளை வெருண்டு
புரண்டொருபுற்றைக்கடந்தொருபுற்றிற்புகுந்ததுவே (௱௪௯)

மாக்கைக்கிரங்குங்குருகும்வளர்சக்ரவாகப்புள்ளுந்
தாக்கச்சரபங்குழைந்ததெவ்வாறுசக்தலத்தை
ஆக்கிப்பெருகித்திருவாச்சாலையிலன்னமிட்டுக்
காகனைக்கொருகொக்கின்கீழேயிருக்குங்கருங்குயிலே (௱௫௰)

தென்னனுக்குஞ்சோலைக்கமலைப்பிரான்செஞ்சடாடவிதான்
என்னனுக்குமென்னிலெரியொக்குமந்தவெளியிலுட்ட
பொன்னனைக்குங்கொன்றைகரியொக்கும்வண்டுநற்பொற்பணிசெய்
மின்னனுக்குங்கங்கைகிழக்கொல்லனுக்குமவ்வெண்பிறையே (௱௫௧)

கரியொன்றுபொன்மிகும்பையேறக்கற்றவர்சூழ்ந்துதொழ
ளரியொன்றுசெல்வன்றுலாத்தினிலேறவிருண்டமஞ்சு
சொரிமின்றநாகமிஞ்சோற்றினிலேறித்தொடர்ந்துவர
நரியென்றுசொந்தக்கனலேறிவந்ததுநங்களத்தே (௱௫௨)

கரி-கணபதி-பொன்மை-சாளி-பொன்மிகுப்பை பெருச்சாளி-ள ரிஎன்று செல்வன்-முருகன்-துலாம்-துலாஸ்நானகட்டம மாயூரமாதலால்-மாயூரமெனபது-மயில்-நாகமின-உமை-சோறு-அன்னப்பட்சி-கரி-சம்பு சொந்தக்கனல்-நந்தி.

இருந்தாரைகேள்வனை யோங்குமராவைபெழுபுனலைத்
திருந்தாரைவன்னியை முனமுத்தோனசெய்யவேலைப்பண்டு
தருந்தாதைகாயுகன சுந்தரனறாதனசமரிலன்று
பொருந்தார்புரத்திட்டதீப்போனமதியம்புறப்பட்டதே (௱௫௩)

தாரைகேள்வன-சுக்கிரன-வாலி- திருந்தார்-ஆத்திமாலை-பகைவர்வன்னி-பத்திரம்-ஓரக்கன-முடிக்கல்-கரித்தல்-கொல்லல்-வேள முருகன-மதன-சுந்தரன-தூதன-சுந்தரற்குத்தூதன-சுந்தரனாகிய-இராமனுக்குத்தூதன.

ஆராயுமுத்தமிழார்தூரிற்சோமியழகுகண்டு
நாராயணனெடுமாலாகினைமறைநான்முகனும்

அதிரவருகின்றயானையுந் தேருமதன்பின் சென்ற
குதிரையுங்காதக்கிழவியுங்காதக்குலமன்னனே (௧)

விரகரிருவர் புகழ்ந்திடவேவேண்டும்
விரணிறையமோதிரங்கள் வேண்டும்-அரையதனிற்
பஞ்சேனும்பட்டேனும் வேண்டுமவர்கவிதை
நஞ்சேனும்வேம்பேனுமன்று (௨)

வான்குருவியின்கூடுவல்லரக்குத்தொல்கறையான்
தேன்சிலம்பியாவர்க்குஞ் செய்யரிதால்-யாம்பெரிதும்
வல்லோமேயென்று வலிமைசொல்வேண்டாங்காண்
எல்லார்க்குமொவ்வொன் றெளிது (௩)

இவ்வளவுகண்ணுடையா ளிவ்வளவுசிற்றிடையாள்
இவ்வளவுயோன்ற விளமுலையாள்-இவ்வளவா
நைநதவுடலாணல் மேவுமன்மதன்றன்
ஐந்துகணையால வாடினள் (௪)

ஐயமிடுமின்ற நெறியைக்கைப்பிடிமின்
இவ்வளவேனுமன்ன மிட்டுண்மின்-தெய்வம்
ஒருவனேயென்று முணரவல்லீரேல்
அருவினைகளைந்துமறும (௫)

அற்றதலைபோக வறுததலைநானகினையும்
பற்றித்திருகிப் பறியேனோ-வற்றும்
பரமனையாளுக்கிந்த மானைவகுத்திட்ட
பிரமனையானகாணப்பெறின் (௬)

காணமல்வேணதெல்லாங் கத்தலாங்கற்றோர்முன்
கோணமல்வாய்திறக்கக் கூடாதே-நாணமற்
பேச்சுப்பேச்சென்னும் பெரும்பூனைவந்தக்கால்
கீச்சுகீச்சென்னுங் கிளி (௭)

சித்திரமுங்கைப்பழக்கஞ் செந்தமிழுநாப்பழக்கம்
வைத்ததொருகல்வி மனப்பழக்கம்-நித்தம்
நடையுநடைப்பழக்க நட்புந்தயையுங்
கொடையும்பிறவிக் குணம் (௮)

சாதந்தனிலிளைத்த கோதைகுயிர்த
விரதந்தனிலிளைத்தமேனி-விரதம்

கொடுத்திளைத்ததாதா கொடுஞ்சமரிற்பட்ட
வடுத்துளைத்வகல்லபிராமம் (கூ)

நம்பனடியவர்க்கு நல்காத்திரவியங்கள்
பாம்புக்காம்பேய்க்காம் பரப்பையர்க்காம்-வம்புக்காம்
கொள்ளைக்காங்கள்ளுக்காந் தோவுக்காஞ்சாவுக்காங்
கள்ளர்க்காந்தீக்காகுங் காண். (௰)

எட்டேகாலட்சணமே யெமனேறும்பரியே
மட்டில்பெரியம்மை வாகனமே-முட்டமேற்
கூரையில்லா வீடே குலராமன்றூதுவனே
ஆரையடாசொன்னா யது (௰க)

வெய்தால்நறுவிதாய் வேண்டளவுந்தின்பதாய்
நெய்தானளாவிதிறம்பசந்த-பொய்யா
அடக்கென்றுசொல்லு மமுதத்தையிட்டான்
கடகஞ்செறிந்த கையாள் (௰உ)

## விருத்தம்

இலக்கணக்கவிஞர்சொலின்பந்தேடுவர்
மலக்குசொற்றேடுவர்வன்கணாளர்கள்
நிலத்துறுங்கமலதனைநீளும்வண்டதி
தலைக்குறைகமலத்தைச்சாருந்தன்மைபோல் (௰ங)

தண்ணீருங்காவிரியே தார்வேந்தன்சோழனே
மண்ணாவதுஞ்சோழ வண்டலமே பெண்ணாவாள்
அம்பொற்சிலம்பி யரவிந்தத்தாளணியுஞ்
செம்பொற்சிலம்பே சிலம்பு (௰ச)

கூரியவாளாற் குறைத்திட்டகூன்பலா
ஓரிதழாய்க்கன்றாயுயர்மரமாய்ச்-சீரியதோர்
வண்டுபோற்கொட்டையாம் வண்காயாத்தின்பழமாய்
பண்டுபோனிற்கப் பலா (௰ரு)

கூழைப்பலாத்தழைக்கப் பாடக்குறமகளும்
மூழைக்குழக்குழக்குத்திளைத்தாள்-சோழகேள்
உப்புக்கும்பாடிப் புளிக்குமொருகவிதை
ஒப்புக்குமென்றனுளம் (௰சு)

நிட்டூரமாக நிதிதேடுமன்னவனும்
இட்டதனைமொச்சா விரப்போனும்-முட்டவே

கூசிவிலைவில்லாக் குலக்கொடியுங்கூசிய
வேசியுங்கேட்டு விடும் (௰௭)

காணக்கண்கூசுதே கையெடுக்கநாணுதே
மாணொக்கவாய்திறக்க மாட்டாத வீணுக்கென்
என்பெல்லாம்பற்றியெரிகின்றதையோ
அன்பில்லாளிட்ட வமுது (௰௮)

இருந்துமுகந்திருத்தி யீரோடுபேன்வாங்கி
விருந்துவந்ததென்று விளம்ப-வருந்திமிக
ஆடினாள்பாடினாளாடிப்பழமுறத்தால்
சாடினாளோடினான் றன் (௰௯)

பத்தாவுக்கேற்ற பதிவிரதையுண்டானால்
எத்தாலுங்கூடியிருக்கலாம்-சற்றேனும்
ஏறுமாறாக விருப்பளேயாமயிற்
கூறாமற்சந்நியாசங் கொள் (௨௰)

கானொந்தேனொந்தேன் கடுகிவழிநடந்தேன்
யான்வந்துதூரமெளிதன்று-கூனன்
கருந்தேனுக்கண்ணாந்த காவிரிசூழ்நாடா
இருந்தேனுக்கெங்கே யிடம் (௨௧)

பாரிபறித்த பறியும்பழையனூர்க்
காரிகொடுத்த களைக்கொட்டுஞ்-சேரமான்
வாராயெனவழைத்த வால்மையுமிம்மூன்றும்
நீலசிற்றாடைக்குநேர் (௨௨)

ஒருகொம்பிருசெவி மும்மதத்துநால்வாய்க்
கரியுரிவைக்ககாளன்காளாய்-பரிவுடனே
கண்ணாலவோலை கடுகெழுகவாராயேல்
தண்ணாண்மைதீர்ப்பன் சபித்து (௨௩)

சேரலர்கோன்சேரன் செழும்பூந்திருக்கோவல்
ஊராளுந்தான்வருக வுட்காதே-பாரிமகள்
அங்கவையைக்கொள்ளவரசனமனமிசைந்தான்
சங்கவையையுங்கூடத்தான் (௨௪)

புகார்மன்னன்பொன்னிப் புனனாடன்சோழன்
தகாதென்றுதானம் இருந்தநகாதே

கடிதின் வருகக்கடிக்கோவலூர்க்கு
விடியப்பதினெட்டா நாள் (௨௫)

வையைத்துறைவன் மதுராபுரித்தென்னன்
செய்யத்தகாதென்று தேம்பாதே-தையலர்க்கு
வேண்டுவனகொண்டு விடிவீரொன்பானாள்
ஈண்டுவருகவிசைந்து (௨௬)

கருணையாலிந்த கடலுலகங்காக்கும்
வருணனேமாமலையன் கோவல்-திருமணத்து
முன்மாரிபெய்யு முதுவாரியைமாற்றிப்
பொன்மாரியாகப்பொழி (௨௭)

முத்தெரியும்பெண்ணை முதிநீர்துகவிர்த்துத்
தத்தியநெய்யா றலைப்பெய்து-குத்திச்
செருமலைதெயவீகன் றிருக்கோவலூர்க்கு
வருமளவுங்கொண்டோடி வா (௨௮)

பொன்மாரிபெய்யமூர் பூம்பருத்தியாடையாம்
அந்நான்வயலரிசி யாகுமூர்-எந்நாளும்
தேக்குபுகழேபடைத்த சோதிமாநாடதனில்
ஓங்குந்திருக்கோவலூர் (௨௯)

சொல்லாமலேபெரியர் சொல்லிச்சிறியர்செய்வர்
சொல்லியுஞ்செய்யார் கயவரே-நல்ல
குலாமலை வேற்கண்ணாய் கூறுவமைநாடிற்
பலாமாவைப்பாதிரியைப்பார் (௩௰)

கலித்தாழிசை-அல்லது-அந்தத்தடி நீண்டிசையாமையின்

ஐந்தடிக்கலித்துறை என்னலுமாம்.

திக்கட்குடையடைச்சேரனுஞ்சோழனும்பாண்டியனும்
மங்கைக்கறுகிட்வந்துநின்றார்மணப்பந்தரிலே
சங்கொக்கவெண்குருத்தீன்ற பசுஞ்சோலைசலசலத்து
நுங்குக்குக்கண்முற்றியடிக்கண்கறுத்துநுனிசிவந்து
பங்குக்குமுன்றமூழ்த்தாவெண்ணமபனந்துண்டமே (௩௧)

ஆயன்பதியிலரன்பதிலந்துற்றக
மாயனூதுங்கருவி யானாலும்-தூயமணிக்
குன்றுபோல்வீறு குவிமுலையாடன்னுடனீ
இன்றுபோலென்று மிரு (௩௨)

சிறப்பான்மணியவுலிச் சேரமான்றன்னைச்
கரப்பாடியான்கேட்கப் பொன்னொடொன்-றீந்தான்
இரப்பவரென்பெறினுங் கொள்வர்கொடுப்பவர்
தாவறிவார்தன்கொடையின்சீர் (௩௩)

நூற்றுப்பத்தாயிரம் பொன்பெறினு நூற்சீலை
நாற்றிங்களுக்குணைந்துவிடும்-மாற்றலரைப்
பொன்றப்பொருதடக்கைப் போர்வேலகளங்கா
என்றுமழியாதென் பாட்டு (௩௪)

வரகரிசிச்சோறும் வழுதுணங்காய்வாட்டும்
முரமுரெனவேபுளித்த மோரும்-திரமுடனே
புள்வேளூர்ப்பூதன் புகழ்ந்துபரிந்திட்டசோ
றெல்லாவுலகும் பெறும் (௩௫)

ஏசியிடலினிடாமையேநன்றெதிரிற்
பேசுமனையாளிற் பேய்நன்று-நேசமிலா
வங்கணத்தினன்று வலியபகைவாழ்வில்லாச்
சங்கடத்திற்சாவதே நன்று (௩௬)

கரியாய்ப்பரியாகிக் காரெருமைதானாய்
எருதாய்முழப்புடவை யாகித்-திரிதிரியாய்த்
தேரைக்கால்பெற்றுமிகத் தேய்ந்துகாலோய்ந்ததே
கோரைக்காலாள்வான் கொடை (௩௭)

பாடல்பெறானே பலர்மெச்சுவாழானே
நாடறிகன்மணங்கண்டானே-சேடன்
இவன்வாழும்வாழ்க்கை யிருங்கடல்சூழ்பாரிற்
கவிழ்ந்தென்மலர்ந்தென்னகாண் (௩௮)

காலையிலொன்றாவர் கடும்பகலிலொன்றாவர்
மாலையிலொன்றாவர் மனிதரெலாஞ்-சாலவே
முல்லானைப்போல முகமுமகமும்மலர்ந்த
நல்லானைக்கண்டறியோ நாம் (௩௯)

கற்றதுகைம்மண்ணளவு கல்லாதுலகளவென்
றுற்றகலைமடந்தை யோதுகிறாள்-மெத்த
வெறும்பந்தயங்கூறவேண்டாம்புலவீர்
எறும்புந்தன்கையா லெண்சாண் (௪௰)

நூலெனிலோ கோல்சாயு முத்தமரேல் வெஞ்சமராங்
கோலெனிலோ வாங்கே குடிசாயு-நாலாவான்
மந்திரியு மாவான் வழிக்குத் துணையாவான்
அந்தவரசே யரசு (௪௧)

செம்மான் கரந்தனருள் சேயாநெடியோனை
அம்மானெனப்பெற் றருள்வேலா-இம்மான்
கரும்பிறைக்கும் வெண்பிறைக்குங் கண்ணம்பிறைக்கும்
அரும்பிறைக்குங் கூந்தலணை (௪௨)

மதியார்தம் முற்ற மதித்தொருகாற் சென்று மிதியாமை கோடி பெறும், உண்ணீ ருண்ணீரென் றுபசரியார் தம்மனையி லுண்ணாமை கோடி பெறும், கோடி கொடுத்துங் குடிப்பிறந்தார் தம்மோடு கூடுதல் கோடி பெறும், கோடானுகோடி கொடுப்பினுந் தன்னுடைய நாக் கோடாமை கோடி பெறும், (௪௩)

வாதக்கோனென் றான் வையைக்கோன் பின்னையென்றான்
ஏதக்கோன் யாதேனு மில்லையென்றான்-ஓதக்கேள்
வாதக்கோன் சொல்லதிலும் வையைக்கோன் சொல்லதிலும்
ஏதக்கோன் சொல்லே யினிது (௪௪)

சுற்றுங் கருங்குளவி சூரைத்தூ றுரியப்போய்
எற்றுஞ் சுடுகா டிடுகரையின்-புற்றில்
வகர்ந்தமடற் பனைக்குள் வைத்ததேனொக்கும்
தளர்ந்தோர்க் கொன்றீயார் தனம் (௪௫)

ஆர்த்தசபை நூற்றொருவ ராயிரத்தொன் றாம்புலவர்
வார்த்தைபதி னாயிரத்தொருவர்-பூத்தமலர்த்
தண்டாமரைத் திருவே தாதா கோடிக்கொருவர்
உண்டாயினுண்டென் றறு (௪௬)

தண்டாமலீவது தாளாண்மை தாண்டி
அடுத்தக்காலீவது வண்மை-அடுத்தடுத்துப்
பின்சென்றாலீவது காற்கூலி பின்சென்றும்
ஈயா னெச்சம்போலறு (௪௭)

உள்ள வழக்கிருக்க வூரார் பொதுவிருக்கத்
தள்ளிவழக்கதனைத் தான்பேசி-எள்ளளவும்
கைக்கூலி தான்வாங்குங் காலறுவான் றன்கிளையும்
எச்சமறுமென் றலறு (௪௮)

ROJA MUTHIAH
47, HOSPITAL STREET
KOTTAIYUR

வழக்குடையாளிற்ப வலியானைக்கூடி
வழக்கையழிவழக்குச் செய்தோன்-வழக்கிழந்தோன்
சுற்றமுந்தானுந் தொடர்ந்தழுதகண்ணீரால்
எச்சமறுமென்றுலறு (௪௯)

வெண்பாவிருகாலிற் கல்லானைவெள்ளோலை
கண்பார்க்கக்கையா லெழுதானைப்-பெண்பாவி
பெற்றாளேபெற்றாள் பிறர்நகைக்கப்பெற்றாளே
எற்றேமற்றெற்றேமற்றெற்று (௫0)

கருங்குளவிசூரைத்தூறீச்சங்கனிபோல்
வருந்தினர்க்கொன்றீயாதான் வாழ்க்கை-அரும்பகலே
இச்சித்திருந்தபொருள் தாயத்தார்கொள்வாரே
தெற்றேமற்றெற்றேமற்றெற்று (௫௧)

வானமுளதான்மழையுளதான்மண்ணுலகிற்
றானமுளதாற்றயையுளதால்-ஆனபொழு
தெய்த்தோமிளைத்தோமென் றேமர்ந்திருப்போரை
எற்றேமற்றெற்றேமற்றெற்று (௫௨)

எண்ணாயிரத்தாண்டு நீரிற்கிடந்தாலும்
உண்ணீரம்பற்றாக் கிடையேபோற்-பெண்ணாவாய்
பொற்றொடிமாதர் புணர்முலைமேற்சாராரை
எற்றேமற்றெற்றேமற்றெற்று. (௫௩)

கருங்காலிக்கட்டைக்கு நாணுக்கோடாலி
இருங்கதலித்தண்டுக்கு நாணும்-பெருங்கானிற்
காரெருமைமேய்க்கின்ற காளைக்குநாணாற்ற
நீரிரவுந்துஞ்சாதென் கண் (௫௪)

## கொடியது

கொடியதுகேட்கி னெடியவெவ்வேலோய்
கொடிதுகொடிது வறுமைகொடிது
அதனினுங்கொடிது இளமையில்வறுமை
அதனினுங்கொடிது ஆற்றொணாக்கொடுநோய்
அதனினுங்கொடிது அன்பிலாப்பெண்டிர்
அதனினுங்கொடிது
இன்புறவவர்கையிலுண்பதுதானே

## இனியது

இனியதுகேட்கிற் றனிநெடுவேலோய்
இனிதுஇனிது ஏகாந்தமினிது
அதனினுமினிது ஆதியைத்தொழுதல்
அதனினுமினிது அறிவினர்ச்சேர்தல்
அதனினுமினிது அறிவுள்ளாரைக்
கனவினுநனவினுங் காண்பதுதானே (௯௬)

## பெரியது

பெரியதுகேட்கி னெரிதவழ்வேலோய்
பெரிதுபெரிது புவனம்பெரிது
புவனமோநான் முகன்படைப்பு
நான்முகன்கரிய மாலுந்திவந்தோன்
கரியமாலோவலைகடற்றுயின்றோன்
அலைகடல்குறுமுனி கையிலடக்கம்
குறுமுனியோகலசத்திற்பிறந்தோன்
கலசமோபுவியிற்சிறுமண்
புவியோவரவினுக்கொருதலைப்பாரம்
அரவோவுமையவள்சிறுவிரன்மோதிரம்
உமையோவிறைவர்பாகத்தொடுக்கம்
இறைவரோதொண்டருள்ளத்தொடுக்கம்
தொண்டர்தம்பெருமைசொல்லவும்பெரிதே (௯௭)

## அரியது

அரியதுகேட்கின்வரிவடிவேலோய்
அரிதரிதுமானிடராதலரிது
மானிடராயினுங்கூன்குருடுசெவிடு
பேடுநீக்கிப்பிறத்தலரிது
பேடுநீக்கிப்பிறந்தகாலையும்
ஞானமுங்கல்வியுநயத்தலரிது
ஞானமுங்கல்வியுநயந்தகாலையும்
தானந்தவமுந்தான்செயலரிது
தானந்தவமுந்தான்செயவராயின்
வானவர்நாடுவழிதிறந்திடுமே (௯௮)

மாடில்லான்வாழ்வு மதியில்லான்வாணிபநன்
றேடில்லான்செங்கோனடாத்துவது-கூடுங்
குருவிலலாவித்தை குணமில்லாய்பெண்டு
விருந்தில்லான்வீடும் விழல் (௫௯)

நேனைக்காணுமிடத்தி னெஞ்சாரவேதுதித்தல்
ஆசானையெவ்விடத்து மப்படியே-வாச
மனையாளைப்பஞ்சணையின் மைந்தர்தமைநெஞ்சில்
வினையாளைவேலை முடிவில் (௬௰)

ஆலைப்பலாவாக் கலாமோவருஞ்சுணங்கன்
வாலைநிமிர்க்கவசமாமோ-நீலநிறக்
காக்கைதனைபேசுவிக்கலாமோகருணையிலா
மூர்க்கனைசீராக்கலாமோ (௬௧)

நிழலருமைவெய்யிலிலே நின்றறிமினீசன்
கழலருமைவெவ்வினையிற் காண்மின்-பழகுதமிழ்ச்
சொல்லருமைநாவிரண்டிற் சோமன்கொடையருமை
புல்லரிடத்தேயறிமின்போய் (௬௨)

காசினியிற்பிள்ளைக் கவிக்கம்புலிபுலியாம்
பேசுமுலாவிற்பெதும்பைபுலி-ஆசு
வலவர்க்குவண்ணம் புலியாமற்றெல்லப்
புலவர்க்குவெண்பாபுலி (௬௩)

ஈதலறந்தீவினைவிட்டீட்டுபொருளெஞ்ஞான்றுங்
காதலிருவர் கருத்தொருமித்-தாதரவு
பட்டதேயின்பம் பரனைந்திம்மூன்றும்
விட்டதேபேரின்பவீடு (௬௪)

தாயோடறுசுவைபோந் தந்தையொடுகல்விபோம்
சேயோடுதான்பெற்ற செல்வம்போம்-ஆயவாழ்
வுற்றாருடன்போ முடற்பிறப்பாற்றோள்வலிபோம்
பொற்றாலியோடெவையும்போம் (௬௫)

பேரந்தவுதாரனுக்குப் பொன்றுரும்புசூரனுக்குச்
சேர்ந்தமரணஞ் சிறுதுரும்பு ஆய்ந்த
அறிவோர்க்குநாரி யருந்துரும்பாமில்லத்
துறவிக்குவேந்தன் றுரும்பு (௬௬)

மேற்பார்க்கமைந்தருண்மூவாவெருதும்விளங்குகங்கை
நீர்ப்பாயச்சலுநன்னிலமுமுண்டாகினின் னிடத்திற்

பாற்பாக்கியவதிநீங்காதிருந்தும்பலிக்குழந்தீர்
ஏற்பார்க்கிடாமலன்றோபெருங்கோவிலிறையவனே (கஎ)

அகவல்

மூவர்கோவையு மூவிளங்கோவையும்
பாடியவென்றன்பனுவல்வாயால்
என்னையும்பாடுக வென்றனையெங்ஙனம்
பாடுதுமியாங்களிறுபடுசெங்களம்
கண்ணிற்காணீர்வெளிறுபடுநல்யாழ்
விருப்பமாய்க்கேளீர்
இல்லவாய்ச்சியரிளமுலைபுல்லீர்
புலவர்வாய்ச்சொற்புலம்பலுக்கிரங்கிலிர்
ஊடருண்ணீர்கோடூர்கொள்ளீர்
ஓவாக்கானத்துயர்மரமபோலத்
தாவாக்கனியிற்றேன்றினீரே (கஅ)

கல்வியுடையீர்க்ருங்கானகத்திடையே
செல்வியிலையுதிர்ந்துநிற்பதேவன்-வல்லாய்கேள்
வெல்லாவழக்கைவிலைவாங்கிவெல்விக்கும்
வல்லாளன்சுற்றப்போன்மாண்டு (சுக)

வண்டமிழைத்தேர்ந்தவழுதிகலியாணத்
துண்டபெருக்கமுரைக்கக்கேள்-அண்டி
நெருக்குண்டேன்றள்ளுண்டேனீள்பசியினாலே
சுருக்குண்டேன்சோறுண்டிலேன் (எ0)

ஆ -செய்யுள்-உஉக.

ஔவையார்முதலிய எழுவரும்பாடியது

ஔவையார்

இட்டமுடனென்றலையி லின்னபடியென்றெழுதி
விட்டசிவனுஞ்செத்து விட்டானோ-முட்டமுட்டப்
பஞ்சமேயானாலும் பாரமவனுக்கன்றாய்
நெஞ்சமேயஞ்சாதேநீ (க)

உப்பை

அத்திமுதலெறும்பீறா னவுயிரத்தனைக்குஞ்
சித்தமகிழ்ந்தளிக்குந் தேசிகன்-முற்றவே

கற்பித்தான்போனானோ காக்கக்கடனிலையோ
அற்பனோவன்னயரன் (உ)

அதிகமான்

கருப்பைக்குண்முட்டைக்குங் கல்லினுட்டேரைக்கும்
விருப்புற்றமுதளிக்குமெய்யன் உருப்பெற்றால்
ஊட்டிவளர்க்கானோவோ கெடுவாயன்னய்கேள்
வாட்ட முனகமேன்மகிழ் (ங)

உறுவை

சண்டைப்பைக்குளுயிர் தன்றுயருந்தத்தானருந்தும்
அண்டத்துயிர்பிழைப்பதாச்சரியம்-மண்டி
அலைகின்றவன்னயரனுடையவுண்மை
நிலைகண்டுநீலறிந்துநில் (ச)

கபிலர்

கண்ணுழையாக்காட்டிற் கருஞ்சற்றவளைக்குங்
உண்ணுமபடியளப்பார்நாரியோர்பாகர்
நமக்கும்படியளப்பார்நாரியோர்பாகர்
தமக்குத்தொழிலென்னதான் (ரு)

வள்ளியம்மை

அன்னைவயற்றி லருத்திவதாத்தவன்றான்
இன்னும்வளர்க்கானோ வென்றுயே மின்னரவஞ்
சூடியபெருமான சுடுகாட்டினின்றுவிளை
ஆடும்பெருமானவன் (சு)

வேழமுடைத்து மலைநாடுமேதக்கச்
சோழவளநாடு சோறுடைத்துப்-பூழியர்கோன்
தென்னாடுமுட்துடைத்துத் தெண்ணீரவயற்றொண்ட
நன்னாடுசான்றோருடைத்து (எ)

தெய்வப்புலமைத்

## திருவள்ளுவநாயனார்

அவ்வவ்வமயங்களிற்கூறியதனிப்பாடற்றிரட்டு



எவ்வுயிருங்காக்க வொருவீசனுண்டோவில்லையோ
அவ்வுயிரில்யானொருவனல்லவோ-வவ்வி

அருகுவதுகொண்டிங்கணைவதேனன்னே
வருகுவதுதானேவரும் (அ)

பூவிலயனும்புரந்தரனும்பூவுலகைத்
தாவியளந்தோனுந்தாமிருக்க- நாவில்
இழைநக்கிநூலனெருடு மேழையறிவேனோ
குழைநக்கும்பிஞ்சகன்றன் கூத்து (௯)

ஐயரென்றுரைத்தீர்நாயேற்கடுக்குமோவருளிலெனைப்
பொய்யோடுகளவுமற்றுப்புலன்களையொடுக்கிக்கொண்டு
உய்யவேபுலன்களைந்து முயர்பரவெளியுள்ளாக்கி
வெய்யவன்மதியம்போலவிரவுவரையராவர் (௰)

ஞானவானென்றுசொன்னீர் நாதவிந்துவுங்கடந்து
கானலைவரையுஞ்சுட்டுக்கடுவெளியரமாநந்தந்
தானெனுமவையிரண்டுந்தவிர்ந்துதன்வசமுங்கெட்டு
மோனமுங்கடந்தேயப்பான் முடிந்தவாஞானியாவர் (௰௧)

சாதியிலேதொண்ணூற்றொன்பானுஞ்சாதி
சமயத்திற்பதின்மூன்றுஞ்சமயமாகும்
நீதியிலேசிவனுடைநீதியாகும்
நிலைமையிலேவேதாந்தநிலைமையாகும்
ஆதியிலேயெங்களூர்கருவூராகும்
அந்தத்திற்போயடைவோம்பேரூர்தன்னிற்
சோதியிலேபரஞ்சோதிக்கூட்டமாகுஞ்
சொல்லுதற்குமெங்கள்குலஞ்சுக்கிலமதாமே (௰௨)

எந்தவூரென்றீரிருந்தவூர்நீர்கேளீர்
அந்தவூர்ச்செய்தி யறியீரோ-வந்தவூர்
முப்பாழும்பாழாய் முடிவிலொருசூனியமாய்
அப்பாலும்பாழென்றறி (௰௩)

இல்லுமில்லென்றுசொன்னீர் நேசபாசங்களைந்தும்
புல்லறிவோடுவாங்காப் புலைகொலைகளவுமற்றுச்
சொல்லுதற்கரியஞானச் சுழிமுனைமுடியின்மீதில்
எல்லையுங்கடந்தேயப்பா லேகமானவர்கணிற்பார் (௰௪)

இருமிருமென்றுசொன்னீ ரேற்குமோவேழையேற்குக்
தருபொருளுணர்ந்துசைவ சமயமுமனைத்துநீங்கி

மருடருவினையுநீங்கிமாசிலாவுண்மைஞானம்
பொருந்தினரிருப்பர்பின்புபொருதவரிறப்பர்தானே (௰௫)

போமெனவுரைத்திரென்னைப் பொறியொடுபுலன்களைந்தும்
ஆமெனுமவிச்சையோடு மங்கனேமிந்துக்கொண்டே
ஏமமுஞ்சாமமற்றேயிரவொடுபகலுமற்றுச்
சோமனார்பதியைவிட்டுத் தூரந்தவர்போவரென்றே (௰௬)

அடிசிற்கினியாளே யன்புடையாளே
படிசொற்றவறுதபாவாய்-அடிவருடிப்
பின்றூங்கிமுன்னெழுந்தபேதையேபோதியோ
என்றூங்குமென்கண் ணிரா (௰௭)

ஆக-செய்யுள்-௨௪௯

---

## மகாகவியாகிய கம்பர்

### அவ்வவ்மயங்களிற் கூறிய தனிப்பாடற்றிரட்டு.

கடல்கிழக்குத்தெற்குக் கரைபொருவெள்ளாறு
குடதிசையிற்கோட்டைக் கரையாம்-வடதிசையில்
ஏணாட்டுப்பண்ணையிருபத்துநாற்காதஞ்
சோணாட்டுக்கெல்லையெனச்சொல் (௧)

வெள்ளாறதுவடக்கா மேற்குப்பெருவழியாந்
தெள்ளாற்புனற்கன்னி தெற்காகும்-உள்ளார
ஆண்டகடல்கிழக்கா மைம்பத்தறுகாதம்
பாண்டிநாட்டெல்லைப்பதி (௨)

வடக்குத்திசைபழனி வான்கீழ்தென்காசி
குடக்குத்திசைகோழிக் கோடாம்-கடற்கரையின்
ஓரமோதெற்காகுமுள்ளெண்பதின்காதம்
சேரநாட்டெல்லையெனச்செப்பு (௩)

மேற்குப்பவளமலை வேங்கடநேர்வடக்காம்
ஆர்க்குமுவரி யணிகிழக்கு-பார்க்குளுயர்
தெற்குப்பினாகி திகழிருபதின்காதம்
நற்றொண்டைநாடெனவேநாட்டு (௪)

ஆழியான் பள்ளியணையெயவன்கடைந்த
வாழிவரையின்மணித்தாம்பே-பூழியான்
பூணைபுரமெரித்தபொற்சிலையிற்பூட்டுகின்ற
நாணையகலந்ட (௫)

மங்கையொருபங்கர்மணிமார்பிலாரமே
பொங்குங்கடலகடைந்தபொற் கயிறே-திங்களையும்
ஏறியதன்மேலூருர்தெய்வத்திருநாணே
ஏறியபண்பேயிறங்கு (௬)

பாரைச்சுமந்தபடவரவேபங்கயக்கண்ணன்
வீரன்கிடந்துறங்குமெல்லணையே ஈரமதிச்
செஞ்சடையான்பூணுந்திருவாபரணமே
நஞ்சுடையாய்நூராநட (௭)

சிரம்பார்த்தானீசனயன்றேவிதனைப்பாரத்தான்
கரம்பார்த்தான்செங்கமலக்கண்ணன்-உரஞ்சேர்
மலைவெளுத்ததிண்புயத்துவண்ணணைசீராமன்
கலைவெளுத்தநேர்த்திதனைக்கண்டு (௮)

ஆரார்தலைவணங்காரரார்தான்கையெடார்
ஆராதான்சத்திரத்திலாருதார்-சீராருந்
தென்புலியூர்மேவுஞ்சிவனருள்ரசேரம்பட்டத்
தம்பிபுகான்வாசலிலேதான் (௯)

கொற்கையான்மாறன்குலசேகரப்பெருமான்
பொற்கையானைகதைபோதாதோ-நறகமல
மன்றலேவாரிமணிவாசலையசைக்கத்
தென்றலேயேன்வந்தாய்செப்பு (௰)

பேரரசர்தேவிமார்பெற்றமதலையர்தம்
மார்பகலங்கண்டுமகிழ்வரே-யோர்புரிய
வல்லானகளங்கன்வாணன்றிருநாமம்
எல்லாமெழுதலாமென்று (௰௧)

உலைக்குரிபண்டமுவந்திரக்கச்சென்றால்
கொலைக்குரியவேழங்கொடுத்தான்-றலைக்குரிய
வாணர்கோனுறைமகதேவனுக்கிந்தப்
பாணனேறெடென்னபகை (௰௨)

வாணன்பெயரெழுதாமார்புண்டோமாமதுர்கோன்
வாணன்புகழுரையாவாயுண்டோ-வாணன்
கொடிதாங்கியில்லாதகொம்புண்டோவுண்டோ
அடிதாங்கியில்லாவரசு (௰௩)

உமையவளுநீயுமொருங்கொப்பேயொப்பே
உமையவளுக்குண்டங்கோரூனம-உமையவடன்
பாகந்தோய்ந்தாண்டான்பலிக்குழன்றான்பாண்டியனின்
ஆகந்தோய்ந்தாண்டானரசு (௰௪)

மோட்டெருமைவாவிபுகமுட்டுவாற்கன்றென்று
விட்டளவும்பால்சொரியும்வெண்ணெயே-நாட்டில்
அடையானெடுக்கதவுமஞ்சலென்றசொல்லும்
உடையான்சடையப்னூர் (௰௫)

வெற்றிபுனைதாதகிக்கும்வேம்புக்கும்பெண்ணைக்கும்
சுற்றுமபெருநிழலாய்ததோன்றுமே-கற்றோர்
இறந்தாங்குந்தாங்குஞ்செகமுழுதுந்தாங்கும்
அறந்தாங்குந்தொண்டவரசு (௰௬)

கந்தமலர்ப்பிரமன்கன்னிமடவார்க்கெல்லாம்
அந்தவிளநீரைமுலையாக்கினான்-சுந்தரஞ்சேர்
தோற்றமிகுவல்லிக்குத்தோப்பைமுலையாக்கினான்
ஏற்றமிதில்யார்தானியம்பு (௰௭)

இருந்தவளைப்போனவளையென்னையவளைப்
பொருந்தவளைபறித்துப்போனான் பெருந்தவளை
பூத்ததேன்சொரியும்பொன்னிவளநன்னாட்டின்
மாத்தத்தன்வீதியினிலவந்து (௰௮)

ஆழியானாழியயனெழுத்தாணியென்பார்
கோழியான்குன்றெறிபவேலென்பான்-பூழியான்
அங்கைமழுவென்பானருள்பெரியமாவண்டூர்க்
சிங்கனுலைகளத்திறசென்று (௰௯)

குடகர்குணகடலென்பர்குடகுக்
கிடகர்வடகடலென்பர்-வடகடலோர்
தென்கடலென்பர்திருந்துதாரச்சுதனின்
முன்கடைநின்றார்க்குமுரசு (௨௰)

தினைவிளைத்தார்முற்றந் தினையுணங்குஞ்செந்நெ
றனைவிளைத்தார்முற்ற மதுதானாங்-கனையு
முரசுணங்கச்சங்குணங்குமூரித்தேர்த்தானை
அரசுணங்குமச்சுதன் முற்றம் (உக)

குறையுளாரெங்கிரார்கூர்வேலிராம
விறையாறுதிங்களிருந்தான்-முறைமையால்
ஆலிக்குந்தார்மார்பாவச்சுதாதந்நாளில்
வாலிக்கிளையான்கடை (உஉ)

அரசனகளங்கனச்சுதன்முற்றத்
தரசரவதரித்தவந்நாள்-முரசதிரக்
கொட்டிவிடுமோசையினுங் கோவேந்தர்காற்றளையை
வெட்டிவிடுமோசைமிகும் (உங)

தளையவிழ்நாண்மாலைத்தாயரேயாயி
களையினுமென்கண்டிறந்துகாட்டேன்-வளைகொடுயோய்
வன்கண்ணன்மாவிசையன்மால்யானைதன்னொடும்வந்
தன்கண்புகுந்தானினி (உச)

பாண்டியனைப்பேர்மாற்றிப்பாணர்க்கரசளித்த
வாண்டகையெனறுன்னையறியேனோ மூண்டெழுந்த
காரமாற்றுஞ்செங்கைக்கடகரிவாணாவுனது
பேர்மாற்றுவதரிதோபேசு (உரு)

வாட்டானைத்தென்னவர்கோன்மாகதற்குத்தோற்றசெய்தி
கேட்டானந்திங்குரலுங்கேட்டதற்பி-னாட்டம்
பொருந்தாயிரவிழியான்பொன்முடியைச்சாய்த்தங்
கிருந்தானிங்கென்னாகு மென்று (உசு)

பாணன்மதுரைப்பதியாளவைத்தபிரான்
வாணர்புகழுவருமேகம்பர்-வாணன்
கரும்போதகமேறின்கால்பணிவேன்மீண்டு
வரும்போதகமேவரின் (உஎ)

படுபருந்துஞ்சூர்ப்பேயும்பன்மிருகஞ்செந்நாய்
கொடிகழுகுமித்தனையுங்கூடி-வடிவுடைய
கோமான்களப்பாளன்கொல்யானைபோமாறு
போமாறுபோமாறுபோம் (உஅ)

என்சிவிகையென்கவிகையென்றுவசமென்கவசம்
என்பரியீதென்கரியீதென்பரே-மன்கவன
மாவேந்தன்வாணன் வரிசைபரிசுபெற்ற
பாவேந்தரைவேந்தர்பார்த்து (௨௯)

சேற்றுக்கமலவயற்றென்னுறைவாணனையான்
சோற்றுக்கரசிதரச்சொன்னக்கால்-வேற்றுக்
களிக்குமாவைத்தந்தான்-கற்றவர்க்குச்செம்பொன்
அளிக்குமாறெவ்வாறவன் (௩௰)

தேருளைப்புரவிவாரணத்தொகுதிதிறைகொணர்ந்துவருமன்னரின்
தேசமேதுனதுநாமமேதுபுகல்செங்கையாழ்தடவுபாணகேள்
வாருமொத்தகுடிநீருநாமமகதேவனுறைநகர்காவலன்
வாணபூபதிமகிழ்ந்தளிக்கவெகுவரிசைபெற்றவருபுலவன்யான்
நீருமிப்பரிசுபெற்றுமீளவரலாகுமேகுமவன்முன்றில்வாய்
நித்திலச்சிகரமாடமாளிகைநெருங்குகோபுரமருங்கெலாம்
ஆருநிற்குமுயர்வேம்புநிற்கும்வளர்பனையுநிற்கும்தனருகிலே
அரசுநிற்குமரசைச்சுமந்தசிலவத்திநிற்குமடையாளமே. (௩௧)

அலங்கலணிமார்பனுறையர்கோன்வாணன்
விலங்குகொடுவருகவென்றான்-இலங்கிழையீர்
சேரற்கோசோழற்கோதென்பாண்டிநாடாளும்
வீரற்கோயார்க்கோவிலங்கு (௩௨)

பரப்போதனூலமொருதம்பியாளப்பணிமதியந்
துரப்போனொருதம்பியின்வாத்தானுந்துணைவியுடன
வரப்போனமைந்தற்குத்தாதைபொறாதுயிர்மாய்ந்தனனென்
சுரப்போவெனக்கிங்கினியாருவமையுரைப்பதற்கே (௩௩)

கண்டாயோபார்வேந்தாகானகத்துக்கள்ளியின்கீழ்
வெண்டாழைபூத்துவிளககெரியப்-பெண்டாலி
பூட்டுதற்குமுன்னமொருபுத்திரனைப்பெற்றெடுத்தாள்
காட்டிற்கழுகோட்டுங்கை (௩௪)

கன்னிக்கலசமுலையாடன்காமக்குரோதபஞ்சததில்
என்னுக்கெழுதிக்கொடுத்தேனென்றியம்பக்கேளாயிகல்வேந்தே
மின்னுக்கெழுதியிடைக்கெழுதிவேண்டும் பொருட்குமெழுதியருட்
பொன்னுக் கெழுதிக்கொடுத்தேன்யான் பொய்யுமுரையேன் புகல்
வேந்தே, (௩௫)

பாண்டியன்பாடியது

போற்றினும்போற்றுவர்பொருள்கொடாவிடிற்
றூற்றினுந்தூற்றுவர் சொன்னசொற்களை
மாற்றினுமாற்றுவர்வன்கணாளர்கள்
கூற்றினும்பாவலர்கொடியராவரே (௩௬)

மன்னவனுநீயோவளநாடுமுன்னதோ
உன்னையறிந்தேதமிழையோதினேன்-என்னை
விரைந்தேற்றுக்கொள்ளாதவேந்துண்டோவுண்டோ
குரங்கேற்றுக்கொள்ளாதகொம்பு (௩௭)

அன்றையிலும்வையமகன்றதோவல்லவென்று
குன்றெடுத்துநீதிருத்திக்கொண்டாயோ-என்றும்
அடைந்தாரைக்காக்குமகளங்காதுங்க
கடந்தாயேநாலாறடி (௩௮)

காதமிருபத்துநான்கொழியக்காசினியை
ஓதக்கடல்கொண்டொளித்ததோ-மேதினியிற்
கொல்லிமலைத்தேன்சொரியுங்கொற்றவாநீமுனிந்தால்
இல்லையோவெங்கட்கிடம் (௩௯)

நீரெலாஞ்சேற்றுநாற்றநிலமெலாங்கல்லுமுள்ளும்
ஊரெலாம்பட்டிதொட்டியுண்பதோகம்மஞ்சோறு
பேரெலாம்பொம்மன்றிம்மன்பெண்களோநாயும்பேயும்
காருலாங்கொங்குநாட்டைக்கனவிலும்நினைக்கொணாதே (௪௰)

குமிண்டியும்பண்ணையுங்கூடமுளைக்கின்றகொல்லைக்கம்மை
நிமிண்டியுமூதியுந்தின்னவல்லோரிந்தநீணிலத்திற்
றுமிண்டியங்காய்தன்னைமொட்டையம்பாலையுஞ்சூர்நகண்டர்
நமண்டியிற்பள்ளிகளத்தனைபேர்களுநல்லவரே (௪௧)

செட்டிமக்கள்வாசல்வழிச்செல்லோமேசெக்காரப்
பொட்டிமக்கள்வாசல்வழிப்போகோமே-முட்டிபுகும்
பார்ப்பாரகத்தையெட்டிப்பாரோமேயெந்நாளுங்
காப்பாரேவேளாளர்காண் (௪௨)

மேழிபிடிக்குங்கைவேல்வேந்தர்நோக்குங்கை
ஆழிதரித்தேயருளுங்கை-சூழ்வினையை
நீக்குங்கையென்றுநிலைக்குங்கைநீடூழி
காக்குங்கைகாராளர்கை (௪௩)

மற்கொண்டதிண்புயத்தான்மாநகர்விட்டிங்குவந்து
சொற்கொண்டபாவின்சுவையறியாரீங்கிலையே
விற்கொண்டவாணுதலாள்வேலிதருங்கூலி
நெற்கொண்டுபோயளவுமில்லாய்நெடுஞ்சுவரே (௪௪)

விருத்தம்

தேரையார்செவ்விளநீருண்ணப்பழிசுமப்பர்
காரியார்தாமறியார்காமவரைநத்தாமை
கோரைவாய்ப்பொன்சொரியுங்கொல்லிமலைநன்னாடா
ஊரைவாய்மூடவுலைமூடிதானிலையே (௪௫)

பட்டுப்படாக்கொங்கைமானார்கலவிமயக்கத்திலே
கட்டுப்பட்டாயென்னகாதல்பெற்றாய்மதன்கையம்பினாற்
பட்டுப்பட்டாயினுந்தேறுவையேயென்றுபார்த்திருந்தேன்
வெட்டுப்பட்டாய்மகனேதலைநாளின்விதிப்படியே (௪௬)

வில்லம்புசொல்லம்புமேதினியில்ரண்டுண்டு
வில்லம்பிற்சொல்லம்பேமேலதிகம்-வில்லம்பு
பட்டதடாவென்மார்பிற்பாண்டியாநின்குலத்தைச்
சுட்டதடாவென்வாயிற்சொல் (௪௭)

கரைக்குவடக்கிருக்குக்காளிகாளம்மைக்
கரைத்துவழிசாங்கைத்தொட்டப்பேய்-உரைத்தும்
மறைக்கவழியறியாதவன்பேயின்கையைக்
குறைக்குமாங்கூன்கத்திகொண்டு (௪௮)

காலம்புயனிகர்காராளர்நம்மைக்கடலுடுத்த
ஞாலக்குலமங்கைபெற்றதனாற்சதாகாலமுமால்
கோலத்திருமுகத்தாலேமுகந்தனன்கூடலிலே
சூலக்கரப்படையான்றலைமீதுசுமந்தனனே (௪௯)

கல்லங்காடுதனில்விளையாக்கடுகிலத்திற்றான்முளையா
அல்லனிருந்தகருங்கூந்தலணங்குக்கணங்குபோலாவாள்
செல்லன்றேவிமனைகடோறுந்தேடித்திருந்துங்காணாத
நெல்லஞ்சோறேகம்பஞ்சோற்றினைநீசுமந்துதிரிவாயே (௫௰)

கம்பர்கற்றுச்சொல்லி

மாவுறங்கினபுள்ளுறங்கினவண்டுறங்கினதண்டலைக்
காவுறங்கினவெண்கண்மானிருகண்ணுறங்கிலளையயோ
கோவுறங்குகடைத்தலைக்குலதீபவள்ளைமுதட்டிவாய்
ஆவுறங்குபசாரசஞ்சலமஞ்சலென்னவடுக்குமே (௫௧)

அம்பிகாபதியுங்கம்பரும்பாடியது

இட்டடிநோவவெடுத்தடிகொப்புளிக்க
வட்டில்சுமந்துமருங்கசையக்-கொட்டிக்
கிழங்கோகிழங்கென்றுகூறுவாளாகில்
வழங்கோசைவையம்பெறும் (௫௨)

அம்பிகாபதி,

சற்றேபருத்ததனமேகுலுங்கத்தரளவடந்
தற்றேயசையக்குழையூசலாடத்துவர்கொள்செவ்வாய்
நற்றேனொழுகநடனசிங்காரநடையழகின்
பொற்றேரிருக்கத்தலையலங்காரம்புறப்பட்டதே (௫௩)

வெங்கண்சிவந்துவெடிவான்முறுக்கிவெகுண்டெழுந்தன்
அங்கம்பிளக்கமருங்களிறேயன்றிரணியனைப்
பங்கப்படவுறங்கீண்டேயுதிரம்பருகுநர
சிங்கமிருக்குதுகாண்கெடுவாயென்றன்சிந்தையிலே (௫௪)

வீரமுண்டோமதன்கையம்பினாலவெந்துவிழுகைக்கு
நேரமுண்டோவஞ்சிநேர்பட்டகாலையினெஞ்சைவிடப்
போரமுண்டோசொலவொண்ணாதகாமப்பெருநெருப்புக்
கீரமுண்டோவையனேயென்னபாமினிச்சொல்வதே (௫௫)

உருகியுடல்கருகியுள்ளீரல்பற்றி
எரிவதவியாதென்செய்வேன்-வரியரவ
நஞ்சிலேதோய்ந்தநளினவிழிப்பெண்பெருமாள்
நெஞ்சிலேயிட்டநெருப்பு (௫௬)

வாணன்புகழ்க்கெல்லைவாழ்த்துவோர்நாவெல்லை
வாணன்புகழ்க்கெல்லைமண்ணெல்லை-வாணன்
படைக்கெல்லைதிக்கெல்லையந்தமிழ்தேர்வாணன்
கொடைக்கெல்லையேற்பவர்தங்கோள் (௫௭)

இல்லாதபல்லும்பறிபட்டகூந்தலுநீண்டகரிப்
பொல்லாவழக்குப்புடைவையுமாய்வெகுபூச்சியம்போய்ச்
செல்லாப்பணத்துக்குத்தேட்டுணுமற்றுத்தியங்கியொன்றும
இல்லாதபாவிதனக்கார்துணையொன்னிராட்டிகளே (௫௮)

வாசமலர்மடந்தையோல்வார்மருதவாணத்
தீசனடியாரறுபதின்மார் நேசத்

இரவலர்மேனீட்டுவர்கை யீண்டுலகையாளும்
புரவலர்மேனீட்டுவர்பொற்றாள். (௫௯)

இடைக்காடர்பாடியஊசிமுறி

ஆற்றங்கரையினருகிருக்குமாமரத்திற்
காக்கையிருந்துககககெனக்-காக்கைதனை
எய்யக்கோலில்லாமல் ०८० என்றானே
வையைக்கோனரின்மகன் (௬0)

ஏகம்பவாணன்மனைவி.

சேனைதழைபாக்கிச்செங்குருதிநீர்தேக்கி
ஆனைமிதித்தவருஞ்சேற்றின்-மானபரன
பாவேந்தர்வேந்தன்பதித்துநட்டானேகம்பன்
மூவேந்தர்தங்கண்முடி (௬௧)

கம்பர்விட்டுவெள்ளாட்டி.

நெற்படிவிளைகழனிபுடைசூழ்நெல்மலிவாழ்தச்சன்
கற்படிபனைதோளான்ஜெயரோகங்கணகணகணவன
விற்படிவாளுதலாள்வனைவிமின்மினிமினிமினிமி
சொற்படிவேலைசெயும்மவளோதுந்துமிதுரிதுரிதி (௬௨)

வட்டமதிபோலிருக்கும் வன்னிக்கொடிதாவுங்
கொட்டுவார்கையினின்றுகூத்தாடும்-சுட்டால்
ஆரகாவென்னுமேயம்பலசோமாசி
ஒருநாள்விட்டேனிதுரை (௬௩)

தென்னவாமீனவாசிவிலிமாறாமதுரை
மன்னவாபாண்டிவராமா-துன்னுஞ்
சுரும்புக்குத்தாளித்ததுய்யாதமிழ்நாடா
கரும்புக்குவேம்பிலேகண் (௬௪)

மாப்பந்தார்க்கல்லமுத்துவண்ணத்தார்க்கல்லவஞ்சி
வேப்பந்தார்க்காசைகொண்டுவிட்டாளே-பூப்பைந்தார்
சேர்ந்திருக்குநெல்வேலிச்சீவிலிமாறாதமிழை
ஆய்ந்திருக்கும்வீரமாறா (௬௫)

வேம்பாகிலுமினியசொல்லுக்குநீபுனைந்த
வேம்பாகிலுமுதவவேண்டாமோ-மீன்பாயும்
வேலையிலேவேலைவைத்தமீனவாநின்புயத்து
மாலையிலேமாலைவைத்தாண்மான் (௬ )

இலகுபுகழாரையெகம்பவாணன்
அலகைவருமவருமென்றஞ்சி-உலகறிய
வானவர்கோனசென்னிமிசைவன்கைவளையறிந்த
மீனவர்கோன்கைவிடான்வேம்பு (௪௭)

## பாண்டியன் மனைவி.

வேண்டியபோதின்னம்விரும்புமடந்தையரைத்
தீண்டியகையாலென்னைத்தீண்டாதே-பாண்டியா
முல்லைக்கதிபாமுகம்பார்த்தகலகின்று
சொல்லக்கடவதெல்லாஞ்சொல் (௪௮)

கலையான்முலைமுடிக்கண்வலிக்குள்ளாக்கும்
விலைமாதர்தாம்வரவிட்டாரோ-விலைமாதர்
கொங்கையிலேதோய்ந்தகுறைதீரத்துய்யசிவ
கங்கையிலேநீராடிவா (௪௯)

ஆ௨-செய்யுள்-௯௱௰௫.



இலக்கணக்கவிகளாகிய

## ஒட்டக்கூத்தரும் புகழேந்திப்புலவரும்

அவ்வவ்வமயங்களிற்கூறியதனிப்பாட்டுத்திரட்டு



கலைவாணிநீயுலகிலிருப்பதுவுங்கல்வியுணர்கவிவல்லோரைத்
தலையாகக்காப்பதுவுமவர்நாவில்வாழ்வதுஞ்சத்தியமேயன்றோ
சிலைவாணனிருந்தாயிரம்புயங்கடுணிந்துமுயர்சீவனுற்றனை
தலையாவிகொடுத்திடுஞ்செங்குந்தருயிர்பெற்றிடநீதயைசெய்வாயே

நிலைதந்தாருலகினுக்குமியாவருக்குமானமறைதீலைக்கத்தந்தார்
கலைதந்தார்வணிகருக்குச்சீவனஞ்செய்திடவென்றேகையிற்றந்தார்
விலைதந்தார்தமிழனுக்குச்செங்குந்தரென்கவிக்கேவிலையாகத்தான்
தலைதந்தாரெனுக்குமொட்டக்கூத்தனெனபெயரினையுந்தாந்தந்தாரே

பத்துக்கொண்டனதிக்கும்பதிப்போயுலையப்
பைம்பொற்றாரைச்சந்தப்புயிரண்டத்திடைநீள்
மத்துக்கொண்டுமதிக்குந்திரையாழிநெடுமால்
வடிவாகிப்புவிகைக்கொண்டருண்மானுபரணா
முத்துப்பந்தரினிற்குகுருலோகருஞ்சினவேன்
முருகற்கும்பொதியைக்கோருனிவர்க்குஞ்சடிலைக்

கொத்தர்க்கும்பதுமக்கொந்தயனுக்குமலதிக்
கூழைத்தண்டமிழுக்கேன்கொடியுங்காளமுமே (௩)

இன்றல்லோகம்பனிறந்தாளென்கவிதை
இன்றல்லோராசசபைக்கேற்குநாள் இன்றல்லோ
பூமடந்தைவாழப்புவிமடந்தைவீற்றிருக்க
நாமடந்தைநூல்வாங்குநாள் (௪)

இன்றல்லோகம்பனெழுந்தநாளென்கவிதை
இன்றல்லோராசசபைக்கேறுநாள்-இன்றல்லோ
பூமடந்தைவாழப்புவிமடந்தைவீற்றிருக்க
நாமடந்தைநூல்பூட்டுநாள் (௫)

கட்டளைக்கலித்துறை

மாங்குயிலால்வில்லிதன்னைப்பிறைக்கம்பவாரிதியால்
ஓங்கியபூமெல்லணையொன்றினும்பருர்மதியாற்
றீங்குறுமோநல்லெழில்குன்றுமோகொம்புசேர்கெடுமோ
காங்கையனேசொல்லகளங்கனைகம்மைக்காவலனே (௬)

காண்டகண்டதொனிக்கஞ்சியமான்கருங்கங்குலிலே
இரண்டவெள்ளத்திற்பிணமீதுசென்றனள்சேர்ந்தவனை
அரண்டவின்பங்கொடுமீளக்காம்பற்றவங்கொலுசால்
குரண்டகன்னத்திலுதைத்தனள்காணங்குலோத்துங்கனே (௭)

கோரத்துக்கொப்பேகனவட்டமம்மானை
கூறுவதுங்காவிரிக்குவைகையையோவம்மானை
ஆறுக்குவேம்புகிராருமோவம்மானை
ஆதித்தனுக்குநிகர்சம்புவியோவம்மானை
வீரர்க்குள்வீரனொருமீனவனேயம்மானை
வெற்றிப்புலிக்கொடிக்குமீன்கொடியோவம்மானை
ஊருக்குறந்தைநிகர்கொற்கையோவம்மானை
ஒக்குமோசோணாட்டுக்குப்பாண்டியநாடம்மானை (௮)

புகழேந்தி.

திருநெடுமாலவதாரஞ்சிறுபுலியோவம்மானை
சிவன்முடியிலேறுவதுஞ்செங்கதிரோவம்மானை
ஒருமுனிவனேரியிலேயுரைதெளிந்ததம்மானை
ஒப்பரியதிருவிளையாட்டுறைந்தையிலோவம்மானை
கரையெதிரேறியதுகாவிரியோவம்மானை
கடிப்பகைக்குத்தாதகியக்கன்னியோவம்மானை
பாலைப்படிந்ததுஞ்சோழன்பதந்தனிலோவம்மானை

பாண்டியனுர்பாக்கிரமம்பாசெளிதோவம்மானே (கூ)

ஒட்டக்கூத்தனும்சோழ்ராசனும்பாடியது

ஆடுங்கடைமணிநாவாசையாமலகில்லெங்கும்
நீடுங்குடையைத்தரித்தாபிராணிந்தநிணிலத்தில்
பாடும்புலவர்புகழொட்டக்கூத்தன்பதாம்புயத்தைச்
சூடுங்குலோத்துங்கசோழனென்றேயெனைச்சொல்லுவரே (௰)

ஒட்டக்கூத்தன்.

இன்னங்கலிங்கத்திகல்வேந்தருண்டென்றோ
தென்னன்றமிழ்நாட்டைச்சீறியோ-சென்னி
அகளங்காவுன்றனயிராவதத்தின்
நிகளங்கால்விட்டநிலைவு (௰க)

புகழேந்தி.

தென்னவன்றென்னர்பெருமான்றிறன்மதுரை
மன்னவன்கோக்களிற்றின் வல்லிக்கும்-வொன்னிநா
டாலிக்கும்வேந்தாமபயகுலன்மகளிர்
தாலிக்குமொன்றேதளை (௰உ)

புகழேந்தி.

சத்தம்மயிலும்புலவோர்கதலித்தண்டோட்டம்புகும்
பித்தனிவனென்பரென்னைக்கண்டார்பெருத்துப்பணைத்துத்
தத்தம்பிறகிடும்பார்வேந்தர்தங்கட்டமகுட
சத்தம்பசத்தங்காண்குங்குல்யானைச்சயதுங்கனே (௰ந)

ஒட்டக்கூத்தன்.

மாணிற்குமோவிந்தவாளரிவேங்கைமுன்வற்றிச்செத்த
கனிற்குமோவிவ்வெரியுந்தணன்முனகனைகடலின்
மீனுற்குமோவிந்தவெங்கண்சுறாமுனவ்வீசுபனி
தானிற்குமோவிக்கதிரவன்றோற்றத்திற்றோர்மன்னனே (௰ச)

புகழேந்தி.

மானவனானந்தவாளரிவேங்கைமுன்வற்றிச்செத்த
கானவனால்வெரியுந்தணன்முன்கனைகடலின்
மீனவனானந்தவெங்கண்சுறாமுனம்வீசுபனி
தானவனாக்கதிரவன்றோற்றத்தற்றோர்மன்னனே (௰ரு)

ஒட்டக்கூத்தன்

நாணேயினியுனைவேண்டுவதில்லைநளினமலர்த்
தேனேகபாடந்திறந்திடுவாய்திறவாவிடிலோ
வானேறனையவிரவிகுலாதிபன்வாயில்வந்தாற்
றானேதிறக்குநின்கையிதழாகியதாமரையே (௰௬)

புகழேந்தி.

இழையொன்றிரண்டுவகிர்செய்தநுண்ணிடையேந்துவள்ளைக்
குழையொன்றிரண்டுவிழியணங்கேகொண்டகோபந்தணி
மழையொன்றிரண்டுகைமானாபரணனின்வாயில்வந்தாற்
பிழையொன்றிரண்டுபொறாரோகுடியிற்பிறந்தவரே (௰௭)

ஒட்டக்கூத்தன்

வெள்ளத்தடங்காச்சினவாளைவேலிக்கமுகின்மீதேறித்
துள்ளிமுகிலைக்கிழித்துமழைத்துளியோடிறங்குஞ்சோணாடா
கள்ளக்குறும்பர்குலமறுத்தகண்டாவண்டர்கோபாலா
பிள்ளைமதிகண்டமயேதைபெரியமதியுமிழந்தாளே (௰௮)

ஔவையார்,

ஓட்டாவொருமதிகெட்டாய்.

புகழேந்தி.

பங்கப்பழனத்துழுமுழவர்பலவின்கனியைப்பறித்ததென்று
சங்கிட்டெறியக்குரங்கிளநீர்தனைக்கொண்டெறியுந்தமிழ்நாடா
கொங்கைக்கமராபதியளித்தகோவேராஜகுலதிலகா
வெங்கட்பிறைக்குங்கரும்பிறைக்குமெலிந்தப்பிறைக்கும்விழிவேலே

ஒட்டக்கூத்தன்

பன்னிருக்குந்தார்மார்பன்பூப்புகார்வாழ்வளியேம்
கன்னிருக்குக்கள்ளையுண்யுண்டுஞ்சோர்விலேம்-உள்ளபடி
சொல்லவாவாலிதுரோபதையைமூக்கரிந்த
நல்லாவாமாபாரதம்(வாலி-அரவங்கொடியையுடைய துரியோதனன்)

என்றுமெறுவேன்யானீசன்றிருமுடிமேல்
சென்றுவிளையாடுகின்றதீபமே-என்றும்
செருப்புக்குத்தோல்வாங்குஞ்சென்னியகளங்கன்
பொருப்புக்குத்தோலாப்புயம(தோல்-யானை) (௨௧)

வேளாளன்,

கோக்கண்டுமன்னர்குரைகடற்புக்கிலர்கோகனகப்
பூக்கண்டுகொட்டியும்பூவாதொழிந்திலபூமுழுதும்

காக்கின்றமன்னைகவியொட்டகூத்தநின்கட்டுரையாம்
பாக்கண்டொளிப்பர்களோதமிழ்ப்பாடியபாவலரே (௨௨)

கருமான்.

செல்லன்புதல்வன்றிருவேங்கடவென்செகத்குருவாங்
கொல்லன்கவியைகுறைசொல்லுவோரைக்குறடுகொண்டு
பல்லைப்பிடுங்கிப்பருந்தாட்டமாட்டிப்பகைவர்முன்னே
அல்லும்பகனுமடிப்பேன்கவியிருப்பாணிகொண்டே (௨௩)

அம்பட்டன்.

விண்பட்டகொக்கெனவெல்லும்வல்லூறின்விலவிலத்துப்
புண்பட்டநெஞ்சொடுமிங்குநின்றாய்பொட்டையாய்புகலாய்
கண்பொட்டையாயினுமம்பட்டனன்கவிவாணர்முன்னே
பண்பட்டசெந்தமிழ்நீயுந்திடுக்கிடப்பாடுவனே (௨௪)

குயவன்

மோனைமுத்தமிழ்நூம்மதமும்மொழி
யானைமுன்வந்தெதிர்த்தவனாரடா
கூனையுங்குடமுங்குண்டுசட்டியும்
பானையும்வனையங்குசப்பையல்யான் (௨௫)

தச்சவன்.

சொன்னசந்தக்கவியாவருஞ்சொல்லுவர்சொற்சுவைசேர்
இன்னசந்தக்கவியேதென்றபோதெதிர்த்தவரை
வன்னசந்தங்கெடவாயைக்கிழித்திந்தவாய்ச்சியினாற்
சுன்னசந்தங்களினிற்கவியாப்பைக்கடாவுவனே (௨௬)

தட்டான்,

திகிரிவட்டக்குடைச்செங்கோலயன்செழுஞ்சிலம்பிற்
பகுதியொட்டக்கூத்தபட்டனைநாணப்பணைக்கவியின்
மிகுதவொட்டத்தட்டிவிட்டகையோட்டிலுருக்கிக்குத்திப்
புதுதவொட்டித்தட்டிமேலனுகாவண்ணம்போர்செய்வனே ()

ஒட்டக்கூத்தனும்புகழேந்தியும்

வென்றிவளவன்விறல்வேந்தாதம்பிரான்
என்றுமுதுகுக்கிடான்கவசம்-துன்னும
வெறியார்தொடைகம்ழுமீனவர்கோன்கைவேல்
எறியான்புறங்கொடுக்கினென்று (௨௮)

பழியும்புகழுமெவர்க்குமுண்டாமிந்தப்பாரிலுனக்
கழியுஞ்சிலையுங்கயலுமென்றால்களங்கதுங்கா

மொழியும்பொழுதெங்கள்பெண்சக்ரவர்த்திமுகத்திரண்டு
விழியும்புருவமுமாகியக்கோவினவெல்கின்றதே (உக)

இக்குவெட்டுக்கயந்துக்கமுற்றுத்திடுக்கிட்டலற
மைக்கடற்குட்சரந்தைக்கவிட்டோர்க்கிடமாமதுர
இக்குமுற்றக்கணுச்சற்றுவிட்டுத்தெறித்திட்டமுத்தைக்
கொக்குமொக்கிவிக்கிக்கக்குமச்சோலைக்குறுங்குடியே (உ௨)

ஆ-செய்யுள்-௲௪ரு



## கவி வீரராகவமுதலியார்

தேன்பொழிந்தவாயன்றிருவேங்கடத்துடனே
ஏன்பிறந்தான்கண்ணனுக்கினியானே-வான்சிறந்த
சீதேவியாருடனேசெய்யதிருப்பாற்கடலில்
மூதேவியேன்பிறந்தாண்மூன் (க)

இம்பர்வானெல்லையிராமனையேபாடி
என்கொணர்ந்தாய்பாணனீயென்றாள்பாணி
வம்பதாங்களபமென்றேன்பூசுமென்றாள்
மாதங்கமென்றேன்யாம்வாழ்ந்தேமென்றாள்
பம்புசீர்வேழமென்றேன்றின்னுமென்றாள்
பகடென்றேனுழுமென்றாள்பழனந்தன்னைக்
கம்பமாவென்றேனற்களியாமென்றாள்
கைம்மாவென்றேன்சும்மாகலங்கினளே (உ)

இல்லைனுஞ்சொல்லறியாதசீகையில்வாழ்தானனைப்போ யாழ்ப்பாணன்யான், பல்லைவிரித்திருந்தக்கால்வெண்சோறும்பழந்தூசும் பாலியாமற் செல்லைனைக்கேதலைஞ நால்வாயைப்பரிசென்று கொடுத்தான்பார்க்குள், தொல்லையென்றொருவாய்க்கு நால்வாய்க்குமிரையெங்கேதுரப்புவேனே (௩)

மூன்றுனிருவர்க்கும்யாக்கையொன்றாகமுயங்கினமால்
பின்னாட்பிரிவன்விரினவை யென்றாயினம்பேசலுறுப்
இநாட்கொழுநன்மனைவியென்றாயின்மின்னருமோர்
சினைனுரிலெப்படியோவையநீயின்றுசெப்புகவே (௪)

வாழுயிலங்கைக்கோமானில்லைமானில்லை
ஏழுமராமரமோவிங்கில்லை ஆழி

அலையடைத்தசெங்கையபிராமாவின்று
சிலையெடுத்தவாரெமக்குச்செப்பு (௫)

செஞ்சுடரின்மைந்தனையுந்தென்னிலங்கைவேந்தனையும்
பஞ்சவரிற்பார்த்தனையும்பாரதே-விஞ்சு
விரதமேபூண்டிங்கமேதினியையாண்ட
பரதனையும்ராமனையும்பார் (௬)

வட்டவைக்கனலைப்பிழிந்துகொண்டுமற்றுமொழிகால் வடித்தெடுத்து
வாடைத்துருத்திவைத்தூதிமறுகக்காய்ச்சிகுழம்புசெய்து
புடவிக்கயவர்தமைப்பாடிப்பரிசுபெறுமற்றிரும்பிவரும்
புலவர்மனம்போற்கடுநெருப்பை புழுகென்றிறைத்தாற் பொறுப்
அடவிக்கதலிப்பசுங்குருத்தைநச்சுக்குழலென்றஞ்சியஞ்சி [பாரோ
அஞ்சொற்கிளிகளபஞ்சரம்விட்டகலாநிற்குமகளங்கா
இடமுக்கடவாரணமுகைத்ததேவேதேவசிங்கமே
இக்குவிசயஞ்செலுத்திவருசெங்கோனடாத்துமெங்கோனே (௭)

மாதரணிமென்முலைதோய்மாராசிதம்பரனு
மாதரணிராசர்மகிழ்மாவசண-மாதர்
மறுகிடத்தேயம்பொன்மடவார்பழிக்கநெஞ்ச
மறுகிடத்தேங்குந்துரைப்பெண்வா (௮)

சொல்லும்ல்லுபகலுஞ்சோறுங்கிடைகிடக்குங்
கல்லுமுருகககனிந்தாற்றும்·புல்லியனை
விண்கலக்குங்கீர்த்திவேள்சிதம்பரக்குமுறை
பெண்கலக்கங்கொண்டுநின்றன்பேர் (௯)

வந்தனந்தமென்பூரணங்கேய்ந்தபாயப்பர
வந்தனம்விம்மிச்சோர்ந்தான்வாகோடு-வந்தனங்கள்
அன்னமனங்கொள்ளாமலான்சிதம்பரக்குமுறை
அன்னமனங்கொண்டுயவேயாக்கு (௰)

மாவாரிமுத்தவெண்பன்மாதுமயிலைத்தனிசோ
மாவாரிமுத்தனித்தனைபோக-மாவுஞ்
சிதம்பரவையாநீதிக்குநேர்பூமா
சிதம்பரவையாநீதிக்கு (௰௧)

பங்கஜமேன்மேவியசௌபாக்கியசுபமானவித்த
அங்கஜவேள்வெங்கணையாலாவிவெந்த-மங்கை
பாரந்தங்கம்பாரவுமாதினையாள்கோடிகாமன்க
காரணசிதம்பரயோகா (௰௨)

இன்னங்கலைமகள்கைமீதிற்புத்தகமேந்தியந்தப்
பொன்னம்பலர்தனிற்புக்கிருந்தாளென்னபுண்ணியமோ
கன்னன்களந்தைக்கவிவீரராகவன்கவியிலே
தன்னெஞ்சமேடெனக்கற்றுணருமுத்தமிழையே. (௰௫)

முன்னாட்டுத்தவமுனியுஞ்சேடனும்வான்மீகனுமுன்னில்லாமற்
றென்னாட்டுமலையிடத்தும்பாரிடத்தும் புற்றிடத்துஞ் சென்றுசேர்ந்
இன்னாட்டுப்புலவருனக்கெதிரிலையேகவிவீரராகவாநீ [தார்
பொன்னாட்டுப்புலவருடன்வாதுசெய்யப்போயினை யேபுகலுவாயே

கோளரவேந்துலகிலிந்தப்புதுமையுண்டோவெனமொழிந்தகுருவுணு
கேளாய், ஆளரைவந்தமைத்தோய்ந்தகற்புடையாய்பாஞ்சாலியணை
ந்தவீமன், வாளரிபோலருகிருக்கமலயவெற்பிலிருந்துவந்தமாமனு
ரைச்சாளரவாசலைத்திருந்துவாவழைத்துமுலையாரத்தழுவினாளே

பணியாரந்தோசையிலக்கொங்கைதோய்ந்திடப்பார்ப்பர்பல்லி
பணியாரந்தோசையிலாச்னெந்துவாய்விறப்பார்களென்றே
பணியாரந்தோசைமுன்னேனுக்கிட்டேத்திப்பழனிச்செவ்வேள்
பணியாரந்தோசைவராகாரன்னோர்க்கெனவயாவமிதே (௰௬)

வீரஞ்சொரிகின்றபிள்ளாயுனக்குப்பெண்வேண்டுமென்றால்
ஆருவகொடாருக்களப்பன்கபாலியம்மான்றிருடன்
ஊருஞ்செங்காடுநின்றன்முகம்யானையுனக்கிளையோன்
பேருங்கடம்பனுன்றாய்நீலிநிற்கும்பெருவயிறே (௰௭)

கட்டுச்சோற்றைப்பறிகொடுத்தபோதுபாடியது

சீராடையற்றவைரவன்வாகனஞ்சேரவந்து
பாராருநான்முகன்வாகனந்தன்னைமுன்பற்றிக்கௌவி
நாராயணனுயிர்வாகனமாயிற்றுநம்மைமுகம்
பாரான்மைவாகனன்வந்தேவயிற்றினிற்பற்றினனே (௰௮)

மைவாகனன் - அக்கினிதேவன்

பாண்டியன்மாலைகண்டாய்மகளேசினைப்பார்த்தவர்க்கு
வேண்டியவின்பமிகவுருமோவெண்ணெயேதிருடித்
தாண்டிக்குதித்தகற்கோதண்டராமனறடவரைமேல்
ஆண்டியிருப்பிடந்தாதனிருப்பிடமானபின்னே (௰௯)

சோலையுங்காத்துநல்லானையுங்காத்துத்துரோமனைத்தன்
தானையுங்காத்தனடந்தானையுங்காகத்துத்தடத்தகல்
மானையுங்காத்தனுமானையுங்காத்துமடுவில்விழும்
ஆனையுங்காத்தவனேயெனைக்காப்பதரிதல்லவே (௨௰)

பொய்யருக்குப்பொய்யுரைத்தால்வெற்றியாமவருக்குப் பொய்யாகாது. மெய்யருக்குப்பொய்யுரைத்தாற் றேய்பிறைபோற்றலங்குறைவுமிடியுண்டாகும். தூய்யதாய்தந்தையர்க்குப்பொய்யுரைத்தால்வறுமைபிணிதொலையாவென்றும். உய்யவருடேசிகற்குப்பொய்யுரைத்தானரகமதுவுண்மைகாணே. (௨௧)

ஆ௨ - செய்யுள் - ௨௧௬.



## படிக்காசுத்தம்பிரான

அடகெடுவாய்பலதொழிலுமிருக்கக்கலவி
அதிகமென்றேகற்றுவிட்டோமறிவில்லாமல்
திடமுளகோகனமாடகக்கழைக்கூத்தாடிச்
செப்பிடுவித்தைகளாடத்தெரிந்தோமில்லைத்
தடமுலைவேசையராமப்பிறந்தோமில்லைச்
சனியானதமிழைவிட்டுத்தையலார்தம்
இடமிருந்துதூதுசென்றுபிழைத்தோமில்லை
என்னசென்மமெடுத்துலகிலிரக்கின்றோமே (௧)

பெற்றாளொருபிள்ளையென்மனையாட்டியப்பிள்ளைக்குப்பால்
பற்றாதுகஞ்சிகுடிக்குந்தாமல்லபாலிரக்கச்
சிற்றாளுமில்லையிவ்வெல்லாவருத்தமுந்தீரவொரு
கற்றாதரவல்லையாவல்லையாவல்லமாநகர்க்காளத்தியே (௨)

வழிமேல்விழிவைத்துவாடாமலென்மனையாளுமற்றோர்
பழியாமற்புள்ளுறயும்பாலென்றாமழகிரெனுஞ்சொல்
மொழியாமலென்னைவரவிட்டபாவிமுசித்துச்சதை
கழியாமலாவளித்தாய்வல்லமாநகர்காளத்தியே (௩)

### சீதக்காதிபேரில்

ஓர்தட்டிலேபொன்னுமோர்தட்டிலேநெல்லுமொக்கவிற்கும்
கார்தட்டியபஞ்சகாலத்திலேதங்கள்காரியப்போர்
ஆர்தட்டினுந்தட்டுவாராமலேயன்னதானத்துக்கு
மார்தட்டியதுரைமால்சீதக்காதிவரோதயனே (௪)

நேசித்துவந்தகவிராசர்க்கட்குநித்தநித்தம்
பூசிக்குமின்கைப்பொருளொன்றுமேமற்றப்புல்லர்பொருள்
வேசிக்குஞ்சந்தடப்பார்க்கும்வேசிகருவேலைசெய்யுந்
தாசிக்குமாகுங்கண்டாய்சீதக்காதிதயாநிதியே (௫)

ஈயாதபுல்லரிருந்தென்னபோயென்னவெட்டிமரம்
காயாதிருந்தென்னகாய்த்துப்பலனென்னகைபரப்பிப்
போயாசகமென்றுரைப்போர்க்குச்செம்பொன்பிடிபிடியா
ஓயாமலீபவன்வேள்சீதக்காதியொருவனுமே (௬)

காய்ந்துசிவந்ததுசூரியகாந்திகலவியிலே
தோய்ந்துசிவந்ததுமின்னார்நெடுங்கண்கடொல்பலநூல்
ஆய்ந்துசிவந்ததுபாவாணர்நெஞ்சமனுதினமும்
ஈய்ந்துசிவந்ததுமால்சீதக்காதியிருகரமே (௭)

தேட்டாளன்காயற்றுரைசீதக்காதிசிறந்தவச்ர
நாட்டான்புகழ்க்கம்பநாட்டிவைத்தான்றமிழ்நாவலரை
ஓட்டாண்டியாக்கியவர்கடம்வாயிலொருபிடிமண்
போட்டானவனுமொளித்தான்சமாதிக்குழிபுகுந்தே (௮)

வேல்கொடுத்தாய்திருச்செந்தூர்க்கமயிலின்மீதுவைக்கக்
கால்கொடுத்தாய்நின்மணவாளனுக்குகவுணியர்க்கும்
பால்கொடுத்தாய்மதவேளுங்குமூவர்பயப்பட்டச்செங்
கோல்கொடுத்தாயன்னையேயெனக்கேதுங்கொடுத்திலையே (௯)

பொல்லாதமூர்க்கருக்கெத்தனைதான்புத்திபோதிக்கினும்
நல்லார்க்குண்டானகுணம்வருமோநடுராத்திரியிற்
கல்லாப்புடவைக்குளிர்தாங்குமோநடுச்சந்தையினிற்
செல்லாப்பணஞ்செல்லுமோதில்லைவாழுஞ்சிதம்பரனே (௰)

மூவேந்தருமற்றுச்சங்கமும்போய்ப்பதின்மூன்றொடிரு
கோவேந்தருமற்றுமற்றொருவேந்தனுடையுமாற்றுப்
பாவேந்தர்காற்றிலிலவம்பஞ்சாகப்பரக்கையிலே
தேவேந்திரதாருவொத்தாயரகுநாதசெய்துங்கனே (௰௧)

முன்னநின்னன்னைமுலையூட்டிமையிட்டுமூக்குசிந்திக்
கன்னமுங்கிள்ளையநாளல்லவேயென்னைக்காப்பதற்கே
அன்னமுமஞ்ஞையும்போலிருபெண்கொண்டிவாண்பிள்ளைநீ
இன்னமுஞ்சின்னவன்றோசெந்தூரிலிருப்பவனே (௰௨)

முற்கரையப்பரையேறவிட்டாட்கொண்முதல்வருள்ளக்
கற்கரைக்கும்படிபோதித்திருங்கருணைக்கடலைச்
சிற்பரைக்குட்டியைவெங்கெற்குந்திக்குஞ்செங்கநம்பின்
சர்க்கரைக்கட்டியைக்கண்டேன்செந்தூரனுந்தானத்திலே (௰௩)

சின்னஞ்சிறுபிள்ளை செங்கோட்டுப்பிள்ளை சிவந்தபிள்ளை
பொன்னன் மணிப்பிள்ளை பூலோகமெங்கும் புகழும்பிள்ளை
சொன்னெஞ்சுழல்கின்றசூரனை வென்றசொக்கேசர்பிள்ளை
வன்னக்கிளிப்பிள்ளை செந்திக்குறத்திற்குமாப்பிள்ளையே (௰௪)

நாட்டிற்சிறந்ததிருமலையாதுங்கநாகரிகா
காட்டில்வனத்திற்றிரிந்துழலாமற்கலைத்தமிழ்தேர்
பாட்டிற்சிறந்தபடிக்காசனென்றொருபைங்கிளியைக்
கூட்டிலடைத்துவைத்தாயிரைதாவென்றுகூப்பிடுதே (௰௫)

விண்ணுக்குமண்ணுக்கும் பேராய்விளங்குதேவேந்திரனென்னு
கண்ணுக்கினியதுரைசீதக்காதிகமலகிர்
தண்ணுக்கிசைந்தவதனசந்த்ரோதயசாமியிந்த
மண்ணுக்குள்ளேயொளித்தான்புலவோர்முகம்வாடியதே (௰௬)

மறந்தாகிலுமரைக்காசுங்கொடாமடமாந்தர்மண்மேல்
இறந்தாலவதென்னவிருந்தாலவதென்னவிறந்துவிண்போய்ச்
சிறந்தானுங்காயற்றுரைசீதக்காதிதிரும்பிவந்து
பிறந்தாலொழியப்புலவோர்தமக்குப்பிழைப்பில்லையே (௰௭)

என்னனைக்கன்றுமுத்தனைகுனிக்குமிறையனையனைக்குமேயன்று
மன்னனைக்கன்றிப்பின்னனைக்குதவாவன்புளால்வருந்திவாடுவனோ
முன்னனைக்கொன்றுபின்னனைபுரந்தமுதுபகையவன்பிதாவுறுமற்
கன்னனைக்கொன்றுவிசயனைப்புரந்தகவுத்துவாகாயலாதிபனே (௰௮)

கல்லடிக்குமுளியிரண்டுகாதடிக்குளடிப்பதெனக்கவிதைகேட்டு
பலலடிக்கடுகிடெனப்பரையடிக்குநெஞ்சர்தமைப்பாடுவேனோ
வில்லடிக்கும்பிரம்படிக்குக்கல்லடிக்கும்விரும்பிநின்றமெய்யனீன்ற
செல்லடிக்குந்தடவரையிற்சேறடிக்கவலையடிக்குஞ்செந்திலானே ()

குட்டுதற்கோபிள்ளைப்பாண்டியனிங்கில்லைக்
குறும்பியளவாக்காதைக்குடைந்துதோண்டி
எட்டினமட்டறுப்பதற்கோவில்லியில்லை
இரண்டொன்றாமுடிந்துதலையிறங்கப்போட்டு
வெட்டுதற்கோகவியொட்டக்கூத்தனில்லை
விளையாட்டாக்கவிதைதனைவிரைந்துபாடித்
தெட்டுதற்கோவறிவில்லாத்துரைகளுண்டு
தேசமெங்குப் புலவரெனத்திரிவலாமே (௨௰)

## சீதக்காதியின்பேரில் தாசிபாடியது

இனங்கொடுக்குங்கொடையானே
  தென்காயற்பதியானேசீதக்காதி
இனங்கொடுத்தவுடைமையல்ல
  தாய்கொடுத்தவுடைமையல்லவெளியாளாசை
மனங்கொடுத்துமிதழ்கொடுத்துமபிமானந்
  தனைக்கொடுத்துமருவிரண்டு
தனங்கொடுத்தவுடைமையெல்லாங்கள்ளர்கையிற்
  பறிகொடுத்துத்தவிக்கின்றேனே (உக)

ஆக -செய்யுள்-ஈஅள.



## சவ்வாதுபுலவர்.

கிளையாளன்சேதுபதிரகுநாயகன்கிஞ்சுகமாய்
இளையார்கலவியிடத்துநம்பிசரிடத்துமென்றும்
வளையாதபொன்முடிசற்றேவளையுமகுடமன்னர்
தளையாடியகையிற்காளாஞ்சியேந்துஞ்சமயத்துமே (க)

பானுகிரணம்பார்க்கும்பங்கேருகநிலவு
தானும்வரப்பார்க்குஞ்சகோரங்கள்-வானமரும்
மையைப்பார்க்கும்மயில்கண்மாவிசயானந்தரங்கன்
கையைப்பார்க்குப்புலவோர்கண் (உ)

பாலேபிலான்பின்னங்காற்பஞ்சுளியென்றேசுளிப்பாள்
காலேயிலான்பின்னென்படுவாளோ-சோலையிலே
ஆடுமயிற்பிரம்பூரானந்தரங்கதுரை
கூடுநனிலென்னிளமின்னாள்(பஞ்சு- உளியென்றுகோவிப்பான் (௩)

அலையான்பவகேடாளுநடனுங்காயான்
இலையென்பதோர்நாளுமில்லை-கலைநேர்ந்த
சாலைமுத்துகிருஷ்ணனருள்சற்குணசிந்தாமணியைச்
சோலையென்றுசொன்னவரார்சொல் (௪)

செல்லப்பன்கச்சியிலேசேர்ந்ததற்பிறுமணிகள்
நல்லதருமேகநவநிதியந் சொல்லலே

முட்டின்றியொன்றிரண்டுமூன்றுநான்கைந்தாறேழ்
எட்டொன்பான்பத்தானவே (௫)

கச்சிசொல்லப்பன்றேன்றினபின் அவனோடுசேர்ந்து ஆ-ஒன்று இரண்டாயின. மணி மூன்றுநான்காயின-தரு ஐந்து ஆறாயின, மேகம் ஏழு-எட்டாயின-நிதியம்ஒன்பதுபத்தாயின.

ஆக -செய்யுள்-௩௯௨.



## காளிமுத்து.

நெல்லைச்சொன்னுபரணத்தைக்கைம்மாவைநிதநிதமும்
வெல்லச்சொன்னுவலர்க்கியுங்குழந்தைவிசயநின்பாற்
செல்லச்சொன்னுளென்னைப்போதென்மையலைத்தீர்த்திடென்று
சொல்லச்சொன்னுளந்தமின்னுள்பன்னுண்மலர்ச்சோலையிலே (௧)

பழுத்தான்மரத்திற்பறவையைப்போலநற்பாவலர்க்குக்
கொழித்தான்வழங்குங்குழந்தையென்கொங்கையைக்கூறுகிறுள்
அழுக்காதவேலையில்வெந்நீர்பன்னீர்மதியும்மழல்சேர்
கொழுத்தான்மதனுங்கொழுத்தான்மருவக்குறிப்பறிந்தே (௨)

பொன்னூர்மருமத்தன்பூம்பாவைவேலப்பபூபனருள்
மன்னுகுழந்தைக்குருநாதநீதவரோதயனே
பன்னுண்மலர்க்குழற்பின்னுளென்னுளும்பரிந்தணைய
நன்னுளிந்நாள்வாச்சொன்னுண்மின்னுண்மணநாளென்னவே (௩)

மாகமழைக்கரன்பூம்பாவைவேலப்பன்மைந்தன்மின்னுர்
மோகன்குழந்தைக்குருநாதன்வெற்பினின்மோடிவைத்துப்
பாகமொழிக்குழன்மாதேவிரித்துப்படமெடுக்கும்
நாகமறைத்துக்குழனமக்கீதனலமல்லவே (௪)

போதத்தைமேவுமயிலைக்குழந்தைக்குப்போர்மதன்செய்
கேதத்தையுங்குயிலுதத்தையுந்தனக்கிண்ணத்திறு
மோதத்தையுந்துயிலாதத்தையும்மவன்மூட்டுதென்றல்
வாதத்தையுந்தரியாதத்தையுஞ்சொல்லிவாதத்தையே (௫)

வண்டாங்கிசைபயின்மாலையின்வேலப்பன்மைந்தனிதி
கொண்டான்கிளையைவளர்த்தான்குழந்தைக்குவட்டின்மின்னே
பண்டாங்கிசையிலண்மால்கொண்டுபாம்பன்குளத்திடைக்
கண்டாங்கியைக்கிழித்தாலென்னபாவங்கருதுவதே (௬)

பாம்பன் - அரவாபரணன் - குளத்தினடுக்கண் - நெற்றிக்கண்ணாகிய அக்கினி - தாங்கி, அவன் வாகனமாகிய ஆடு.

வனக்கொந்தள் வஞ்சிபூஞ்சோலைத்தஞ்சிவளருமிரு
தனக்குன்றுசெய்யுந்தொழில்சொல்லவோதமியேனைக்கண்டாற்
கனக்கும் புளகிக்கும்பாரிக்கும்பூரிக்குங்கண்கறுக்குஞ்
சினந்துந்தனக்குமெனக்குமுண்டாக்குந்தினஞ்சண்டையே (எ)

ஆக - செய்யுள் - ௰௬௬



பாண்டியன கலித்துறை.

சராராஜசம்புவைரியென்மாதுசரீரமெல்லாம்
பொராராசரத்துக்கிவள்பொருட்டோபசும்போற்கிரண
சுரராசதிவ்யகிரீடவிபாடதனுடித்தடக்கைப்
பரராஜராவணராமாபராக்கிரமபாண்டியனே (க)

காளைமுகிற்குலமெல்லாம்விளங்குகடிந்திட்டநீ
வேளையுமப்படிச்செய்திலையேவிளைநெல்வயலில்
வாளைகுதித்துவளர்பூங்கமுகின்மடலொடியப்
பாளைமுறிக்குந்துறைவாபாராக்ரமபாண்டியனே (உ)

ஆர்க்குங்குளிருநிலவுயர்கோனின்னலங்கல்பெறு
வார்க்குங்கும்முலையாட்கனலாகும் வடக்குந்தெற்கும்
மேற்குங்கிழக்குமொருவெள்ளைப்பாய்நின்றுவிண்ணையெட்டிப்
பார்க்கும்புகழுக்கிறைவாபராக்ரமபாண்டியனே (௩)

கூரம்பொருத்தவிழியாள்கதலிக்குருத்திவிட்ட
ஈரம்பொறுக்கவறிந்திலளேயிந்திரனிட்டசெம்பொன்
ஆரம்பொறுத்தபுயமீதிலாயிரநாவுரக
பாரம்பொறுத்தபுயலேபராக்ரமபாண்டியனே (௪)

வெறிக்குங்குமக்கொங்கைமீதேயிளம்பிறைவெள்ளைநிலா
எறிக்கும்பொழுதுவந்தைதாயிலேயேயிலங்காபுரியைக்
குறிக்கின்றராவணன்பொன்முடிபத்துங்குரங்கைவிட்டுப்
பறிக்கிறசண்பகமாறுபராக்ரமபாண்டியனே (௫)

சுரும்போய்க்கும்வாட்கண்ணிமங்காளர்கண்கொண்டுசுட்டுவிட்ட
பெரும்பேய்க்குவேப்பிலைக்காப்புதவாய்பிணர்சேர்பசுங்கோங்

கரும்பேய்க்குமென்முலைப்பாரமுநூட்டியடர்ந்துகொல்ல
வரும்பேய்க்குவாணுதவுங்குலசேகரமன்னவனே (௬)

பூணித்திலத்துப்புயல்வீரமாறன்புகல்கவிக்கு
நாணிப்புலவர்செல்லாதென்செய்வாரிந்தநானிலத்தில்
ஆணிக்கனகமணிந்தரிற்பூமணம்யார்கொள்ளுவார்
மாணிக்கந்தித்திக்கிலென்னாகுமற்றமதுரங்களே (௭)

எண்ணீர்மைநாலூர்கசத்தியனாமிவனென்பதெல்லாம்
வெண்ணீர்மையன்றிவிரகலலவேயிழ்வியனுலகிற்
பண்ணீர்மைதேரும்பராக்கிரமமாறன்பதங்கழுவுந்
தண்ணீர்குடித்தல்லவோகும்பயோனிதமிழ்க்கற்றதே (௮)

காம்புவளம்புக்கதோளாட்குநின்றன்கழுத்திலிட்ட
வேம்புதனக்கும்விதியில்லையோவெகுண்டாச்சியர்கள்
தாம்பினடிக்கவுரலோடுகட்டத்தலைப்பட்டுச்சிப்
பாம்பினடிக்கின்றமாலேபராக்ரமபாண்டியனே (௯)

கடந்தூங்குவேழப்பிடர்க்கேவரக்கண்டுகண்கண்முத்து
வடந்தூங்கவாடுங்கிளிக்கென்செய்வேன்மணிவாய்திறக்க
விடந்தூங்குபாம்பின்படத்தின்மிசைதிமிதித்தியெனப்
படந்தூங்கவாடும்புயலேபராக்ரமபாண்டியனே (௰)

சடம்பழுக்குங்கிழட்டுக்குருகேர்தலைசாய்த்துநின்று
முடப்பழுக்குங்கைதைநற்றுறையிற்றெங்குமுப்புடைக்காய்
குடம்பழுக்குங்கொற்கையாங்குலசேகரன்கூடலிலென்
உடம்பழுக்குஞ்சிறையும்பழிகாருணர்ந்திலரே (௰௧)

மற்றொப்பிலாக்கொடைச்சண்பகமாறவரோதயனின்
வெற்றிக்கிரண்டுண்டடங்காதகாரியமேருகிரிச்
சுற்றிலுங்கீர்த்தியடங்காதுநின்னுடைத்தோடமூவாக
கற்றைக்குழலிக்குமாலடங்காதிதுகைகண்டதே (௰௨)

ஒருவாணுதல்பண்டுளங்களிக்கவுயர்வான்முகடுகிழித்தெழுந்து
மருவாதருவின்மரங்கொணர்ந்தமதுரைவடிவேலதிவீரா
அரவார்வேம்பின்பசுங்கண்ணியப்தியிறைவிக்கருளென்று
இரவாதிருக்கநீயளித்தற்கிரங்காதிருந்தாயிதுநானே ௰௩)

## இரட்டையர்

தேங்குபுகழாங்கூர்சிவனேவல்லாளியப்பா
நாங்கள்பசித்திருக்கைநியா[illegible]காணும்

கூறுசக்குடேோன்முரசுகொட்டோசையல்லாமற்
சோறுகண்டமூளியார்சொல் (௰௪)

மூடாமுன்னேபாடன்மொழிந்தாலறிவரோ
ஆடெடுத்ததென்புலியூரம்பலவா-ஆடகப்பொற்
செந்திருவைப்போலணங்கைச்சிங்காரித்தென்னபயன்
அத்தகனேநாயகனுனல் (௰௫)

வேயின்றமுத்தர்தமைவெட்டினனேயிடையன்
தாயின்றமேனிதயங்கவே-பேயாகேள்
எத்தனைநாளெனறேயிடறுவான்யாற்றிடத்தை
அத்தனையும்வேண்டுமவர்க்கு (௰௬)

மாங்காட்டுவேளாளன்மகளைமருமகன்பாற்
போகாட்டிலின்பம்புணர்ந்தானே-ஆங்கானும்
மக்கண்மெய்தீண்டலுடற்கின்பமற்றவர்
சொற்கேட்டலினபஞ்செவிக்கு (௰௭)

குன்றுங்குழியுங்குறுகிவழிநடப்ப
தென்றுவிடியுமெமக்கென்கோவே-ஒன்றுங்
கொடாதானைக்கோவென்றுங்காலென்றுங்கூறில்
இடாதோநமக்கிவ்விடி (௰௮)

காளமேகப்புலவரும் இரட்டையரும்

நாணென்றுநஞ்சிருக்குநற்சாபங்கற்சாபம்
பாணந்தான்மண்டின்றபாணமே தாணுவே
சீராருர்மேவுஞ்சிவனேநீயெப்படியோ
நேரார்பிரமெரித்தநேர் (௰௯)

ஆசுகவியாலகிலவுலகெங்கும்
வீசுபுகழ்க்காளமேகமே-பூசுரா
விண்கொண்டசெந்தணலாய்வேகுதேயையையோ
மண்டின்றபாணமென்றவாய் (உ௰)

கட்டளைக்கலித்துறை

புராதனமானதமிழ்ப்புலவீரிந்தப்புன்குரங்கு
மராமரம்விட்டிங்குவந்ததென்னேவகைகேட்டிலையோ
தராதலம்வென்றதமிழ்மாறனையுந்தன்றம்பியையும்
இராகவனென்றுமிலக்குவனென்றுமிருந்ததுவே (உ௧)

ஆக-செய்யுள்-௪௬



## ஒப்பிலாமணிப்புலவர்பாடிய - அகவல்



ஆடெரிபடர்ந்தகோடியரடுப்பில
ஆம்பிபூப்பத்தேம்பசியுழல
இல்லிதூர்ந்தனபொல்லாவறுமுலே
சுவைதொறுஞ்சுவைதொறும்பால்காணமற்
குழவிதாய்முகநோக்க
மனைவியென்முகநோக்கயாமும்
நின்முகநோக்கிவந்தனங்குமுண (க)

### குமுணராஜன்.

அந்நாள்வந்திலையருங்கவிப்புலவோய்
இந்நாள்வந்துநீநொந்தெனை யடைந்தாய்
தலைதனைக்கொடுபோய்த்தம்பிகைக்கொடுத்ததன்
விலைதனைமீட்டுன்வெறுமைநோய்களையே (உ)

மாங்குடியிலேவாழுமகுடத்தியாகியுலக்
கேந்துகழும்போவிரண்டுளதே - வேந்தர்
முடித்தழும்புன்காலிலேமுத்தமிழோர்க்கீயும்
படித்தழும்புன்கையிலேயார் (ங)

வெம்புங்காலெவெதும்புவிழுஞ்சிரம்
செம்பொன்கோடிவிலையெனச்சிந்தித்தான்
உம்பர்நாடுமுலகினுந்தேடினும்
எம்பிபோலெமக்கியாவருரியரே (ச)

ஆறுபெருக்கற்றருந்திடர்தான்பட்டாலும்
ஊறலமையாதோஉலகாற்றத் - தேற
வறியையேயாளுமென்கவியைமாற்றச்
சிறியையோசிர்க்குமுணசெப்பு (ரு)

வில்லைவளையாதேமீசைமுறுக்கிச்சினத்து
முல்லைமலரம்பையென்மேன்மோதாதோ - நில்லடா
வந்தாரடாமுருகர்வந்துகடப்பந்தாரைத்
தந்தாரடாமன்மதா (சு)

செந்திற்குமாரன்றிருவழகைக்கண்டவுடன்
வந்திகுமாரன்வனைதக்கிமுன் - அந்திக்கு

முன்னமேசென்றெனதுமோகமெலாஞ்சொல்லிவந்தால்
அன்னமேகும்பிடுவேன்யான் (௭)

தங்கடனமிருக்கத்தார்வேந்தரெல்லோரும்
எங்கடனத்துக்கேயிச்சிப்பார்-எங்கடனம்
கச்சிருக்கும்பாலிருக்குங்காமபாணங்களபட்டுப்
பிச்சிருக்கும்வேண்டாம்பிளாய் (௮)

இடுவோர்சிறிதிரங்கிப்போர்பெரிது
கெடுவாய்நமனேகெடுவாய்-படுபாவி
கூலத்துநாரணனைக்கொல்றுயேகற்பகப்பூங்
காவெட்டலாமோகரிக்கு (௯)

மையூருங்கண்ணார்மயங்கப்பொருகரும்பு
கையூருங்காமாவுன்கண்ணிணை-செய்யூர்
வளவனையினான்பிரிந்தவாறுனக்குச்சொன்ன
உளவனையினானென்றுரை (வளவன்-நயினான்) (௰)

ஆழிவாய்ச்சத்தமடங்காதோயான்வளர்த்த
கோழிவாய்மண்கூறுகொண்டதோ-ஊழி
இரண்டதோகங்குலினகரனுந்தேரும்
உருண்டதோபாதாளத்துள் (௰௧)

அரவங்காந்ததோவச்சுமாமிற்றுப்
புரவிக்கயிறுருவிப்போச்சோ-இரவிதான்
செத்தானேவில்லையோதீவினையோபாங்கியெனக
கெத்தால்விடியுமிரா (௰௨)

முலையுங்குழலுமுளைப்பதற்குமுன்னே
கலையும்வளையுங்கழன்றாள்-மலையில்
சிராப்பளியானேயிவருஞ்சேவின்மணியோசைக்
கிராப்பழியுங்கொள்ளாளிவள் (௰௩)

பாண்டியன்றானானேன்பசலைமுலைப்பாலானேன்
ஆண்டிகையிலேந்தியதொன்றானேனே-வேண்டியபோ
துள்ளங்கைத்தேனானேனோர்மதலைபூத்தபின்
புள்ளங்கைத்தேனானனக்கு (௰௪)

முட்டத்துப்பன்றிமுளரித்திருப்பதத்தைக்
கிட்டத்துப்பன்றிக்கிடந்தேனே-தொட்டு

மருங்கிலேசங்கெடுத்தமாலேயெனக்கு
வருங்கிலேசங்கெடுக்கவா (௰௫)

மாதர்க்கிதங்கவிவாணர்க்குச்சாலவணக்கங்குரு
நாதர்க்குநீதியோடாசாரநண்பினயந்தவர்க்குக்
கோதற்றவாசகம்பொய்க்குப்பொய்கோளுக்குக்கோளறிவி
லாதர்க்கிரட்டிப்பறிவுடையோர்செய்யுமாண்மைகளே (௰௬)

குழற்காலரவிந்தங்கூம்பக்குமுதமுகையவிழ்ப்ப
நிழற்கான்மதியமன்றோநின்றிருக்குலநீயவன்றன்
அழற்காலவிர்சடைமீதேயிருந்துமவ்வந்திவண்ணன்
கழற்கால்வணங்குதியோவணங்காமுடிக்கைதவனே (௰௭)

பாட்டானைவண்டியாடுங்குழற்சண்பகவல்லிதன்
றாட்டாமரையைத்தொழுதேனினியென்றலையில்விதி
தீட்டான்கருமுகில்போலேவருமந்தச்சேட்டெருமை
மாட்டானினிவரமாட்டான்வந்தாலும்வணங்குவனே (௰௮)

சீமானுநாமகள்கோமானுமேத்தித்தினம்பணிந்து
பூமாலைசாத்தியரத்னசபாபதிபொன்னடிக்குப்
பாமாலைசாத்திநின்றேனவனென்மிகப்பாடுபட்ட
ஏமாவுன்றனினியாமாவென்பாலினியெய்துதற்கே (௰௯)

தடங்கொண்டகல்லின்மெல்லெனத்தூட்டித்தமதுரத்தில்
வடங்கொண்டுசாத்திவிடங்கொண்டுபார்த்துமணிகிளரும்
படங்கொண்டுயாம்பிற்பழகியபின்மலைப்பாவைதன்னை
இடங்கொண்டவொற்றித்தியாகேசர்புற்றினிடங்கொண்டதே (௨௰)

விடங்காட்டிக்கண்டத்திற்றோலுரிகாட்டித்தன்மெய்யினைப்புற்
றிடங்காட்டிவாலையொருபுறங்காட்டிவண்டேறுமலர்த்
தடங்காட்டியபொழிலாரூர்த்தியாகர்தமதுபொற்றாட்
படங்காட்டியாடிநின்றருலசேழுபணியென்னவே (௨௧)

புரந்தனைமாலைச்சதுரானனத் தனைப்போகியைமுப்
புரந்தனைச்சாதித்திமையாதநாட்டப்புலோமசைவாழ்
புரந்தனைமானுந்திருவொற்றியூரின்பொன்மணிக்கோ
புரந்தனைக்கண்டனன்காணேனுதிக்கும்புரந்தனையே (௨௨)

வெண்பா

நல்லம்புலியணிந்தோரளைதனுக்கெட்டாதான்
வில்லம்புடன்கூடிவிட்டாலும்-வல்லி

இட்டாளே முன்னுலகமேழளந்தோன் மைந்தன்
குடையானதன்றேகொடிது (அம்புலியணிந்தோனாள் - ஆதிரை
எட்டாநாள் அத்தம்(கை)வில்புருவம்-அம்பு-கண்

வாழ்நிலைசேர்பொன்னுலகம்வண்களந்தைக்கோபுரத்தின்
ஏழ்நிலைமேலேறிடினுமேறலாம்-பாழ்மனமே
அன்புன்னைக்காட்டவரனறிவதேயருமை
தென்புன்னைக்காட்டனடிசேர் (உ௪)

கஞ்சிகுடியாளேகம்பஞ்சோறுண்ணாளே
வெஞ்சினக்களனாறும்விரும்பாளே-நெஞ்சதனில்
அஞ்சுதலையாவாருக்காறுதலையாவாளே
கஞ்சமுககாமாட்சிகாண் (உ௫)

சீதாவிந்தபுபன்றென்னவன்றன்றிண்சிலம்பிற்
போதாலுங்கண்ணாலும்போர்செய்வோர்கோதும்
கொடியிடையார்தம்மாற்குணமாமோவிந்தத்
துடியிடையார்கொண்டதுயர் (உ௬)

போதாற்போர்செய்வான்-மன்மதன்- கண்ணாற் போர்செய்வான்பரமசிவன் இவர்கள்கொடிமீனம இடபம் இவற்றிடை யிலுள்ளது மேஷம் ஆடு.

அப்பிலேதோய்த்திட்டடுத்தடுத்துநாமதனைத்
தப்பினும்மையதுதப்பாதோ- இப்புவியில்
இக்கலிங்கம்போனாலென்னேகலிங்கமாமதுரைச்
சொக்கலிங்கந்தானிருக்கச்சொல் (உ௭)

ஆக-செய்யுள்-௪௪௯



## பட்டணத்துச் சுவாமிகள்

நாப்பிளக்கப்பொய்யுரைத்துநவநிதியந்தேடி
நலமொன்றுமறியாதநாரியரைக்கூடிப்
பூப்பிளக்கவெழுகின்றபுற்றீசல்போலப்
புலபுலெனக்கலகலெனப்புதல்வர்களைப்பெறுவீர்
காப்பதற்கும்வகையறியீர்கைவிடவுமாட்டீர்
கவட்டுத்தொன்மரத்திடுக்கிற்கானுழைத்துக்கொண்டே
ஆப்பதனைப்பிடித்தசைத்தபேய்க்குரங்குபோல
அகப்பட்டீர்கிடந்துழலவகப்பட்டீரே (க)

## சிவப்பிரகாசச்சுவாமிகள்

ஐயனின்சென்னிமிசையுறைகின்றமடமங்கையாரென்ன வுமைவினவவும், அன்னதொருமடமங்கையன்று வெண்டிரைகொழித்தழகொழுகுநல்புனலெனத், துய்யவொளியானனங்கரியவிழி காருமாய்தோயத்திலுண்டோவெனச், சொல்லருங்கமலமலர்காவிமலர்கொடிவெள்ளை தூயசெங்குமுதமென்னப், பொய்யெனநினைத்து நற்கொங்கையுங்கூந்தலும் புனலினிடையுண்டோவெனப், புற்பிதஞ்சைவலமதெனவேமறுத்துப் புகன்றிடுங்காயெனத், தையலவளேயென்னநாணொடுவணங்கியென்றன் பிழைபொறுத்திடென்றே, சங்கரனுரைத்திடத்திருவுளமகிழ்ந்தசிவசங்கரியுமைக்காக்கவே. (உ)

ஆரணவனிடத்திலேயைங்கரன்வந்துநாளையவென செவியைமிகவும், அறுமுகன்கிள்ளினனென்றேசிணுங்கிடவுமத்தன்வேலவனைநோக்கி, விரைவுடன்வினவவேயண்ணனென் சென்னியில் விளங்குகண்ணெண்ணினனென்ன, வெம்பிடும்பிள்ளையைப்பார்த்துநீயப்படிவிகடமேன்செய்தாயென, மருவுமெண்கைந்நீளமுழ மளந்தானென்னமயிலவனைகைத்துவிடக், மலையரையனுதவவருமுமையவளை நோக்கிநின்மைந்தரைப்பாராயெனக், கருதரியகடலாடையுலகு பலவண்டங்கருப்பமாய்ப்பெற்றகன்னி, கணபதியையருகழைத்தமகிழ்வுகொண்டனள் களிப்புடனுமைக்காக்கவே, (ங)

அம்பிகையரன்றன்னைநோக்கியுன்றுபாணமாரவமெனவுமையை நோக்கி, அரியரவசயனத்தையாவருமானத்தை யறியார்கொல்சிறிதுமென்ன, நம்பிமனைதொறுமிரந்துணுமாண்டிநீயென்னநான்றுகனறிலேனென; நவையுறும்பொய்புகன்றீரெனப்பாரத நடந்ததேகரியாமென, வெம்பியொன்னவன்பிரமயாலடித்தானெனவிளங்கிழையொருத்திநம்பால். வீசினதுசொல்லென்னவெண்ணாயிரம் பெண்கண்மிகுகற்பைநீக்கினையெனப் பாம்புகற்பினிமேலொரிரட்டிப்புநீக்கினதுபதருமணீகேளெனப், பரமருடனில்லாறுவிளையாடுபச்சைப்பசுங்கொடியுமைக்காக்கவே, (ச)

அச்சுதனளிப்பனிலமுமாதுநேயன்வித்தையருளுவன்பலபத்திரன். அலமுதவுவன்சமன்பகடுவனந்தமக்காள தேவெருதுமுனைவே, முச்சிரவயற்படையினைக்கொழுவதாக்குவோமொய்ம்புடனிழுத்திறுக்கமுழங்கியவடக்கயிற்றுடன்மற்றநமதன்பர்முன்போ யிரந்துகொள்வோம். இச்சையுடனுதினியதனைய முகியகந்தனினிமை யொருமொ

மேய்ப்பன், இனியுழுதுபயிரிடுதனன்றுநன்றினைதவிட் டிரந்துண்பதி
ணமெனவே. கச்சுமூலைமாதுமையுரைத்திடும்புத்தியைக்கைக்கொண்
டுளத்திலெதுநற். காரியமெனக்கருதிமெத்தக்களித்திடுங் கண்ணுதலு
மைக்காக்கவே. (ரு)

கவுரிகமலாயரனிரந்தசோறிதுவெனக்கமலைமண்கண்டேனெனக்காளையொன்றேயரற்கெனமாடுமேய்த்ததைக்கட்டிடையனோவெனச. சிவனொருவர்தூதென்னவந்தூதுசென்றகதைசெப்பிலொருபாரதமெனச், சேரோடுதிருடினனரனெனக்கட்டுண்ட செய்திநாமறிவோமென. அவையினடமாடினரனென்னவவ்வாடலரவமறி யாதோவென, ஆலமதையுண்டனன்னரனென்னமண்ணுண்ட வதனையறியோமோவென. விவரமொடுமலைமகளுமலர்மகளு மிவ்வாறுவிளையாடுமிவர்கடுணையா. மேவிவருபுத்திரமித்திரகளத்திருடன் மேன்மேலுமிகவாழியே. (சு)

நிறைவுளதோவெளிதோகொளுவோம்
பிறையைமுடிக்கணிந்தபெம்மான்-உறையும்
திருக்காட்டுப்பள்ளிதிரிபாவாய்நீயின்
இருக்காட்டுப்பள்ளியெமக்கு (எ)

அடுத்துவருந்தொண்டனுக்காவந்தகனைத்தாளால்
அடர்ந்ததுவுஞ்சத்தியமேயானால்-எடுத்தொரு
மாங்கனிக்காவென்னைமடிபிடித்தமாமாவி
சாங்கனிக்காதித்தன்வரத்தான் (அ)

குடக்கோடுவானெயிறுகொண்டார்க்குக்கேழன்
முடக்கோடுமுன்னணிவார்க்கு-வடக்கோடு
தேருடையான்றெவ்வுக்குத்தில்லைதோன்மேற்கொள்ளல்
ஊருடையானென்னுமுலகு (கூ)

விருத்தம்

செய்கொண்டாருங்கமலச்செம்மலுடனேயரவப்
பாய்கொண்டானும்பணியும்பட்டீச்சுரத்தானே
நோய்கொண்டாலுங்கொளலாநூறுவயதாமளவும்
பேய்கொண்டாலுங்கொளலாபெண்கொள்ளலாகாதே (௰)

நிட்டையிலேயிருந்துமனத்துறவடைந்த பெரியோர்கணிமலன்
றனைக். இட்டையிலேதொடுத்து முத்திபெறுமளவும் பெரியசுகங்கி
டைக்குங்காம். வெட்டையிலேமதிமயங்கிச்சிறுவருக்குமணம் பே

சிவிரும்பித்தாலி. கட்டையிலேதொடுத்துநடுக்கட்டையிலே கிடத்து
மட்டுங்கவலைதானே. (௰௧)

இருந்துதமிழிலக்கணலைந்திணக்கோவைவிருத்தகிரிச்செல்வத்
கோதும், பெருத்தகைமையுடையம்யாம்விடுமோலைவெங்கனூர்ப்பி
டாரிகாண்க. இரும்புலியிலொருமுருங்கைக்கொம்பொடியாமற்கா
த்திங்கிருக்குநீநம். முருங்கைதனைவேரோடுங்களைந்தனை யென்றனு
னக்குமுறைநன்றாமோ. (௰௨)

இவர்பிதா

கயல்வாய்த்தகண்ணியுலகின்றலைப்பிபங்காவனது
செயல்வாய்த்தவம்பர்க்குமல்லாதவர்க்குஞ்சிரிப்பல்லவோ
இயல்வாய்த்தவெந்தைக்கியான்வாய்த்ததுவுமிக்கென்றனக்கு
வயல்வாய்த்ததுமனைவாய்த்ததுமைந்தர்கள்வாய்த்ததுவே (௰௩)

முன்னமொருதமிழ்ப்புலவன்றனையுண்டுகண்டசுவைமுதிர்ச்சியாலே
தன்னியலைமுழுதுமுரைக்கமையர்முன்னினைக்கவர்ந்துதடங்காளத்தி
மன்னவனுண்டானெனதுமாதவத்தின்வலிதிரமண்ணின்மீதே
என்னுடன்வந்தவதரித்தவிளங்கருணைப்பிரகாசனென்னுங்கோவே ( )

நாணியென்பதைநாரியென்றுரைத்திடுநசையால்
வேணுவானதுவளைந்துபோய்புகுந்ததுவென்றாற்
காணலாவதோருருவமெய்ந்நாரியைக்கண்டால்
பூணுவார்மயல்காளையரென்பதும்புதிதோ (௰௫)

அலவிமலர்ப்பண்ணவனுமாராய்ந்தரிகவிதை
சொல்லிமிருவரிடைத்தோன்றியயான்-முல்லை
அரும்பிற்பொலியுமணிமுறுவனல்லாய்
கரும்பிற்கணுநிகர்த்தேன்காண் (௰௬)

வேலையசுவாமிகள்

ஆண்டதனாலெனையெவ்வாய்வித்தைவிநிற்றமயனினுமதிகமெ
ன்றே. பூண்டவுலகதனிலுள்ளோர் புகல்வதுகேட்டிருந்துமென்னபு
துமைதானோ. காண்டகுகண்மணியே நல்விளங் கருணைப்பிரகாசக்
காளாய்நீதான். மாண்டனையென்றறிந்திருந்துமுயிர்தரித்தேன்யானு
மிருவனெஞ்சேனே. (௰௭)

சத்திமுத்திப்புலவர்

நாராய்நாராய்செங்கானாராய்
பாம்படுபனையின்கிழங்குபிளந்தன்ன
பவளக்கூர்வாய்ச்செங்கானாராய்

நீயுநின்மனைவியுந்தென்றிசைக்குமரியாடி
வடதிசைக்கேகுவீராயின்
எம்மூர்ச்சத்திமுத்தவாவியுட்டங்கி
நனைசுவர்க்கூரைக்கனைகுரற்பல்லி
பாடுபார்த்திருக்குமெம்மனைவியைக்கண்
டெங்கோன்மாறன்வழுதிகூடலில்
ஆடையின்றிவாடையின்மெலிந்து
கையதுகொண்டுமெய்யதுபொத்திக்
காலதுகொண்டுமேலதுதழீஇப்
பேழையுளிருக்கும்பாம்பெனவுயிர்க்கும்
ஏழையாளனைக்கண்டனமெனுமே (௰௫)

வெறும்புற்கையுமரிதாங்கிள்ளைசேருமென்வீட்டில்வரும்
எறும்புக்குமார்பதமில்லைமுன்னாளென்னிருங்கலியாம்
குறும்பைத்தவிர்த்தகுடிதாங்கியைச்சென்றுகூடியபின்
தெறும்புற்கொள்யானைகவளங்கொள்ளாமற்றெவிட்டியதே (௰௬)

வரதுங்கபாண்டியன்

அஞ்சவென்றகரதலமுங்கணபணமுங்கங்கணமு
மரைக்கிசைந்தபுலியுடையுமம்புலிச்செஞ்சடையுங்
கஞ்சமலர்ச்சேவடியுங்கனைகழலுஞ்சிலம்புங்
கருணைபொழிதிருமுகமுங்கண்களொருமூன்று
நஞ்சையுண்டமணிமிடறுமுந்நூலுமார்பு
நலந்திகழ்வெண்ணீற்றொளியுமறிமானுமழுவும்
பஞ்சடிச்சிற்றிடையுமையாளொப்பனைபாகமுமாய்ப்
பால்வண்ணனுளத்திருக்கப்பயமுண்டோவெமக்கே (௨௰)

அவர்மனைவி.

ஆக்கையெனும்புழுக்குரம்பையணைந்தணையாப்பொருளை
யருளொளியைப்பராபரத்துக்கப்புறமாமறிவை
நீக்கமறமயிர்முனைக்குமிடமறவெங்கெங்கு
நிறைந்துநின்றமுழுமுதலைநினைவிலெழுஞ்சுடரைப்
பாக்கியங்கள்செய்தனந்தந்தவக்குன்றகண்முடிக்கும்
பழவடியார்தமக்குதவும்பசுந்துணர்க்கற்பகத்தை
வாக்குமனைவிகற்பகத்தாலளவுபடாவொன்றை
மாசற்றவெறுவெளியைமனவெளியிலடைப்பாம்

ஆக -செய்யுள்- ௬௪௭



## பலபட்டடைச்சொக்கநாதப்புலவர்



நின்றபடியளக்குநீலக்கொடிகளிரண்
டென்றுமுளவாங்குடந்தையீசருக்- கொன்றுங்
குறைக்குமறையீந்தாரொன்றதனுக்கென்றே
வரைக்குமறையீயாரவர் (௧)

எடுத்தசனனங்கடோறுமீன்றெடுத்ததாய்மார்
கொடுத்தமுலைப்பாலனைத்துங்கூட்டில்-அடுத்தமணிப்
பைங்காமனைதுயின்மால்பாலாழியுஞ்சிறிதா
மன்றுசிதம்பரதேவா (௨)

முக்கண்ணனென்றானைமுன்னோர்மொழிந்திடுவர்
அக்கண்ணற்குள்ளதரைக்கண்ணே-மிக்க
உமையாள்கண்ணொன்றரைமற்றான்வேடன்கண்ணொன்
றமையுமிதனாலென்றறி (௩)

பாணியிலேபுள்ளிமான்பாகத்தேபச்சைமான்
வேணிதனிலேயோர்வெள்ளமான்-காணுமலர்ச்
செம்பானுலவுந்திருமறைக்காட்டீசரே
எம்மானுக்கெங்கேயிடம் (௪)

### கட்டளைக்கலித்துறை

வான்பணிந்தாலவனென்பேயுரைக்குமலரிலயன்
தான்பணிந்தாலவன்றன்றலையேசொல்லுந்தாரணியுள்
பான்பணிந்தாலவன்கண்ணேபரிந்துபரிந்துரைக்கும்
நான்பணிந்தாலெனக்கார்செல்லுவார்சொக்கநாயகரே (௫)

மெய்க்கேயணியும்பணியேயென்பேழுடமேற்கிடக்க
கொக்கேவெண்கூன்பிறையேயனைசோதகொடும்புலியே
அக்கேயுமக்குக்கிடைத்தவுபாயங்களாமெமக்குஞ்
ரொக்கேசர்பாதத்தைக்கிட்டுமுபாயத்தைச்சொல்லுங்களே (௬)

தாண்டித்திரியும்விடையேயியோடென்றுதாங்கிப்பிச்சை
வேண்டிக்கலியுககால்ந்தள்ளாமல்விரும்பிச்சொக்கர்
ஆண்டித்தொழிலைவிட்டையோமதுரைக்காசிருந்து
பாண்டித்துரைத்தனஞ்செய்தேபிரம்படிபட்டனரே (௭)

ROJA MUTHIAH
47, HOSPITAL STREET
KOTTAIYUR—623 106

ஆகத்திலேயொருபாதியென்னம்மைக்களித்தவுடன்
பாகத்திலேயொன்றுகொண்டாயவன்மற்றைப்பாதியுமுன்
றேகத்திற்பாதியுஞ்சேர்ந்தாலிருவருண்டேசிவனே
ஏகத்திரமலிருப்பாய்களந்தையுமென்னெஞ்சகமே (௮)

துணையானநாரிபுவியையெல்லாமபெருந்தொல்லைவடிக்
கணையானதுபுவியெல்லாமெடுத்துண்ணுங்கைச்சிலைகல்
லணையாகநின்றுபுவியினைத்தாங்குமென்றாலினியான்
பணையார்களந்தைப்பதியார்செயலையென்பண்ணுவதே (௯)

முன்னானைகூப்பிடவோடிவந்தானைமுளரிமலர்ப்
பொன்னானையேறியிருப்பானைப்பூழியன்கைக்கரும்பைத்
தின்னானையென்றுகல்லானைக்கிட்டானைத்திருமதுரை
மன்னானைவீதியிலேறிவந்தானைவணங்குதுமே (௰)

நமக்கின்றொருவரநீர்தரவேண்டுநலந்திகழ்க்கு
குமக்கொங்கைபாகத்துக்கொச்சையுள்ளீர்கொடுங்கோளரவிந்
டமைக்கும்பிறையையளித்தாலதற்குமிரும்பசிபோ
முமக்குந்தலைச்சுமைபோமெங்கண்மானுமுயிர்பெறுமே (௰௧)

ஆனையுரித்துநாதனைப்போர்த்திட்டடியும்பட்டு
மானமழிந்தங்கிரந்தேதிரிந்தமதுரைச்சொக்கர்
ஞானமிகப்பெற்றுவாழ்வதெல்லாஞ்சொக்கநாயகியாள்
பானைபிடித்தமுகூர்த்தத்தினல்வந்தபாக்கியமே (௰௨)

ஆய்முத்தப்பந்தரின்மெல்லணைமீதன்னருகிருந்து
நீமுத்தந்தாவென்றவர்கொஞ்சம்வேளையினித்தநித்தம்
வெய்முத்தமோடென்குறைகளெல்லாமெல்லமெல்லச்சொன்னால்
வாய்முத்தஞ்சிந்திவிடுமோநெலவேலிவடிவன்னையே (௰௩)

குறியானமனையுதைத்துள்ளங்காசினிற்கூனிமிர
மறியாகந்தேய்த்தய்விலங்கேசன்மாமுடிபத்துநசு
நெறியான்மிதித்துமுயலகன்மேனிநுறுங்கவின்னு
மிறியாநின்றலருளெங்கேசொக்கேசர்தம்மெல்லடிக்கே (௰௪)

மண்ணென்றமண்டலமெல்லாம்புரக்கும்வழுதிசற்றுந்
தண்ணென்றநெஞ்சந்தரித்தில்லனேதனுவேடனெச்சில்
உண்ணென்றபோதுண்டவர்சொக்கர்பாதியுடலம்பச்சைப்
பெண்ணென்றறிந்துமடித்தானெவ்வாறுபிரம்புகொண்டே (௰௫)

இன்றொருக்கவேண்டிலெவ்வாறொக்குமோர்வெழில்சேர்களந்தைக்
குன்றொக்குங்கோபுரங்கோபுரமொக்குமக்குன்றதுபோல்
அன்றொக்கவேண்டுமென்னல்வினைதீவினையாமிரண்டும்
என்றொக்குமோவினித்தென்களங்காடனையான்பெறவே (௰௬)

மாதாம்படியுண்டுமெய்சிவந்தான்குழல்வைத்திசைத்துச்
சேதாம்பலங்கனிவாய்சிவந்தான்செம்மலர்த்திருவின்
ஞூகாந்தனைத்துரஞ்சிவந்தானவர்தூதுசென்று
பாதாம்புயஞ்சிவந்தான்சிவந்தான்மல்லைப்பல்லவனே (௰௭)

பாடுந்தமிழ்க்குச்சிவந்தெழுந்தான்மல்லைப்பல்லவர்கோன்
காடுஞ்செடியுந்திரியாதிரட்டைக்கடுக்கன்செய்து
போடும்பொழுதென்னபூட்டகமாவற்பப்புல்லரைகொண்
டாடும்பொழுதிருகன்னத்திலேநின்றடிக்கின்றதே (௰௮)

கான்றெண்டனிட்டகனங்குழலாளையென்கண்மணியை
தேன்றொண்டைவாய்ச்சியைத் தென்கூடல்வாழ் சிறுபெண்கிள்ளை
யான்றெண்டனிட்டபொழுதேயியமனெக்குமடி [யை
என்றெண்டனிட்டவிண்ணப்பமென்றோலையெழுதுவனே (௰௯)

மற்றொருவரைக்கண்டதுண்டோசத்தியவாசகராய்
உற்றோர்கழஞ்சுவெண்ணெய்க்கின்றதாய்க்கொருகோடிபெய்கள்
சொற்றோனுந்தாழைமலர்சாட்சியென்றுசொன்னோனுமல்லால்
கற்றோர்கள்வம்மின்களசெம்மின்கள்பொய்யிங்களந்தையிலே (௨௰)

அண்டத்தமரருமாயனும்வேதனுமந்தணரும்
பண்டெத்தனைதவஞ்செய்தனரோமணப்பந்தலிலே
துண்டப்பிறையணிசொக்கர்கைத்தாலிக்குநீதுணிந்து
கண்டத்தைநீட்டினையேகூடல்வாழங்கயற்கண்ணியே (௨௧)

அற்பின்றதாயென்றனைப்பணிந்தாலென்னைவதியெல்லாம்
பொற்பின்றபூஷணம்போற்குறித்தாய்புகழ்க்கூடலில்வாழ்
கற்பின்றகட்டிக்கரும்பேயுனக்குக்கன்னெஞ்சதுதான்
வெற்பின்றவாசனையோவுள்ளவாறுவிளம்பெனக்கே (௨௨)

பேயல்லவோவொருவேளைவரந்தந்துபேசிடுங்கல்
லாயல்லவோநின்மனங்கெட்டியானதுமற்புதந்தான்
நீயல்லவோமதுரேசர்பங்குற்றவணீயெனக்குத்
தாயல்லவோபிள்ளைநானல்லவோசிவகாமவல்லியே (௨௩)

பண்டோதரியமறைபாடுங்கூடற்பசுங்கிளியைக்
கண்டோதினேனென்கவலையெல்லாமினிக்காலன்மிண்டு
முண்டோடிவந்திடும்போதம்மைகோயின்முன்னேதிரியும்
குண்டோதரன்கண்டுகொண்டாற்றுடைதட்டிக்கொள்ளுவனே (௨௪)

செகத்தாயெனவந்ததெள்ளமுதேதென்கைலையெனு
நகத்தாற்பணியுங்கயற்கண்ணம்மேநின்னயனத்தினால்
மிகத்தான்கருநிறங்கொண்மையாலும்விளங்குதிரு
முகத்தாமரைகொருவண்டானதுமுத்துமூக்குத்தியே (௨௫)

செகமதின்மிக்கமதுரையின்மாணிக்கஞ்செட்டியதாய்
முகமதிரத்தினம்விற்றசொக்கேசரைமேவியன்பாச்
சுகமதிதந்தெனையாள்கயற்கண்ணிநின்சுந்தரமா
முகமதியினறகதிர்மணியோமுத்துமூக்குத்தியே (௨௬)

பொன்னேமலையத்துசனுகியபுயலீன்றெடுத்த
மின்னேயுனதுவதனத்தையேவெண்மதியமெனத்
தன்னையக்காலொருதாரகையானதுதான்விரும்பி
முன்னேயிடந்தினம்பார்க்கின்றதோமுத்துமூக்குத்தியே (௨௭)

வடிகொண்டசெந்தமிழ்க்கூடலில்வாழ்சொக்கர்வந்திதரும்
பிடிகொண்டபிட்டுக்குமண்ணேசுமந்துபெருமகரக்
கொடிகொண்டவெற்றித்துரைப்பாண்டியன்கைகொடுபிரம்பால்
அடிகொண்டவோதிலடியாரவர்பொன்னடிகண்டதே (௨௮)

அக்குவடர்புனையானந்தவெள்ளத்தையங்கயற்கண்
பக்கத்திருந்தபவளாசலத்தைப்பழம்பொருளை
முக்கட்கனியைக்கடம்பாடவிக்கண்முளைத்தெழுந்த
சொக்கரைக்கண்டாலன்றித்தீராதுநெஞ்சிற்றுயரங்களே (௨௯)

பொன்போலுங்கூடற்பிராட்டியைச்சேவிக்கப்போம்பொழுதில்
என்பாலவரவுமெதிர்நின்றுபேசவுமென்றலைமேல
தன்பாதஞ்சூட்டவுங்கேட்டதெல்லாந்தக்கருளவுமே
அன்பாகவந்திடுவாள்கலிகாலமென்றஞ்சவலே (௩௰)

உரையேனுன்பேரையுணரேனின்சீரையுனக்கருதிக்
கரையேனெவ்வாறுகடப்பேன்வினையைக்கடந்தகுண
வரையேயருட்பெருவாரிதியேமதுராபுரிக்குத்
துரையேயழகியசொக்கேதமிழ்ந்தசுந்தரமே (௩௧)

மூக்கட்பராபரைகொக்கப்பிரானெனுமுன்னவனே
டொக்கச்சிறந்தகயற்கண்ணிலங்கிஇயுற்றமிகச்
செக்கச்சிவந்தபொற்றாமரைப்பாததெரிசனைக்கே
பக்கத்தடுத்தவர்சொர்க்கத்தினையெட்டிப்பார்ப்பதற்கே (கஉ)

மட்டார்குழலங்கயற்கண்ணம்மேயிம்மட்டென்றுதொகைக்
கெட்டாதெனதுதுயரநின்பாற்சொல்லியேசலிக்க
ஒட்டாரநீசெய்யலாகாதுயாருன்னடிமைதன்னை
நட்டாற்றிற்கைவிட்டிடாதேபழிவெகுநாணிற்குமே (கங)

விரித்தான்சடையைமகாமேருவாகுவில்லைவிட்டேச்
சிரித்தான்புரத்தையெரித்தான்பாகுருதேசிகன்முன்
உரித்தான்கரியையுடுத்தான்பகிரண்டத்துள்ளோருங்கும்
பரித்தான்மதுரைதரித்தான்சவுந்தரபாண்டியனே, (கச)

மைக்காற்குழற்றெண்வடிவாளைத்தென்னவன்மாமகளை
அக்காளையோன்மங்கிலாத்தாளைமாறங்கையானவளைத்
திக்கார்தொழுங்கயற்கண்ணளையோர்தினஞ்சேவைசெய்தால்
எக்காலமுமவர்சொக்காதியோகத்திருப்பவரே (கரு)

வண்டிட்டகூந்தலுர்வாரிட்டகொங்கைவரைகளேங்கற்
கண்டிட்டசொல்லுங்கயற்கணணிபாகமுங்கைதொழுதேன்
தண்டிட்டடிக்குமறலிவங்காற்சன்னையிட்டுகைத்
துண்டிட்டுவாசிறுபிள்ளாயென்றாருக்கனுப்புவனே (கசு)

பொன்னேபொருந்தர்புகமேபொலிந்தமென்பூங்கிருவே
தென்னேசிறந்தசொதேனேதிருந்தருட்சின்மயமே
அன்னேயமுதேயருளேயமரர்க்கரும்பொருளே
மின்னேவியன்சுடரேமதுராபுரிமீனம்மையே (கஎ)

கேட்டேதுமில்லைகொடுப்பாருமில்லைதிரத்துழலில்
பூட்டேருமில்லையிதெல்லாமெய்பாவிலைபூர்ணவரம்
கேட்டேனதற்குப்பிரிவில்லையேயினிக்கேட்கவுநான்
மாட்டேனுன்மேற்பழியோட்டேன்மதுரைமனோன்மணியே (கஅ)

உள்ளக்கவலைவெல்லாம்விள்ளும்போதுமுனதுமனம்
எள்ளத்தனையிரங்காதிருந்தாயெளியேனினிமேல்
தள்ளப்புரத்தினிலென்றலும்போவதுகாணிலைப்பொன்
வள்ளத்தமுதுண்ணுங்கிள்ளாய்கடம்பவனவல்லியே (கக)

எப்படியெப்படிச்சொன்னாலுநானிரங்கேனெனவே
அப்படியப்படிநீயிருக்கின்றவதிசயத்தை
இப்படியிப்படியென்றினுமெனக்கேதெரியச்
செப்படிசெப்படியம்மாமதுரைச்சிவாநந்தியே (சo)

செப்பத்திலுன்னைத்தொழவாயிரங்கண்ணுஞ்செல்லுமொல்லேன்
துப்பகதவறத்தொழுதாலுஞ்சொக்கர்தடம்புயத்தைக்
கொப்பத்திரண்டகொங்காயுன்னையவமொனறுக்கொன்று
முப்பத்திரண்டுகண்வேண்டுங்கண்டாயென்முகத்தினுக்கே (சக)

அடியார்கரத்தமதுரேசரேயும்மைத்துள்ளியசேர்
கொடியானடித்ததுங்குற்றமன்றேகிழக்கோதையிவள்
அடியானென்றேசுட்டபிட்டையெல்லாமள்ளியள்ளித்தின்று
வடியாகதியிற்கரைத்துவிட்டாரவள்வல்வினையே (சஉ)

காருஞ்சொன்னகண்டத்தெந்நாளோதொடுத்தகவிக்கெவர்கள்
ஊருஞ்சொன்னகோவந்திறுத்தவிவ்வேளையுதவுனக்கே
பாருஞ்சொன்னேனின்னம்பராமுகமேதிருபத்துலட்சம்
தாருஞ்சொன்னதாயெண்ணுவாய்சிவகாமசவுந்தரியே (சங)

ஒருபாதிமால்கொள்ளமற்றொருபாதியுமையவள்கொண்
டிருபாதியாலுமிறந்தான்புராரியிருநிதியோ
பெருவாரிதியிற்பிறைவாணிற்சர்ப்பம்பிலத்திற்கற்ப
தருவானபோசகொடையுன்கையோடென்கைதந்தனனே (சச)

பாலனைப்பழித்தல்.

அரும்பாலகாமுனம்பூமணஞ்சொற்பொருளாகமுயிர்
கரும்பாஞ்சுவையென்றுமெண்ணையும்போலொத்தகாதலரைப்
பெரும்பாவிகாலனிங்கக்காசலத்தைப்பிரிப்பதுபோல்
கரும்பாமபுலவர்யமனாலேசெக்கெனத்தோன்றினையே (சரு)

அரும்பாக்கியகொங்கைபாலாக்கியுங்களப்பநெஞ்சை
இரும்பாக்கியென்னெஞ்சைப்பித்தளையாக்கியவ்வேந்திழையைக்
கரும்பாக்கியென்னையும்வேம்பாக்கியிவ்வண்ணங்கண்டனையே
பெருமையாக்கியமல்லவோமகனேயுனைப்பெற்றதுவே (சசு)

கல்விமேற்பிரிதல்.

விண்ணுக்குமாமதிகாயவெங்காமவெரிசொருந்தப்
பண்ணுக்குமாமொழிமாதங்கமாம்பஞ்சபூதியம்போம்
கண்ணுக்குமூச்சுசெவியாக்கைபற்றகடத்திலங்கும்
பெண்ணுக்குவார்த்தைப்போலோதிவாரும்பிரிபவரே (சஎ)

உனக்கின்றியான்செய்தகுற்றமொன்றில்லையுனைப்பிரிந்தால்
வனக்கின்றிலேறிவிழுவதியேன்வண்மைசேர்மயிலே
எனக்கென்றுவட்டமிட்டண்ணாந்துவிம்மியிருக்குமுன்றன்
தனக்குன்றிலேறிவிழுவேனின்னல்குறநாடகத்திலே (௪௮)

கண்ணாம்புதீட்டநல்லாள்காட்டமோதிரஞ்சூட்டமலர்க்
கண்ணாரைக்கூட்டவிராஜன்கிருக்கக்கதிர்க்கம்பிபோல்
எண்ணாநடுவிரற்கேதாமூலோபருக்கேதுகண்டாய்
கண்ணார்நுதலண்ணல்சேய்வணிகாசெந்தில்காத்தவனே (௪௯)

திணம்போதத்தள்ளிப்பெரும்பூதம்போலப்பின்னேற்றுசெத்த
பிணம்போற்கிடந்துபுராணுவர்காண்பிறர்க்கீட்டிவைத்த
மணம்போனபின்புலிவேசமுண்டாகுமப்பஞ்சைகள்வங்
கணம்போதும்போதுங்கறுப்பாதென்மாவையிற்காவலனே (௫௦)

ஏவைக்குங்கூன்சிலைதொட்டானனங்கனிருவிசும்பில்
தீவைக்குந்திங்கட்குடையெடுத்தான்றென்றற்றேருகைத்தான்
காவைக்குங்கண்மணிகஸ்தூரிபின்றகறுப்பனவரை
மாவைக்கும்பாவைக்கும்பூவைக்கும்போதுவடுவைக்குமே (௫௧)

பொன்னகத்தார்பணிமாயோன்காந்தைப்பொருப்பில்வரும்
மின்னாண்முகங்கண்டஞ்சாயல்போற்பெறவேண்டியன்றோ
வன்றாட்கமலமலர்கடன்மேருவனிமயிலும்
தன்னலயனரிசங்கரன்வேலனைத்தாங்கியதே (௫௨)

குண்டைக்கொருத்தனைக்கூத்தாடும்பித்தனைக்குண்டெனியைக்
கண்டக்கருப்பனைப்புள்ளிவைத்தின்னியைக்காணயன்
மண்டைக்கரத்தனைக்கண்ணப்பனைச்சிலைவாரியுண்ட
பண்டைப்பரையனையோதேவனென்றுபகருவதே (௫௩)

அந்தங்கரும்பள்ளிபாசாங்குசக்திகண்ணம்படைச்சி
நைந்தவிடச்சிகுறத்திக்குமாமிநவில்வலைச்சி
சந்தம்புகழுக்கச்சிபாம்பணையோனுக்குத்தங்கச்சியாம
இந்தப்பாரச்சியையோசிவகாமியென்றேத்துவதே (௫௪)

நிலமேழளந்தநெடுமால்பணியுமலர்பொன்னம்
பலமேவுதில்லைப்பதிநடராயர்பணிவரையில்
கலமேதிமிங்கலமேசங்கமேநற்கயனினமே
சலமேசலஞ்சலமேயென்றுதீற்றமென்சஞ்சலமே (௫௫)

LIBRARY SERVICE INDIA
KOTTAIYUR 630106

பொரடக்கயம்பிடியென்றான்மதனுமிப்பூவையுமா
தரடங்கமுஞ்சற்றறிந்திலளேமலர்த்தாள்வணங்கா
மூரடக்கவுடக்கெடிமன்னர்வெற்றிமுடிபிடுங்குங்
கரடக்களிற்றண்ணலேவல்லைமாநகர்க்காளத்தியே (௫௬)

கவியாகுமாதினைப்பெற்றோன்புலவன்கற்றோனையாம்
செவியாரக்கேட்டங்குணர்வான்சகோதரன்செந்தமிழ்க்கு
தவியாவருமையறிவான்பதியவன்றனிலையேல்
புவியாகுமண்ணுக்குளொன்பலமாமந்தப்பூங்கொடிக்கே (௫௭)

சேராதவேடன்செருப்பாலடிக்கவுந்தீண்டவுந்தன்
நீர்வாயுமிழவுமுச்சிட்டம்போடவுநீண்டசிலைத்
தாராலடிக்கவுங்கண்ணீர்ததும்பவுந்தாய்தமர்கள்
ஆராகிலுமில்லையோதிருக்காளத்தியப்பனுக்கே (௫௮)

ஓட்டாகவொட்டியுங்காற்பொன்னின்மாப்பொன்னுபாயமதாத்
தெட்டாதிரான்பணிசெய்யாதிரான்செம்பொன்மேருவினைக்
கட்டாகக்கட்டிககடுகளவாநிறைகாட்டவல்ல
தட்டானுக்கஞ்சியல்லோவணிந்தான்சிவன்சர்ப்பத்தையே (௫௯)

ஏராட்டும்பூந்தொங்கன்மோகனக்காரற்கினியசுகம்
பாராட்டநாணினியாளல்லவேபசுமென்குழவி
தாராட்டவுஞ்சங்கிற்பால்பிள்ளைக்கூட்டித்தடவிமஞ்சன்
நீராட்டமையிடப்போமோயெனக்குள்ளநேரமுமே (௬௰)

## விருத்தம்.

பட்டாருந்தென்களந்தைப் படிக்காசனுரைத்ததமிழ் வரைந்த
ஏட்டைப்,பட்டாலேசூழ்ந்தாலு மூவுலகும்பரிமளிக்கும்பரிந்தவே
ட்டைத், தொட்டாலுங்கைம்மணக்குஞ்சொன்னாலும் வாய்மணக்குந்
துய்யசேறதில்நட்டாலுந்தமிழ்ப்பயிராய்விளைந்திடுமே பாட்டினிட்ப
ளினந்தானே. (௬௧)

## வெண்பா

ஆலெங்கேயங்கேயரும்பறவையாற்றுயிலும்
மாலெங்கேமலர்மடந்தை-கோலஞ்சேர்
செங்கேதகைமணக்குஞ்செங்குன்றையூரனெங்கே
ஆங்கேயிரவலரெல்லாம் (௬௨)

ஊரைச்சுடுமோவுல்கந்தனைச்சுடுமோ
ஆரைச்சுடுமோவறியேனே-நேரே

பொருப்புவட்டமானமுலைப்பூவையரேயிந்த
நெருப்புவட்டமானநிலா (௬௩)

நற்றோரணவீதிநண்ணும்வல்லைக்காளத்தி
கற்றோர்தமக்களிக்குங்கையேகை-மற்றோர்கை
வேங்கையலகைமுகைவேட்கைபலகைநகை
காங்கையழுகைவிழுகை (௬௪)

போசநீபோர்புயலாப்பூமுழுதும்பொன்மாரி
வீசுவாயங்கதிலோர்வீந்தேனும்-பேசுமென்மேல்
பட்டதில்லையென்வறுமைபாரக்குடையாகி
முட்டக்கவித்திடுதலால் (௬௫)

கலையாவிந்தங்கழுநீருடன்கலந்தால்
மலையாவிந்தம்யங்காதோ-பாலைப்
பழிக்கின்றமென்முலையீர்பாண்டியனூருரை
அழிக்கின்றதென்னோவது (௬௬)

பாண்டியனூர்-கூடல்-அது-புணர்ச்சி.

ஆக-செய்யுள் ௪௪௬



## பொய்யாமொழிப்புலவர்,



வாய்த்தவயிரபுரமாகாளியம்மையே
ஆய்த்தமணிலணிவரையிற் காய்த்த
கதிரைமாளத்தின்றுங்காளிங்கனேறுங்
குதிரைமாளக்கொண்டுபோ (௧)

இவருபாத்தியாயர்

பொதியிலகத்தியனாய்ப்பொய்யாமொழியாய்ச்
சிதைவில்புலவர்சிகாமணியாய்த்-துதிசேருஞ்
செங்காட்டங்கோட்டத்துரையூரெனுந்தலத்தில்
தங்காட்டங்கொண்டிருப்பாய்தான் (௨)

அகவல்.

வாழிசோழவென்வாய்மொழிகேண்மோ
ஊழிநிலவெறிமாளிகையின்வயிற்
கட்டிளங்கணவன்கவின்பெறசேக்கை
என்றறிமனைவிநெடிதுதுயில்கொளச்

செல்லக்கிட்டினெனக்கிடந்தருகெனைச்
சொல்லியநண்பன்றனிச்செல்பவனோ
நானுமேகுவனற்றுணையவற்கே (௩)

வெண்பா

அன்றுநீசெல்லக்கிடவென்றாயாயிழையோ
டின்றுநீவானுலகமேறினாய்-மன்றல்கமழ்
மானேக்கும்வேல்விழியார்மாரனேகண்டியூர்
சீனக்காசெலலக்கிட (௪)

பூவேந்தர்முன்போற்புரப்பாரிலையெனினும்
பாவேந்தருண்டென்னும்பான்மையாற்-கோவேந்தன்
மாறனறியமதுராபுரித்தமிழோர்
வீறணையேசற்றேமித (௫)

உங்களிலேயானொருவனொவ்வுவனோவொவ்வேனோ
திங்கட்குலனறியச்செப்புங்கள்-சங்கத்தீர்
பாடுகின்றமுத்தமிழ்க்கென்னைபைந்தமிழுமொக்குமோ
ஏடெழுதாரேழெழுவீரின்று (௬)

பொன்போலுங்கள்ளிப்பொறிபறக்குங்கானலிலே
என்பேதைசெல்லற்கிசைந்தனளே-மின்போலும்
மானவேன்முட்டைக்குமாறுபதெவ்வர்போங்
கானவேன்முட்டைக்குங்காடு (௭)

முருகக்கடவுள்.

விழுந்ததுளியந்தரத்தேவேமென்றும் வீழின்
எழுந்துசுடர்சுடுமெறெங்கிச்-செழுங்கொண்டல்
பொய்யாதகானகத்திற்பெய்யலையுஞ்சென்றனளே
பொய்யாமொழிப்பகைஞர்போல் (௮)

ஔவையார்

ஐம்பொருளுநாற்பொருளுமுப்பொருளும்பெய்தமைத்த
செம்பொருளையெம்மறைக்குஞ்சேட்பொருளைத்-தண்குருகூர்ச்
சேய்மொழியதென்பார்சிலரியாமிவ்வுலகில்
தாய்மொழியதென்போமுவந்து (௯)

சேய்மொழியோதாய்மொழியோசெப்பிரண்டுமொன்றே
வாய்மொழியையாருமறையென்பர்-வாய்மொழியோல்
ஆய்மொழிகள்சாலவுளவெனினுமம்மொழியுந்
சாய்மொழியவென்பேனுவந்து (௰)

மதுரைச்சொக்கநாதர்

கொங்குதேர்வாழ்க்கையஞ்சிறைத்தும்பி
காமஞ்செப்பாதுகண்டதுமொழிமோ
பயிலியதுகெழீஇயநட்பின்
மயிலியற்
செறியெயிற்றரிவைகூந்தலின்
நறியவுமுளவோநீயறியும்பூவே (௰௧)

அகவல்

மதிமலிபுரிசைமாடக்கூடற்
பதிமிசைநிலவும்பாணிறவரிச்சிற
கன்னம்பயில்பொழிலாலவாயின்
மன்னியசிவன்யான்மொழிந்திடுமாற்றம்
பருவக்கொண்மூப்படியெனப்பாவலர்க்
கொருமையினுரிமையினுதவியணிதிகழ்
குருமாமணிதிகழ்குலவியகுளைககீழ்க்
செருமாவுகைக்குஞ்சேரலன்காண்க
பண்பால்யாழ்பயில்பாணபத்திரன்
தன்போலென்பாலன்பன்றன்பால்
காண்பதுகருதிப்போந்தனன்
மாண்பொருள்கொடுத்துவரவிடுப்பதுவே (௰௨)

அங்கம்வளர்க்கவரிவாளினெய்தடவிப்
பங்கப்படவிரண்டுகால்பரப்பிச்-சங்கதனைக்
கீர்கீரெனவறுக்குங்கீரனோவென்கவியைப்
பாரிற்பழுதென்பவன் (௰௩)

நக்கீரர்

சங்கறுப்பதெங்கள்குலஞ்சங்கரனார்க்கேதுகுலம்
பங்கமுறச்சொன்னாலழகாமோ-சங்கை
அரிந்துண்டுவாழ்வோமரனாரைப்போல
இரந்துண்டுவாழோமினி (௰௪)

திருஞானசம்பந்தமூர்த்தி

கடியுண்டநெடுவாளைகாவிற்றப்பிக்
கயத்துக்குளடங்காமல்விசும்பிற்பாய
அடியுண்டவுயாதெங்கின்பழத்தாற்பூகம்
அலையுண்டுகுலைசிதறுமாவினா

படியுண்டபெருமானைப்பறித்துப்பாடிப்
பதம்பெற்றபெருமானே தமியேன்பெற்ற
கொடியொன்றுமின்பவனிகண்டெதிரேசென்று
கும்பிட்டாளுயிரொன்றுங்கொடுவந்தாளே (௯௫)

திருமங்கையாழ்வார்

வருக்கைநறுங்கனிசிதறிச்செந்தேன்பொங்கி
மடுக்கரையிற்குளக்கரையின்மதகிலோடப்
பெருக்கெடுத்துவண்டோலஞ்செய்யுங்காழிப்
பிள்ளையார்சம்பந்தப்பெருமாள்கேளீர்
அருட்குலவுமயிலைதனிலனலால்வெந்த
அங்கத்தைப்பூம்பாவையாக்கினுமென்
றிருக்குமதுதகவன்றுநிலவால்வெந்த
இளையுமோர்பெண்ணாக்கலியல்புதானே (௯௬)

சேமங்குருகையோசெய்யதிருப்பாற்கடலோ
வாமம்பராங்குசனோநாரணனோ-தாமம்
துளவோவகுளமோதோளிரண்டோநான்கோ
உளவோபெருமானுனக்கு (௯௭)

சங்கத்தார்-அகவல்

காலைஞாயிறுகடுங்கதிர்பரப்பி
வேலையுங்குளனும்வெடிபடச்சுவறித்
தந்தைதாய்மக்கண்முகம்பாராமல
வெந்தசாகமும்வெவ்வேறருந்திக்
குணமுடனூணுங்கொடுத்துறவாண்ட
கணவனைமகளிர்கண்பாராமற்
பழுத்தவுடலம்பசையறவற்றி
விழித்தவிழியெலாம்வேற்றுவிழியா (௯௮)

அறவுரையன்றிமறவுரைபெருகி
உறவறமொழிந்தவூழிகாலத்தில்
தாயிலார்க்குத்தந்தையேயாகியும்
தந்தையிலார்க்குத்தந்தையேயாகியும்
இந்தமாநிலத்திடுக்கண்டீர
வந்துதோன்றியமாவிதிக்கிழவன்
நீலஞ்சேரிநெடுமாலானுன்
ஆலஞ்செரியினுன்றசடையன்

பிறந்தும்பிறர்கேடுநினையான்
பிறர்பொருள்வவ்வான்
மறந்தும்போகான்வாய்மையுங்குன்றான்
இறந்துபோகாதெம்மையுங்காத்தான்
வருந்தல்வேண்டாம்வழுதி
இருந்தனமிருந்தனமிடர்கொடுத்தனனே (௰௯)

திருமழிசையாழ்வார்

கணிகண்ணன்போகின்றான்காமருபூங்கச்சி
மணிவண்ணாநீயிரங்கிராதே-துணிவுடனே
செங்நாப்புலவன்யான்செல்கின்றேநீயுமுன்றன்
பைந்நாகப்பாய்சுருட்டிக்கொள். (௨௰)

ஆக-செய்யுள்-௫௫௬



## சேர்க்கநாதப் புலவர்.



விருத்தம்

சீர்கறுத்தமுகிற்காத்தான் கஸ்தூரிபூபனருள் சேயாவென்று; மோர்கறுப்புமில்லாததொண்டவளநாட்டிருக்குமுசிதவேளே, ஆர்கறுப்பவென்றுசொல்லியழைத்தாலுநாமுன்னையன்பினாலே, போகறுப்பனிறஞ்சிவப்பன்கீர்த்தியினால்வெளுப்பனெனப்பேசுவோமே,

பிள்ளைவயதினிற்கல்விகற்றோம்பின்பு
பெரியநரவாகனமும்பெற்றோம்பூமி
உள்ளளவுங்கீர்த்திநிலைநிறுத்திக்கொண்டோம்
ஒருகுறையுமில்லையினியுரைப்பக்கேண்மோ
தெள்ளில்குசிதம்பரத்தைதெரிசித்தோம்பின்
சேற்கருங்கட்டனவநகைத்தெய்வயானை
வள்ளிபுணர்சிவப்பனையுந்துதித்தோமெங்கள்
வான்வணர்கறுப்பவுன்னைவாழ்த்தினோமே (௨)

எல்லப்பனம்மையப்பன்றருதிருவேங்கடராமனெழிற்சீராமன், வல்லக்கொண்டமனுடனேமாதைவேங்கடேசனைப்போல் வரிசைதந்

தான்.செல்லத்தம்பியருடனேமாவைபில்வாழ் கறுப்பண்ணன்றெரு
வீதிக்கே,பல்லக்குத்தான்சுமந்தான தூகமக் கோராயிரம்பொன்பரிசு
தானே,

பெய்யிலேயொருபாதியுமைக்களித்த செங்காட்டுவிமலனூரே,
மையிலேதோய்ந்தவிழிச்சந்தனமான்றலைக்கறியையளமாயாவி,நெய்
யிலேகான்சமைத்துக்கொடுத்திருந்தும்படைத்திருந்தநீர்தானின்று
கையிலேமழுவெடுத்தாற்பொய்யாமோபிள்ளைகொன்றகளவுதானே,

துப்பரையுமரகதத்தின் கொழுந்தரையு மொன்றாகத்துலங்கு
மெய்யா,செப்பரியபுலியதனைத்தரிக்குமுத்தராபதியிற்சிவனேநீதான்
அப்பரையும்வழுங்கியொருபிள்ளையுந்தின்றாற்றுமலையோவின்னுங்ச
சுப்பரையுங்கையுமாய்ப்புறப்பட்டாய்நல்லதிருக்காட்சிதானே, ()

அடிபட்டீர்கல்லாலுமெறிபட்டீரத்தனைக்குமானாயந்தப், படிப
ட்டும்போதாமலுதைபட்டீரிப்படியும்படுவாருண்டோ, முடிபட்டச
டையுடையீர்கழுக்குன்றீர்மூதற் கோணன்முட்டக்கோண. விடிபட்
டுப்பொறுத்திருந்தீர்சிவசிவாவுமைத்தெய்வமென்னலாமோ. (௮)

செல்லாரும் பொழில்புடைசூழ்புலியூரம் பலவாணதேமாவும்மைக்
கல்லாலும்வில்லாலுஞ்செருப்பாலும்பிரம்பாலுங்கடிந்துசாடும்
எல்லாருநல்லவரென்றெண்ணியருளீந்ததென்னவிகழ்ச்சியொன்றுஞ்
சொ. லாமல்மலரால்விட்டெறிந்தவனைகாய்ந்ததெனனசொல்லுவீரே

நல்ல ளையிடமருவுந்தியாகையாவுமதிடத்தினியாயங்காணேம்,
கல்லாலெறிந்தோர்க்குஞ்செருப்பாலுதைத்தோர்கருங்கடிந்துபோ
றில.வில்லாலேயடித்தோர்க்குங்கொடுத்திரேயெல்லாமல்விழிநீர்சோ
ர.எல்லாமுன்செயலென்றேயிருப்போருக்கியாதேனுமீகிலீரே ()

பண்காணுந்தமிழ்ப்புலவிரினத்தோடேயினஞ்சேரும்பரிசேபோ
லத் தண்காவிமலர்த்தடஞ்சூழ்காவிரிநாட்டொருபுதுமைசாற்றக்கே
ளீர், கண்காணகரையான்மேலவெண்காடை வீற்றிருக்கக்கண்டோம
ந்தவெண்காடையிடப்புறத்தே பச்சையன்னங்கலந்திருக்கும்விதங்க
ண்டோமே, (௰)

இந்திரனைகலையாயென்மருங்கிருந்தானக்கினியுதரம்விட்டகலா
ன்.எமனெனைக்கருதானாவெனைக்கருதி நிருதிவந்தென்னையென்செய்

வன். அந்தமாம்வருணைவிருகண்விட்டகலானைகத்தினின் மக்களும்யா
னும்அகிலமதாகுமமுதினைக்கொள்வோம்யாலெமக்குளாருதிரெதிற்,
சந்தகமிந்தவரிசையைப்பெற்றுத்தரித்திராஜனைவணங்கித்தலைசெயு
மெய்மைதிலைசெய்சற்கீர்த்திச்சாருவகோப்பையனுசவும், பந்தரபுய
த்தான்திப்பையரான்பகிழ்வொடுவிலையிலாவன்றேன்- வாக்கினுற்கு
போனுக்கினுனவனேமாசிலீசானபூபதியே (௰)

வண்டுகிண்டியதொங்கலோதிகுணக்கெழுந்திடுமணிலமோ
மன்னுநூபுரமோபயோதரமுருவானவர்கணிகையோ
அண்டர்பூபதிவனிதையோமுகமுதவாயிதழ்தும்பியோ
அரிகையாயுதமோபிறந்திடமன்னவமன்னவுலாவுவிச்
கொண்டநண்புமுதாரமுந்தவருதகோகனகானனன்
குத்திபல்லவராயமேருகுணுளதிப்பையன்வரையின்மேல்
துண்டவெண்பிறைவேணிகச்சிலைநாணைப்புகலாவிடின்
தூரமோவதிபாரமோவொருசேரனுக்கொருதொங்கலே

குணக்கெழுந்திடுமனிலம் கீழ்காற்று கொண்டல்மேகம் (ஒதி
நூபுரம்சிலம்புமலைகொங்கை) (வானவர்கணிகை அரம்பை வாழை
தொடை)அண்டர்பூபதிவனிதை சசி சந்திரன் முகம்) தும்பி வண்டு
தேன் இதழ்) அரிகையாயுதம் ஆழி திருப்பாற்கடல் (துண்டவெண்
பிறைசூடிகைச்சிலைநாண் ஆதிசேடன் வாசுகி வா சுகி என்னுவிடின்
(சேரன் தொங்கல்பனை)(மடலேறுவேனென்பது கருத்து.)

சந்திரனுக்குடலூனந்தனதனுக்கோர்கண் ஊனந்தருவிநீழல்
இந்திரற்கோப கக்குறியாமியவனுக்கோபுழுக்காலாமிரவியீன்ற
மைந்தனுக்கோகான்முடமாம்வனசனுக்கோர்தலைகுறையாய் வாழ்வ
ராயின், பந்தமுனமாணிடரைவிதிவிடுமோவாலவாய்ப்பதியுளானே

கட்டளைக்கலித்துறை

அட்டாவதானமுந்தொல்காப்பியமுமகப்பொருளும்
தொட்டாதிதொட்டப்ரபந்தமெல்லாநம்மைச்சொல்லிச்சொல்லி
ஒட்டாரக்கட்டிநம்மல்லக்குக்கொப்பையொடித்தெறிந்த
தட்டாரப்பையலரிகாபுத்ரனைக்சண்ணினனே. (௰௧)

பண்டனைப்பண்டனையோதுமெம்மானைப்பணிவரைக்கோ
தண்டனைத்தண்டனைசெய்யுமுத்தண்டனைத்தண்டனைமூ
தண்டனையண்டர்தொழுந்திருமாற்பேறமர்ந்தமணி
கண்டனைக்கண்டனையாயினெஞ்சேமுத்திகண்டனையே (௰௨)

துளைபடுமாமரமோரேழுமெய்தவன்றாதுகவி
உளைபடுவாரிதியொன்றேகடந்ததொளிர்தரள
வளைபடுவாவிமணவைமன்கூத்தன்வகுத்தகவி
தளையடுகாலுடனேகடலேழையுந்தாண்டினதே (௰௫)

துங்காதராதலமெங்குமொருமிக்கத்துய்த்தநர
சிங்காதராதரந்தானறிந்தெனல்கச்சேலம்வந்த
கெங்காதராரின்புகழ்கேட்டசைப்பன்கிரீடமென்றே
வெங்காதராவுக்குச்செய்தாணிலைமலர்வேதத்தயன் (௰௬)

புரசைவடமலையப்பாவிருட்கயம்பூண்டுகொண்டு
முரசைவடமலையப்பாலுஞ்செல்லமுழக்கஞ்செய்தோய்
சிரசைவடமலையப்பாம்பின்வைத்துத்திருக்கண்வளர்
இரசைவடமலையப்பாவிப்பாருக்கோரிந்திரனே (௰௭)

சோதிச்சவரிவிழிக்கோகரவில்லை தூயகுழல்
கோதிச்சவரிமுடிக்கரியாள்கொண்டகோலமென்னே
நீதிச்சவரிப்பெருமாளென்றேநினைந்துருகப்
போதிச்சவரிவட்காரோலமிகிலன்பூங்கொடியே (௰௮)

சொல்லுக்கினியகழுக்குன்றரேயுமைச்சொலலவென்றால்
அல்லற்பிழைப்புப்பிழைத்துவிட்டீர்முப்புராதியர்மேல்
வில்லைக்குனித்தெய்யமாட்டாதனீரந்தவேளைதனிற்
பல்லைத்திறந்துவிட்டீரிதுவோஉம்படைத்தொழிலே (௰௯)

துயிலையிலேயிடர்துன்னையிலேதெவ்வர்சூழையிலே
பயிலையிலேயிருட்பாதியிலேபசும்பாலனத்தை
அயிலையிலேவயதாகையிலேநமக்கார்துணைதான்
மயிலையிலேவளர்சிங்காரவேலர்மயிலையிலே (௨௰)

யோதாசிவகுருநாதாகலவைபுழுகொடுசெவ்
வாதார்ந்தகொங்கைக்குறமாதுவள்ளிக்குவாய்த்திடுமின்
பாதாருகற்செற்றவேலவிடுத்தாலென்பகையையறுக்
காதாமனமிரங்காதாசிவகிரிக்காங்கேயனே (௨௧)

காப்பிட்டபிள்ளைக்கறிக்கிச்சைபட்டுவையைக்கரைமேன்
மாப்பிட்டுவந்தமயிலேசனேமலையான்கின்னைக்
கூப்பிட்டுநின்றுகுனிந்தொருகோலக்கொம்பாற்றடவிப்
பூப்பட்டகண்ணிச்சயமாக்கினனைப்புயல்வண்ணனே (௨௨)

உம்பரைவாழ்வித்தநஞ்சங்கண்டோமெண்புரமெரித்த
அம்பரையேற்றியசூலங்கண்டோமருளுங்குறைவில்
நமபரைபாகமுங்கண்டோமவந்திருநாமஞ்சொலலா
வம்பரையுங்கண்ணிற்கண்டோம்வெண்காடனைவாழ்பத்துங்களே (௩)

மாடேறுதாளுமதியேறுசென்னியுமாமலரோன்
ஓடேறுகையுமுடையார்தமக்கிடமோங்கியநெற்
றூடேறுசங்கஞ்சொரிமுத்தைமுட்டையென்றேகமலக்
காடேறுமன்னஞ்சிறகாலணைக்குங்கழிக்குன்றமே (உச)

நெருப்புக்கறுக்கச்சிவப்புள்ளமேனியர்நீள்கனகப்
பொருப்பக்குனித்துப்பரமெரித்தார்கிடம்போர்க்களிற்றின்
மறுப்புக்கண்முத்தும்வளர்கழைமுத்தும்வளைக்கண்முத்தும்
கருப்புக்கண்முத்துமதிக்குலங்காட்டுங்கழுக்குன்றமே (உரு)

ஆலங்கிடக்குமனத்தார்க்கொருநன்றியம்பிலிட்ட
கோலங்கிடக்குங்கிடக்கண்டாயகுறையாதகுண
சீலங்கிடக்குமனத்தார்க்கொருநனறிசெய்யில்வெகு
காலங்கிடக்குங்கண்டாய்வணிகாசெந்தில்காத்தவனே (உசு)

வெண்பா

வேளுக்குவாம்பரியும்வில்லுக்குமீலமுஞ்சேல்
வாளொகக்குங்கண்மடவார்வாய்க்காடும்-நாளும்
மருதப்பனையேவளர்த்துவிட்டதாலே
மருதப்பனையேவணங்குவார் (உஎ)

சிந்தாமணிசங்குதேனுமலர்த்தாமரைசீர்
ஐந்தருவுமின்னவேயாயிருக்க-வந்தேதான்
நச்சவிடமேயுண்டகண்டாகடைதோறும்
பிச்சையிரந்துண்டதென்னபேசு (உஅ)

அந்திக்கார்வந்துமயலாற்றுவாரன்னையிடு
வந்திக்காவந்துவழக்குரைப்பார்-நந்திகொர்
கச்சிக்காளத்திக்கார்காதலுரைப்பார்க்கணக
கச்சிக்காளத்திக்கார்காண் (உகூ)

இருப்போமென்றாலுமிராதுளமாவேயிக்
கருப்போமென்றாலுங்கசக்கும்-விருப்பரும்
காசணமுகனைக்கடல்புடைசூழ்கோவலம்வாழ்
மாசண்முகனைமறந்து (௩0)

பாரவிளநீர்சுமக்கப்பண்டேயொருதவிடை
ஆரவடஞ்சுமக்கவாற்றுமோ-நேரே
புடைகனத்தகொங்கையின்மேற்பூக்களபஞ்சாத்தி
இடைக்கனத்தம்வைத்தவராரின்று (௯௧)

வெங்காயஞ்சுக்கானால்வெந்தயத்தாலாவதென்ன
இங்கார்சுமந்திருப்பாரிச்சரக்கை-மங்காத
சீரகத்தைத்தந்தீரேற்றேடேன்பெருங்காயம்
ஏரகத்துச்செட்டியாரே (௯௨)

என்னெஞ்சுகல்லாகுமென்றறிந்தக்கல்லுமையாள்
பொன்னஞ்சரணம்பொறுதென்றே-முனனான்
இடத்தாளையம்மியின்மேலேற்றுக்களக்காடா
இடத்தாளேயஞ்சாதேயின்று (௯௩)

முன்னேயிரண்டுமுலைமுற்றியபின்னாலுமுலை
எந்நேரவெண்மதலைக்கெட்டுமுலை-எந்நாளும்
பைந்நாகஞ்சூழ்மதுரைப்பாணாசின்பாகனுக்கின்
கென்னாகமென்னாமினி (௯௪)

நங்கையொருத்தியைநாமிருவர்மூவரையும்
பொங்கும்மனிபொறுக்குமோ-சங்கம்
குழையவரால்பாயுங்குருநாடர்கோவே
பழையவராலென்னபயன் (௯௫)

கங்கைபயணநமக்கென்றுரைத்தளவில்
அங்கம்பசலைநிறமானதே-செங்கை
வளைநெகிழப்பாதிமறந்தேனென்றோத
உளநெகிழப்பாதியுடைந்து (௯௬)

உன்னுயிருமென்னுயிருமொன்றென்பதின்றறிந்தேன்
மன்னுபுகழ்மச்சத்தார்மன்னவா-உன்னுடைய
பொன்னாகத்தெங்கையர்தம்போகநகச்சின்னங்கண்
டென்னாகத்தேயெரிகையால் (௯௭)

ஒருவர்க்கிடமாயுகந்திருந்தபாயல்
இருவர்க்கிடமாயதென்னே-மருவலரைக்
கன்னாட்டவின்னாட்டுங்கண்டன்கரிகாலன்
றன்னாட்டிதுபுதுமைதான (௯௮)

அம்பலவாணன்றனருகாலாடினாலாகாதோ
உம்பரெலாங்கண்டதெனக்கொப்பாமோ-சம்புவே
வெற்றிப்பதஞ்சலிக்கும்வெம்புலிக்குந்தித்தியென
ஒற்றிப்பதஞ்சலிமூர். (௩௯)

மாதாவுடல்சலித்தாள்வல்வினையேன்கால்சலித்தேன்
வேதாவுங்கைசலித்துவிட்டானே-நாதா
இருப்பையிலேவாழ்சிவனேயின்னமோரன்னை
கருப்பையிலேவாராமற்கா. (௪0)

இந்தவிடைநிர்மதறிதென்னுணையும்மாணை
சந்தேகமாகச்சமைத்தானே-அந்தவயன்
பாரதிராமன்வரையிற்பைங்கொடியீர்கொங்கையிள
நீரதிராமன்னடமின்னீர். (௪௧)

காளத்திகண்டத்தேகாளத்திநெற்றியிலே
காளத்தியுன்றன்கரத்திலேகாளத்தி
அங்கமெங்குமவெவ்வழலையாற்றினாண்ஞானப்பூங்
கங்கையென்னும்பெண்ணொருத்திகண்டு (௪௨)

மேவினுடனேவிடியும்விடியாது
கோவைமணிமார்பன்கூடாநாள்-தேவர்
இரண்டாதரிக்கின்றதென்னரங்கமாலே
இரண்டாலும்பொல்லாதிரா. (௪௩)

ஆக-செய்யுள்-௫௩



அம்மானை.

சித்தப்பூர்வாமூஞ்சிவனளித்தபிள்ளையார்
மெத்தப்பெறுவயிறுவீங்கினர்காணம்மானை
மெத்தப்பெறுவயிறுவீங்கினரேயாமாயின்
இத்தரையின்மீதவருக்கேச்சலவோவம்மானை
இரவுபகல்குட்டிணிக்கிங்கேச்சுண்டோவம்மானை, (௧)

விருப்பாரும் பூஞ்சோலைமேவுதிருவரங்கர்
திருப்பாறகடலுடையசெல்வர்காணம்மானை
திருப்பாற்கடலுடையசெல்வரேயாமாயின்

இரப்பார்க்குமெண்கொடுத்ததென்னமதியம்மானை
என்றல்லோமண்ணுண்டிருந்தனர்காணம்மானை, (௨)

ஆதாரமாகுடந்தையாதிகும்பேற்சுராஞர்
கோதாடுமன்மதனைக்கொன்றெரித்தாரம்மானை
கோதாடுமன்மதனைக்கொன்றெரித்தாராமாயின்
மாதாபிதாக்கள்பழிவாங்காரோவம்மானை
வாங்குதற்குமுன்வாயின்மண்விழுந்ததம்மானை (௩)

தொல்லுலகிலெல்லோருஞ்சொன்மாங்கனியொன்று
நல்லதொருகாஞ்சிநகரிலுண்டோயம்மானை
நல்லதொருகாஞ்சிநகரிலுண்டேயாமாயின்
எல்லார்க்குந்தானேயினிக்குமோவம்மானை
இனித்திநமொருவேளையெரித்திருக்குமம்மானை (௪)

மடுவார்கூந்தலுமையாண்மணகிழக்
கட்டுமாவொன்றுளதுகச்சியிலேயம்மானை
கட்டுமாவொன்றுளதுகச்சியிலேயாமாயின்
இட்டமாநற்கனிகாயில்லையோவம்மானை
இல்லாமற்கல்லாலெறிவாரோவம்மானை (௫)

கல்லாலின்கீழிருக்குங்காளத்திநாதருக்குப்
பொல்லாச்சிலந்திபுகுந்ததுகாணமம்மானை
பொல்லாச்சிலந்திபுகுந்ததுவேயாமாயின்
வல்லானொருபணிக்கன்வாரானோவம்மானை
வந்தல்லோபண்டுவடுப்பட்டதம்மானை ( )

ஆர்க்கடல்வயல்சூழாமறைவாழழகர்
தாரொத்தமேனிதழலொத்ததம்மானை
தாரொத்தமேனிதழலொத்ததாமாயின்
ஈரக்கங்காநதியாணிருப்பதேனம்மானை
ஈரம்பெருநெருப்புக்கில்லையேயம்மானை. (௭)

மாசிலாத்தென்விரிஞ்சைமார்க்கசகாயலிங்கர்
வேசியர்பாற்றூதுசொல்லிமீண்டனர்காணம்மானை
வேசியர்பாற்றூதுசொல்லிமீண்டனரேயாமாயின்
விசைமுனைவெழ்க்கமவர்க்கில்லையேயம்மானை
இல்லாமற்றலையிரக்கமேன்வந்ததம்மானை, (௮)

வற்றுதலையயிலும்வாள்விசயன்றன்கையிலும்
பற்றுமலண்ணலடிபட்டனர்காணம்மானை
பற்றுமலண்ணலடிபட்டவரேயாமாயின்
பெற்றாரில்லாதசிறுபிள்ளையோவம்மானை
பிள்ளைமதியுடையபுத்தர்காணம்மானை. (௯)

பூங்காவனஞ்சூழும்புள்ளிருக்கும்வேளூரான்
பாங்கானதென்மதுரைப்பாணன்காணம்மானை
பாங்கானதென்மதுரைப்பாணனேயாமாயின்
தாங்காதிழையெடுத்துத்தைப்பனோவம்மானை
தையலுக்குநல்லசமர்த்தன்காணம்மானை. (௰)

இப்பூமிதன்னிலியல்பாந்திருத்தணியில்
முப்பூவிளையுமுருகருக்கேயம்மானை
முப்பூவிளையுமுருகருக்கேயாமாயின்
அப்பவருக்கங்கேயரிதல்லோவம்மானை
அவர்க்குமுகமாறுனலப்பரிதோவம்மானை. (௰௧)

மாந்தரொடுவிண்ணோர்வணங்குதணிகாசலத்தான்
போந்துதலையோட்டிலிரப்போன்மகன்காணம்மானை
போந்துதலையோட்டிலிரப்போன்மகனேயாமாயின்
காந்திவிடுமாடகப்பொற்காசரிதோவம்மானை
கல்லாரவெற்படைந்தாற்காசரிதேயம்மானை. (௰௨)

பாலாறுசேரும்பரமர்திருவிற்கோலர்
நாலாறுசேரிநடுப்புகுந்தாரம்மானை
நாலாறுசேரிநடுப்புகுந்தாராமாயின்
தோலாமையோடெலும்புதொட்டதுண்டோவம்மானை
தொட்டனரென்றேமறையோர்தொட்டிலர்காணம்மானை (௰௩)

கோணமலையுடையகோதையிடப்பாகனார்
சேணாடர்போற்றுதிருவம்பலர்காணம்மானை
சேணாடர்போற்றுதிருவம்பலரேயாமாயின்
எனதிமால்பிரமர்க்கெட்டாரோவம்மானை
இடைமதிக்குங்குசமதிக்குமெட்டுவரோவம்மானை. (௪௧)

அண்டரெல்லாம்போற்றுகின்றதண்ணுமலைநாதர்
கண்டொருபெண்பாதியுடல்கைக்கொண்டாரம்மானை

கண்டொருபெண்பாதிவுடல்கைக்கொண்டாராமாயில்
உண்டவிடமெல்லாமேனூராதோவம்மானை
ஊறுமென்றேயுண்ணாமுலையாளம்மானை. (௧௫)

தேவாதிதேவன்றிருவல்லிக்கேணியண்ணல்
ஓவாப்பெருஞ்செல்வமுற்றவன்காணம்மானை
ஓவாப்பெருஞ்செல்வமுற்றவனேயாமாயின்
பூவாருமாவலிபாற்போவதேனம்மானை
போனகதைகேட்கிலதுபூத்தானமம்மானை. (௧௬)

வில்வர்திருச்சடிலமேவுமயிலேச்சுரனார்
செவந்தழைந்தநிறைசெல்வர்காணம்மானை
செல்வந்தழைந்தநிறைசெல்வரேயாமாயின்
இல்லங்கடோறுமிரப்பதேனம்மானை
இரந்தார்விதிதலைவந்தேறலாலம்மானை. (௧௭)

திரைக்கடல்விடத்தைத்தோர்ந்தவிரிஞ்சேசுரனார்
வாமத்தொருமயிலைவைத்தனர்காணம்மானை
வாமத்தொருமயிலைவைத்தனரேயாமாயின்
ஏமமுடிமேலரவமேறுமோவம்மானை
ஏறாதோவன்புற்றிருந்தக்காலம்மானை. (௧௮)

இருவருக்குங்காண்பரியவீசர்மதுரேசர்
விருதுகட்டியங்கம்வெட்டிவென்றனர்காணம்மானை
விருதுகட்டியங்கம்வெட்டிவென்றனரேயாமாயின்
அருமையுடம்பிருகூறுவதேனமமானை
ஆறுலுங்காயமில்லையையரிவர்க்கம்மானை. (௧௯)

அடர்ந்துவாழுங்குடந்தையாராவமுதர்
மடந்தைபாகர்க்கேறுமாடுகாணம்மானை
மடந்தைபாகர்க்கேறுமாடுதானாமாயின்
கடந்தபாதம்மிரண்டுங்காணாரோவம்மானை
கண்ணிரண்டும்பூவானாற்காண்பாரோவம்மானை, (௨௰)

கொண்டறிகழ்சோலைவளர்கும்பபுரிவாழானார்
பெண்டுகளைச்சுமந்தபித்தர்காணம்மானை
பெண்டுகளைச்சுமந்தபித்தரேயாமாயின்
கண்டவிடந்தங்குங்கருத்தரோவம்மானை
கண்டவிடந்தங்குங்கருத்தர்தாமம்மானை. (௨௧)

தெண்டிரைசூழ்தில்லைச்சிவகாமித்தாயார்க்குக்
கண்டமெல்லாஞானக்கரும்பதுகாணம்மானை
கண்டமெல்லாஞானக்கரும்பதுவேயாமாயின்
அண்டர்பிரானில்லை தனிலாடானேவம்மானை
ஆடிப்புலியூரமர்ந்தனன்காணம்மானை- (உஉ)

விருத்தசடைத்தில்லைநகர்மேவுஞ்சிதம்பரர்க்கு
வருத்தமிகுமொருகால்வாதமல்லோவம்மானை
வருத்தமிகமொருகால்வாதமேயாமாயின்
பெருத்தகடனஞ்சாற்பிழையாரோவம்மானை
பிழைத்தல்லோநடமாடிப்பேருற்றாரம்மானை. (உங)

விரிந்தபுகழ்புள்ளிருக்கும்வேளூர்வயித்தியனார்
பரிந்துவினைதீர்க்கவல்லபண்டிதர்காணம்மானை
பரிந்துவினைதீர்க்கவல்லபண்டிதரேயாமாயின்
மருந்துவிலைகைக்கூலிவாங்காரோவம்மானை
வாயிலேமண்ணோட்டிவாங்குவர்காணம்மானை (உச)

பாட்டுவரிச்சுரும்பர்பாடுஞ்சிதம்பரனார்
மாட்டிடையன்றேடமன்றிலாடெடுத்தாரம்மானை
மாட்டிடையன்றேடமன்றிலாடெடுத்தாராமாயின்
ஆட்டுக்காரன்னையறிந்ததெவரம்மானை
அறிந்தனகாண்காற்புலியுமரைப்பாம்புமம்மானை (உரு)

இன்னதிருவென்றிறைவன்றிறமதனைச்
சொன்னமறையுந்துணிந்தரியாதம்மானை
சொன்னமறையுந்துணிந்தறியாராமாயின்
கன்னிவனத்திடையேகாணலாமம்மானை
கண்டார்பிறிதென்றுங்காணார்காணம்மானை (உசு)

மாலறியாக்கள்ளனவன்வந்துமன்றுளேபுகுந்து
கோலமுடனெடுத்துக்குன்றெளித்தானம்மானை
கோலமுடனெடுத்துக்குன்றெளித்தானுமாயின்
காலுதலைதோலெலும்புகண்டதுண்டோவம்மானை
கண்டல்லோவிருகழுகுகாத்திருப்பதம்மானை. (உஎ)

கற்றைச்சடைமுடியார்கச்சியேகம்பருக்கு
நெற்றிக்கண்ணென்று நெருப்பதுகாணமம்மானை
நெற்றிக்கண்ணென்றுநெருப்பதுவேயாமாயின்

பற்றிச்சடையிற்படாதோவம்மானை
படருமென்றேகங்கைபதிவிருந்தாளம்மானை (௨௮)

செம்பொன்மலைவெள்ளிமலைசேரவிரண்டிருக்கக்
கம்பர்விரும்புவதுங்கஞ்சிகாணம்மானை
கம்பர்விரும்புவதுங்கஞ்சியேயாமாயின்
அம்புவியெல்லாமளக்கவன்னமெங்கேயம்மானை
அன்னதிருக்கம்பையாற்றிலுள்ளதம்மானை (௨௯)

ஈசன்பசுவாகியேமறொருகன்றாகி
வீசுபுகழாரூரின்வீதிவந்தாரம்மானை
வீசுபுகழாரூரின்வீதிவந்தாராமாயின்
காசளவுபாலுங்கறவாதோவம்மானை
கன்றையுதைகாலிகறக்குமோவம்மானை. (௩௰)

ஒற்றியூர்த்தியாகரொருபெண்பாற்சுந்தரரை
உற்றுநீசத்தியம்பண்ணென்றுளித்தாரம்மானை
உற்றுநீசத்தியம்பண்ணென்றுளித்தாராமாயின்
குற்றமுண்டோவன்பர்மேற்கோபமோவம்மானை
கோபமேதோமகிழ்வாய்க்கொண்டிருந்தாரம்மானை. (௩௧)

அக்கரவம்பூண்டிருந்தவங்கயற்கண்ணம்மையங்கர்
கைக்கொண்டுசெத்தகன்றைக்காவிவந்தாரம்மானை
கைக்கொண்டுசெத்தகன்றைக்காவிவந்தாராமாயின்
சொக்கர்மதுரைக்குத்தோட்டியோவம்மானை
தோட்டியென்றேகாமனையுஞ்சுட்டெரித்தாரம்மானை (௩௨)

ஆரவயல்சூழருணையண்ணாமலைநாதர்
பேருலகில்வண்ணாரப்பெண்கொண்டாரம்மானை
பேருலகில்வண்ணாரப்பெண்கொண்டாராமாயின்
சாரும்புடைவையெல்லாந்தப்பினரோவம்மானை
தப்பினர்தாருவனத்தார்புடைவையம்மானை. (௩௩)

இருப்பாதிருப்புலியூர்ச்செல்வர்சிலைக்கொழுந்தர்
கருப்பாஞ்சிலையானைக்காய்ந்தனர்காணம்மானை
கருப்பாஞ்சிலையானைக்காய்ந்தனரேயாமாயின்
ஒருத்திக்கிருவருடன்கலப்பேனம்மானை
கலவாரோகன்னிவனக்காவல்கொண்டாரம்மானை (௩௪)

மன்றாடியாமெங்கண்மாமாசிலாமணியார்
நன்றானமுல்லைக்குநாயகர்காணம்மானை
நன்றானமுல்லைக்குநாயகரேயாமாயின்னை
குன்றாமற்பெண்ணெங்கேகொண்டனர்காணம்மானை
கொண்டபெண்ணேநல்லகொடியிடைச்சியம்மானை (௧௫)

சுந்தரஞ்சேர்தென்குடந்தைச்சோமநாதப்பெருமான்
கந்தரிடமாமிதனைக்கைப்பிடித்தாரம்மானை
கந்தரிடமாமிதனைக்கைப்பிடித்தாராமாயின்
இந்தவுலகதனுக்கேற்குமோவம்மானை
ஏற்குமென்றேகையின்மழுவேந்தினர்காணம்மானை (௧௬)

அட்டதிக்கெண்கன்னிவளைத்தாரப்பரைக்கடலில்
இட்டகற்றூணோடுகரையேறவிட்டாரம்மானை
இட்டகற்றூணோடுகரையேறவிட்டாராமாயின்
விட்டகற்றூணீரின்மிதக்குமோவம்மானை
மிதவாதோமுன்வளைந்துவில்லானுலம்மானை, (௧௭)

தந்தைபிடித்தரியத்தாயானவள்சமைக்க
வெந்துவிடக்குய்ந்துமீண்டதுகாணம்மானை
வெந்துவிடக்குய்ந்துமீண்டதுவேயாமாயின்
மைந்தனுருப்புமணத்ததோவம்மானை
பாதையரன்வல்லபத்தான்மணத்ததுகாணம்மானை, (௧௮)

நாணொன்றசஞ்சிருக்குநற்சாபங்கற்சாபம்
பாணந்தான்மண்டின்றபாணங்காணம்மானை
பாணந்தான்மண்டின்றபாணமேயாமாயின்
சேணார்புரமெரித்தசேவகமேதம்மானை
சேவகத்தைச்சொல்லச்சிரிப்பலலோவம்மானை (௧௯)

பொன்னிரஞ்சித்திரஞ்சூழ்பூம்புகலூர்தன்னில்வளர்
தந்திமுகன்பெருவயிறன்சப்பாணியம்மானை
தந்திமுகன்பெருவயிறன்சப்பாணியாமாயின்
இந்தவயிற்றுக்கிரையெங்கேவம்மானை
என்றல்லோவீசனிரக்கலுற்றானம்மானை. (௨௰)

தென்னூருபுகழ்படைத்ததிருமுட்டத்தெம்பெருமான்
உள்ளதிலமெல்லாமுழுதுண்டாரம்மானை
உள்ளதிலமெல்லாமுழுதுண்டாராமாயின்

கள்ளனிவனென்றுசொல்லிக்கட்டுவதேனம்மானை
கட்டாரோபோரிற்கதிர்மறைத்தாலம்மானை, (௪௧)

அடுத்ததிருக்காவிரிசூழணியரங்கரெப்போதும்
எடுத்ததிருக்கோயிலைவிட்டெழுந்திராரம்மானை
எடுத்ததிருக்கோயிலைவிட்டெழுந்திராராமாயின்
படுக்கையிலேவிடந்தீண்டிப்பட்டனரோவம்மானை
பட்டனரென்றல்லோபருந்தெடுத்ததம்மானை (௪௨)

மட்டுற்றசோலைமதுராபுரிச்சொக்கர்
பிட்டுக்குமண்சுமந்தபித்தர்காணம்மானை
பிட்டுக்குமண்சுமந்தபித்தரேயாமாயின்
ஒட்டத்தொழிலவருக்குள்ளதோவம்மானை
உள்ளன்பிலாதவருக்கொட்டர்காணம்மானை (௪௩)

நீண்மதில்சூழாயல்வளர்நீலகண்டேசுரனார்
சேணுயர்ந்தகீர்த்தித்தியாகர்காணம்மானை
சேணுயர்ந்தகீர்த்தித்தியாகரேயாமாயின்
காணக்கொடைக்கொடிதான்கட்டினரோவம்மானை
கையாற்சொன்னக்கொடியைக்கட்டினர்காணம்மானை, (௪௪)

அம்புலியூரென்னுமணிகொள்சிதம்பரத்தே
வெம்புலியொன்றெந்நாளுமேவுங்காணம்மானை
வெம்புலியொன்றெந்நாளுமேவுமேயாமாயின்
அம்பலத்தைத்தான்விட்டகலாதோவம்மானை
ஆட்டைவிட்டுவேங்கையகலுமோவம்மானை (௪௫)

புட்படியுநாரணன்போற்பூவைவேங்கடாசலவேள்
மட்படியில்வாழும்வயித்தியன்காணம்மானை
மட்படியில்வாழும்வயித்தியனேயாமாயின்
கட்படுநோய்தீரக்காண்பானோவம்மானை
காண்பானிவனுக்கடைமருந்தாலம்மானை. (௪௬)

செல்லார்வலஞ்சுழியிற்செங்கழுநீர்ப்பிள்ளையார்
எல்லார்க்குநல்லவரமீவர்காணம்மானை
எல்லார்க்குநல்லவரமீவரேயாமாயின்
தொல்லுலகிலுள்ளோர்துதியாரோவம்மானை
துதிக்கையவர்தமக்குச்சொந்தமன்றோவம்மானை, (௪௭)

தேங்குபுகழ்த்தென்மயிலைச்சிங்காரவேன்முருகர்
வேங்கைவனத்திலன்றுவேட்டைவந்தாரம்மானை
வேங்கைவனத்திலன்றுவேட்டைவந்தாராமாயின்
பாங்காகவேமுயன்மான்பற்றினரோவம்மானை
பற்றினரோமான்கன்றைப்பாரறியவம்மானை (௪௮)

வடவாறுசூழவரும்வாழ்மயிலின்வாகனனார்
விடமானெனும்புகொண்டவேடன்மகனம்மானை
விடமானெனும்புகொண்டவேடன்மகனாமாயின்
அடைவானவள்ளியறியாளோவம்மானை
அம்மான்மகளறிந்தாலச்சமுண்டோவம்மானை. (௪௯)

திரிச்சிராப்பள்ளியரன்செட்டிமகட்காவேடம்
தரிச்சுமருத்துவஞ்செய்தாயானாரம்மானை
தரிச்சுமருத்துவஞ்செயதாயானாராமாயின்
மருத்தெண்ணெய்ச்சிக்கின்மணமிலையேயம்மானை
மட்டுவார்குழலிருந்தான்மணமரிதோவம்மானை. (௫௰)

நாடுந்திருச்சம்புநாதர்க்கிருப்பிடத்தில்
ஓடுஞ்சலம்பெருகியூற்றெடுத்ததம்மானை
ஓடுஞ்சலம்பெருகியூற்றெடுத்ததாமாயின்
நாடுமொருசிலந்திநண்ணினதோவம்மானை
நவைதீரொருசிலந்திநண்ணினதுண்டம்மானை. (௫௧)

எண்ணரியகாஞ்சியில்வாழேகாம்பரநாத
அண்ணறிருமேனியெங்குமாகாசமம்மானை
அண்ணறிருமேனியெங்குமாகாசமாமாயின்
வண்ணமுலைமார்பின்வடுப்படுமோவம்மானை
மாவடியில்வாழ்பவர்க்குவடுவரிதோவம்மானை, (௫௨)

பூங்கொன்றைநாதன்புகழ்கச்சியேகம்பன்
செங்கண்ணின்மீதேறுஞ்செல்வன்காணம்மானை
செங்கண்ணின்மீதேறுஞ்செல்வனேயாமாயின்
மாங்கண்ணின்கீழிருக்கவந்ததேனம்மானை
வந்தல்லோவிவ்வாறுவடுப்பட்டதம்மானை. (௫௩)

சேற்றுன்மடையடைக்குஞ்சேவகனார்கூடலிலே
வேற்றாளாய்மண்சுமக்கவேண்டினார்காணம்மானை

வெற்றுளாய்மண்சுமக்கவேண்டினரேயாமாயின்
மாற்றுனடித்தவடுவிலையோவம்மானை
மாவடியில்வாழ்பவர்க்குவடுவரிதோவம்மானை, (௫௪)

எட்டுத்திக்குள்ளோருமிறைஞ்சுமெங்கள்சொக்கலிங்கம்
கிட்டுகின்றவேகசந்தகிராகிகாணம்மானை
கிட்டுகின்றவேகசந்தகிராகியேயாமாயின்
கொட்டிமகவான்பல்கார்க்குழறுவதேனம்மானை
குழறுனோவாசாற்க்கோளிழைத்தாலம்மானை, (௫௫)

பதமலராற்சகடுதைத்தபாரடமலையர்
அதிகுணத்துநிலமகண்மேலாசைகொண்டாரம்மானை
அதிகுணத்துநிலமகண்மேலாசைகொண்டாராமாயின்
விதுமுகத்துமலர்மானைவிட்டனரோவம்மானை
விடுவாரோமாலானுன்மேதினிக்குளம்மானை, (௫௬)

மனஞ்சலியாமற்றினமுமாறுமற்றண்டலையார்
தினங்கீரைமாவடுவுந்தின்றுவந்தாரம்மானை
தினங்கீரைமாவடுவுந்தின்றுவந்தாராமாயின்
கனங்கொண்டுமெய்யிலனல்காணுதோவம்மானை
கண்டதுகாணெற்றியிலேகண்ணெரிச்சலம்மானை (௫௭)

தண்டாமரைத்தடஞ்சூழ்தண்டலையாரெப்பொழுதும்
உண்டாரிளங்கீரைமாவடுவுமம்மானை
உண்டாரிளங்கீரைமாவடுவுமாமாயின்
பண்டேதான்றின்றுபழக்கமுண்டோவம்மானை
பழக்கமில்லைத்தாயனூர்பழக்கிவைத்தாரம்மானை. (௫௮)

பொன்னேறுமார்பர்புகழ்சேர்திருவரங்கர்
எந்நேரமும்பாம்பிலேகிடப்பாரம்மானை
எந்நேரமும்பாம்பிலேகிடப்பாராமாயின்
என்னேதலைக்குவிடமேறுதோவம்மானை
ஏறுமோசெங்கருடனேறினலம்மானை. (௫௯)

எந்தவுலகும்பரவுமெங்கள்சொக்கலிங்கேசர்
சந்ததமும்பொன்மன்றிற்றுனடிப்பாரம்மானை
சந்ததமும்பொன்மன்றிற்றுனடிப்பாராமாயின்
அந்தவெள்ளிமன்றதனிலாடினதேனம்மானை
ஆடினார்கான்மாற்றதிகமென்றேயம்மானை. (௬௰)

நேயமிகுமாயல்வளர்நீலகண்டேச்சுரனார்
ஆயுமவர்க்கெல்லாமருண்மேகமம்மானை
ஆயுமவர்க்கெல்லாமருண்மேகமாமாயின்
காயமுழுதுங்கறுக்கரதோவம்மானை
கண்டமட்டுத்தான்கறுப்புகாட்டினதேயம்மானை. (௯௧)

மத்தமதிசூடுமயிலைவிருபாட்சிலிங்கர்
சுத்தவடிவெல்லாஞ்சுடர்வடிவேயம்மானை
சுத்தவடிவெல்லாஞ்சுடர்வடிவேயாமாயின்
மத்தகத்திற்றிங்கள்வயங்குமோவம்மானை
வயங்குமிருகண்ணாய்மருவுதலாலம்மானை (௯௨)

காராமருங்கண்டர்கயிலாயநாயகனார்
பாரறியக்கையிற்பணம்படைத்தாரம்மானை
பாரறியக்கையிற்பணம்படைத்தாராமாயின்
ஊர்தோறும்பிச்சைக்குழல்வதேனம்மானை
உழலாரோபங்காளிக்கொப்பித்தாலம்மானை (௯௩)

பையரவஞ்சூடுதிருப்பட்டீச்சுரநாதர்
தையலாங்கங்கைதனைத்தரித்தாரம்மானை
தையலாங்கங்கைதனைத்தரித்தாராமாயின்
மெய்யிற்குளிர்வாதமேவாதோவம்மானை
மேவுமோவன்னிகையில்வீற்றிருந்தாலம்மானை. (௯௪)

ஆனைபனந்தாள்முகிக்கயன்வகுத்த
மானத்தனம்வளர்ந்துவாய்த்ததுகாணம்மானை
மானத்தனம்வளர்ந்துவாய்த்ததேயாமாயின்
ஏனதனின்வட்டப்பாடிருக்கின்றதம்மானை
இடைகுறைந்தால்வட்டப்பாடில்லையோவம்மானை (௯௫)

போரானபோரூரிற்பிள்ளையார்வேம்படியில்
சீராகவாழுஞ்சிவன்மைந்தனம்மானை
சீராகவாழுஞ்சிவன்மைந்தனாமாயின்
கூரானகொம்பொடிந்தகுற்றமேனம்மானை
ஒடிந்தல்லோபாரதமுமுண்டாச்சுதம்மானை (௯௬)

அண்டர்புகழ்போரூரிலாறுமுகத்தன்முன்னோன்
பெண்டுகொள்ளமாட்டாப்பிரமங்காணம்மானை

வெண்டுகொள்ளமாட்டாப்பிரமமேயாமாயின்
கண்டவரெல்லாங்குட்டக்கணக்குண்டோவம்மானை
குட்டுவார்தங்கள்குறைதீரவம்மானை (௬௭)

யொல்லாதபாவமெலாம்போக்குதிருப்போரூரில்
வல்லானிடதித்துண்டோர்வாழானையம்மானை
வல்லானிடத்திலுண்டோர்வாழானையாமாயின்
நல்லாள்குறத்திநடுங்காளோவம்மானை
நடுங்காமற்றுணிருவர்நடுவிருந்தானம்மானை. (௬௮)

மண்டலமெல்லாம்புகழுமாபோரூர்வேலவனூர்
பெண்டிரண்டுகொண்டபெருமான்காணம்மானை
பெண்டிரண்டுகொண்டபெருமானேயாமாயின்
சண்டையிடாரோவவர்சதாகாலமம்மானை
இட்டல்லோபோரூரென்றேற்பட்டதம்மானை. (௬௯)

பேசுபுகழ்போரூரார்பேதைக்குறச்சிறுபெண்
ஓசைதனைக்கேட்டுவனத்தோடிவந்தாரம்மானை
ஓசைதனைக்கேட்டுவனத்தோடிவந்தாராமாயின்
ஆசையாய்ப்பெற்றதவளைமானம்மானை
அம்மான்மகளென்றேயறிந்துகொண்டாரம்மானை (௭௰)

வீசுபுகழ்போரூரில்வேலவர்முன்செய்தமணம்
காசுபணநோக்கலியாணமம்மானை
காசுபணநோக்கலியாணமாமாயின்
பேசரியவிந்திரனேன்பெண்கொடுத்தானம்மானை
கொடுத்தானேசூரன்குடிகெடுக்கவம்மானை (௭௧)

நாடிவந்தபேர்க்கெல்லாநலங்கொடுக்கும்போரூரார்
பாடிகிரிநாதருக்குப்பண்பட்டாரம்மானை
பாடிகிரிநாதருக்குப்பண்பட்டாராமாயின்
ஆடினவரின்னமுவந்தாடாரோவம்மானை
ஆடுவார்பாடவறியார்காணம்மானை. (௭௨)

துள்ளிமயிலேறுந்துரைவேலன்போரூரில்
வள்ளுவர்தங்கச்சிதனைவைத்திருந்தாரம்மானை
வள்ளுவர்தங்கச்சிதனைவைத்திருந்தாராமாயின்
கொள்ளுங்குலங்கலக்கக்கூடுமோவம்மானை
கூடினதுந்தேடினதுங்கோடியுண்டேயம்மானை (௭௩)

நம்பர்திருநாகைநாகலிங்கநாயகனார்
அம்பொன்மலைவீடாவமர்ந்தனர்காணம்மானை
அம்பொன்மலைவீடாவமர்ந்தனரேயாமாயின்
அம்பலத்தினின்றுகூத்தாடுவதேனமம்மானை
ஆடையணிபணிக்காவாடினர்காணம்மானை (௭௪)

கற்றுணர்ந்தார்போற்றுங்கழுக்குன்றத்தீச்சுரனார்
உற்றெமனைக்காலாலுதைத்தனர்காணம்மானை
உற்றெமனைக்காலாலுதைத்தனரேயாமாயின்
பற்றியதோர்கால்வலிவும்பட்டதோவம்மானை
பாடுமுயலகன்வலியும்பட்டதுகாணம்மானை (௭௫)

அப்பார்வயல்சூழணிவிரிஞ்சைவாழரனார்
இப்பாரில்வணிகனுயிரிரட்சித்தாரம்மானை
இப்பாரில்வணிகனுயிரிரட்சித்தாராமாயின்
தப்பாதெவர்க்குஞ்சகாயரோவம்மானை
சதாகாலமார்க்கசகாயர்காணம்மானை (௭௬)

நாடுதிருக்கோவனல்லூர்நாதர்தினமுமறைக்
காடுதனிற்றிரியுங்கள்ளர்காணம்மானை
காடுதனிற்றிரியுங்கள்ளரேயாமாயின்
மாடெடுக்கவாடெடுக்கமாட்டுவரோவம்மானை
மாட்டாரோவம்புலியைவைத்திருந்தாலம்மானை (௭௭)

சங்கரனாராபற்சகாயனார்சந்ததமும்
மங்கையுடன்கோவனல்லூர்மகிழ்ந்திருந்தாரம்மானை
மங்கையுடன்கோவனல்லூர்மகிழ்ந்திருந்தாராமாயின்
கங்கைநீர்சென்னியின்மேற்கடுவதேனமம்மானை
கட்டியல்லேர்வலர்தேகங்காய்ந்ததுகாணம்மானை (௭௮)

மன்னுரையம்பேட்டைவாழ்சந்தரசேகரனார்
என்னாளுமெண்ணினவெல்லாமுடிப்பாரம்மானை
என்னாளுமெண்ணினவெல்லாமுடிப்பாராமாயின்
இன்னும்விவாகமவர்க்கேனில்லையம்மானை
இருப்பிடமில்லார்க்குப்பெண்ணெவர்கொடுப்பாரம்மானை. ( )

அத்தர்நெடுவாயிலருணசைலேச்சுரனார்
சுத்தமிகும்பெண்கொண்டசுந்தரன்காணம்மானை

சுத்தமிகும்வெண்கொண்டசுங்கானையாமாயின்
எய்த்துடம்புபாதியாயிளைத்ததென்னவம்மானை
இசையினனங்காறுதிளைத்ததுகாணம்மானை (௮௰)

வீறனகோடைநகர்வேங்கியப்பர்க்கெப்பொழுதும்
நீறுமிஞ்செஞ்சடைமேனீரெற்றமம்மானை
தீறுடுஞ்செஞ்சடைமேனீரெற்றமாயின்
கூறுருமேனிகுளிராதோவம்மானை
கோடைக்குமுன்னேகுளிருமோவம்மானை. (௮௧)

ஆரூரில்வாழ்கின்றவாதிவிடங்கப்பெருமான்
போருமவாதப்பிணிக்காலனம்மானை
போரும்வாதப்பிணிக்காலனுமாயின்
ஆரார்பிணிக்குமருந்தருத்தினரோவம்மானை
அருத்திற்பிணியறுமோவாழிநஞ்சாலம்மானை (௮௨)

வெள்ளெருக்கம்பூச்சூடும்வேதபுரிநாதர்
வள்ளலமார்க்கெல்லாம்வாத்திகாணம்மானை
வள்ளலமார்க்கெலலாம்வாத்தியேயாமாயின்
பிள்ளைகையிலுபதேசம்பெற்றதென்னவம்மானை
பெற்றாலும்பின்னூற்பிழைபொறுத்தாரம்மானை (௮௩)

காலனையுங்காமனையுங்காட்சிசிறுத்தொண்டனிட
பாலனையுங்கொன்றபழிக்காரனம்மானை
பாலனையுங்கொன்றபழிக்காரனுமாயின்
சாலவுயர்ந்தோர்முடியைச்சாய்க்காரோவம்மானை
சாய்த்தவரெல்லாம்பெரியசைவர்காணம்மானை (௮௪)

நத்துலவுதென்மயிலைநாதர்திருவாலீசர்
சித்தசனையுற்றெரித்தசேவகர்காணம்மானை
சித்தசனையுற்றெரித்தசேவகரேயாமாயின்
அத்தலைதீக்கொண்டதெவாற்றினர்காணம்மானை
ஆறுதலையுள்ளார்க்கரிதலவேயம்மானை (௮௫)

மன்னுவெள்ளியம்பலமுமாசறுபொன்னம்பலமும்
என்னுடையவீசற்கிவையிரண்டுண்டாம்மானை
என்றுடையவீசற்கிவையிரண்டுண்டாமாயின்
இன்னுமிருப்பம்பலமொன்றில்லையோவம்மானை
இருப்பம்பலமடியாரிதயங்காணம்மானை. (௮௬)

## காஞ்சீபுரம் - வித்வான்,

## கச்சபாலஐயர்வர்கள் பாடிய.

### கட்டளைக்கலிப்பா

---

கந்தித்தாளையடுத்தணி சங்கினங்கான்றநித்திலக சச்சிட்டுக்கைக ளால், பந்தித்தாளைமருட்டு மூலைச்சியைப்பாரையாவுன் றன்யாதத்தி லேவந்து, வந்தித்தாளையினிக்கை விடாமலேமஞ்சமீதி லிருத்திமகி ழ்ச்சியாய்க், சந்தித்தாளையமேனினஞ் சித்திரசத்ரமேவும் விநாயக னாயனே. (அஎ)

### விருத்தம்.

திருக்கோலம்பாரதத்தைமருவவகழ்ந்துங்காஞ்சிவனுக்கேற்ய ப், பெருக்கோலம் பாரதத்தையகற்றெனமானே மதவேள்பிறங்கத் தாண்டும், மருக்கோலம்பாரதத்தை மருவுமூணவையு மாற்றமருவி யுன்னைத், தெருக்கோலம்பாரதத்தைப் பொருவவைத்தான்விநாயக னஞ்சீர்மையோனே. (அஅ)

அஞ்சனத்தையணிவிழிமான்மயிலைவிநாயக துரைமேலாசையா லே, நஞ்சனத்தையும்விடுத்தானென்சமைத்துத்தருமினியா நலத்தகி ம்பால், மிஞ்சனத்தையும் வெறுத்தாளவன்குலளைத் தாரிணையேவே ண்டுகின்றாள், கஞ்சனத்தையலையிவ் வாறலையவமைத்தா னெனிலயா ங்கருதலென்னே, (அகூ)

எத்தவளைக்கா வெருங்கண்ணன்மயிலைவிநாயக வேளினிதினெல் லாம், பூத்தவளைக்காத்தவளைப் பொடித்தவளைப் புனைந்தவளைப்போற் றுமன்பன், நீத்தவளைச்செவிமடவார்பலகோடி சிலகோடிநேர்ந்தமாத ர், கோத்தவளைக்கரமடவாளிது தெரியாதாசைகொண்ட கொள்கை யேதே. (கூ0)

இத்திக்கத்திரிபுகழ்புனைபுலவோருளங்களிக்கத்தியாகமெங்குஞ்
சத்திக்கத்திரிதலிலாதளிக்குமவிநாயகமுகிலேத கைசேர்காது
குத்திக்கத்திரிபாகல்செவிபுனையாக்குழன்முடியாக்கோதைபின்பஞ்
சித்திக்கத்திரிதவின்றப்பயனிலைசற்றேமனந்தாள்சீர்மையோனே (கூக)

ஆகச் செய்யுள -கூஅஎ,

## நமச்சிவாயப் புலவர்பாடிய.

### விருத்தம்.

அவிசெட்டிவாங்குசுரர்க்கிறை நிகராய்வளமருவுமமரமென்றே, த விசெட்டிமரம்போலவளாந்திருப் போர்தமைப்பாடோந்தனிகழ்கிரண

கவிசெட்டி திருவடியைப் புகளவணிகனிசையுடனற்க வினர்தஞ்சைச் செவிசெட்டி பாலடைந்தா னமது குறை விட்டோடுஞ் சேற்கண்மானே, (க)

பாங்குயர்பளிக்குமேடைகொல்லுலையா மாருதந் துருத்தியா நீடும்பகர்நிலாக்கற்றை பதடியா மூடும்படரிருட்குழாங்குடைகரியா, ஓங்கியசெக்கருள்ளிடுங்கனலா வுயர்பெரும்பனிகொடும்புகையா, உருவிலியென்னுங்கொல்லனென் பொன்னையுருக்குமாறென் கொலோவுரையாய்; தூங்கியவிழியுந்தாம் புடைக்கயிறுந் தூம்புறுகாம்பியற்குழலும், துவருடைத்து இலுங்கவருடைக்கழியுந் தொறுவியருறிபடுகுடமும், தாங்கியகையுமெய்யுமாய்நின்று தண்ணளிபெய்யு மாமுகிலே, தாண்டவராயபாண்டவர் தூதா காழ்வில்சீர்க்கோவலாதிபனே, (உ)

மெய்யாரப்புலிகாணப்பொதுவிலாட்டை
மிகவெடுத்திருமையாளுக்கொருவங்கீந்தீர்
மையாரப்பணமெடுத்திரையாநீர்தாம்
பாரறியச்சக்கரத்தைமாலுக்கீந்தீர்
செய்யாரத்தடம்புடைசூழ்கருவையாளுந்
திருக்களாவீச்சுரரேதேவரீர்தாம்
கையாரமழுவெடுத்துக்காட்டினாலுங்
களவும்மைக்கொண்டேநான்காண்பிப்பேனே, (௩)

மான்பிடித்தீர்முயன்மிதித்தீரெவருங்காண
மன்றுதனிலாடெடுத்தீர்மகத்துவந்த
ஊன்பெருத்தயானையைக்கொன்றுரித்தீர்மால்
உரப்பானதலைக்கறிக்குமுவந்தீரையா
மீன்பொதிந்தவிழிமடவாட்கொருபங்கீந்தீர்
மேலானவேடனெச்சின்மிகவேகொண்டீர்
கான்போதிந்தகாளத்திநாதாவும்மைக்
கழுக்கள்வந்துசுற்றுவதுங்காணத்தானே. (௪)

கருப்பதங்களொவ்வொருதூண்பாவுக்கல்லவோயாதவாரமேரு, சுரிப்படங்காப்போதிகைநீ செய்தபணிவிடையையென்ன சொல்வேனையா, தருப்பொலியுங்கரதல முத்திருளப்பசாமீ நின்றாய்பாலுன்னைக், கருப்பணிமூன்றிருப்பணிக்கென்று நப்பணிஞன் மருப்பொலியுங்கமலத்தோனே. (௫)

சேதுபதிகாத்தமுத்துராமலிங்கதுரைராசசிங்கமந்திரி
மாதுலதிருத்திருளப்பன்கொடியவரிதேங்கைவளராதிக்கம்
கோதுறுபாமரக்காடுகருணீகர்மும்மதக்கோல்யானைமற்றோர்
மோதுபெரும்புளிக்காடு கல்விமான்களூர்திரிந்தான் மோசந்தானே

கட்டளைக்கலித்துறை.

ஞாலத்தவரும்புகழ்குடந்தாபுரிநாதனெங்கோன்
காலப்புயல்வண்ணன்கண்மலர்சாத்தக்கருத்திலுன்னி
சீலத்தவனம்மடியானென்றியார்க்குந்தெரியவிட்ட
சூலக்குறியல்லவோநாமம்யாதென்ச்சொல்லியதே. (௭)

வியந்தநிசாசரனுமென்றுசந்தரனும்வெஞ்சனிக்குப்
பயந்தவனுமென்றுபானுவும்வந்துமணியச்செம்பொன்
நயந்தருசெல்வக்கழுகாசலமதுநண்புவைத்துச்
செயந்தந்ததாள்மதியாதவரென்னத்திரிந்தனரே. (அ)

பொருகோட்டுவாரிநிலத்திற்குணங்கெட்டபூரியரைத்
தருகோட்டுக்கொம்பென்றுரைத் தெனபயன்வருந்தண்டமிழீர்
வருகோட்டுத்திங்கண்முடிக்கூத்தர்தில்லைவனத்தில்வளர்
ஒருகோட்டுக்கற்பகமெல்லாந்தருந்தன்னையுற்றவர்க்கே. (௯)

வெறிவிலக்கல்.

வண்டுறைசோலைமலைப்பரிகாரிவந்தாலிவளுக்
கண்டுபடாதவிக்காமச்சுரம்விடுமாதலினால்
பண்டுமறுகினர்மோலிந்தவேளையிற்பாயசத்தைக்
கொண்டுவந்தீரிதிற்றேறுடம்பிறர்திடுங்கோதையரே. (௰)

மடைத்தாமவேற் கண்ணிகண்ணீர்ப்பரவாகப்பரவையொங்கி
உடைத்தாலடைத்தறகுபாயமுண்டோநறையூற்றிதழித்
தொடைத்தார்மௌலியிற்நம்மாடுகட்டிச்சுமந்துசுமந்
தடைத்தாலடைவடச்சொக்கேயிதுவையையாறல்லவே. (௰௧)

ஏழேழுசங்கத்துடனிருந்தானென்றியப்புகின்றீர்
மாழேழ்மையுற்றிடுமானிடரேசொக்கர்மண்மறியீர்
ஆழேழுலகத்துக்கப்பாலிருந்தவடிகளும்பர்
வாழேழுலகத்துக்கப்பாலிருந்தமணிமுடியே, (௰௨)

காவொன்றுங்கைத்தலத்தண்ணல்செல்லூரன் கனிந்துநம்மை
வாவென்றழைத்திட்டமோதிரமேவண்மையானதமிழ்ப்

யாவொன்றுஞ்சற்றுமறியாதபுல்லர்தம்மைக்கலிற்றோய்த்
தாவென்றுகையெடுத்தேற்காமலிட்டதடையிதுவே. (௰௩)

தடக்கும்பகிம்புரிக்கொம்பாசலப்பெருந்தந்திபட
நடக்குந்துரங்கத்துரைசீதக்காதிநன்னாட்டினல்
வடக்குங்குமக்கொங்கைமின்னேயவன்றெருவாயிலிலே
கிடக்குங்கவியும்பராராசரத்னகிரீடமுமே. (௰௪)

பூமாதிருந்தென்புவிமாதிருந்தென்னபூதலத்தில்
நாமாதிருந்தென்னநாமிருந்தென்னநன்னாவலர்க்குக்
கோமானழகமர்மால்சீதக்காதிகொடைமிகுந்த
சீமானிறந்திட்டபோதேபுலமையுஞ்செத்ததுவே (௰௫)

மாகத்தத்தும்புகழான்பகைவேந்தர்மகுடம்பொடி
ஆகத்தத்தும்பரியான்சீதக்காதியணிமலரின்
ஏகத்தத்தும்பியிசைபாடுமார்பனிலென்மகட்கோர்
மோகத்தத்துண்டென்றுசொன்னாரிலைமுன்மொழிந்தவரே. ()

மைப்போதகமும்வளநாடுஞ்செந்தமிழ்வாணர்க்கருள்
கைப்போதகமனையான்சீதக்காதியைக்காத்திருந்த
அப்போதறிந்திலமிப்பாழ்ம்பணத்தினருமையெல்லாம்
இப்போதறிந்தனமீயாதலோபரிடத்திற்சென்றே. (௰௭)

இட்டாதுபெண்குடிமார்க்கங்கணவன்கிழவனல்ல
பட்டாணிச்சேவகனல்லும்பகலும்பொற்பிசக
ஒட்டான்பொய்யல்லமலைமேலிருக்குமுமக்குமிவள்
எட்டாதகொம்பிற்கனிகாண்பரங்குன்றிருப்பவனே. (௰௮)

மஞ்சுமஞ்சுங்கைப்பரராசசேகரமன்னன்வெற்பில்
பஞ்சுமஞ்சும்பதப்பாவைநல்லீர்படைவேள்புகழ்
அஞ்சுமஞ்சுங்கயலஞ்சுமஞ்சுங்கடலஞ்சுமஞ்சும்
நஞ்சுமஞ்சும்வெற்றிவேலோவுனதுநயனங்களே. (௰௯)

வெண்பா.

பாரார்சொல்லாரார்பறவைக்குலங்கடம்மிற்
சீராருங்கிள்ளைமுதற்செப்பலால்-ஓரா
இரம்பையானந்தரங்கனின்பரங்களன்பன்
பிரம்பையானந்தாங்கன்பேர். (௨௰)

பங்கயமுமேரிகளும்பாவையர்கையும்மணியும்
தங்கவனை சூழ்ந்தணிகையே-திங்கணுதற்
செந்திலகத்தாள்புனிதன்செல்வன்கடற்கரைசேர்
செந்திலகத்தாள்புனிதன்சேர்பு (உக)

சொல்வாரார்வள்ளியுடன்றேய்ந்தருண் முத்தையனுக்கு
வல்லாரார்மானேயென்னையனே-வில்வாய்ந்த
தெள்ளிருக்கும்வேளூர்சிறுகாலுண்பானுமிசை
புள்ளிருக்கும்வேளூர்புகுந்து (உஉ)

கோலெடுத்துக்கொத்துரத்துக்கோப்யாண்டிமன்னன்வடி
வேலெடுத்துக்கோத்துரத்தில்விட்டிலனே-சால்படுத்த
பூபாலனானாலும்போமோபுராதன்த்திற்
போபாலனானகுணம் (உ௩)

கட்டளைக்கலிப்பா

விதுலையம்பதியோசையைப்பேரிகவிகையெனும் மதன்வில்லில்வ
ண்டேற்றினன்,மதுலையம்பதிவேகமோடெய்து குவலய மீதுகைவைக்க
வென்னுள்ளநோ,குதுலையம்பதிணலும்புகழ்பெறுங் குமுணன்கன்னன்
கொடைகளைமாற்றிய;புதுலையம்பதிவேங்கடராயன் பாற்புகலிவ்வேளை
யினென்றன்கைப்பூவையே உச

ஆ.-செய்யுள்-எகஉ,

—*—

சுப்பிரமணியப்புலவர்

வாரிட்டுவிம்மிப்புடைத்திறுகியிளகிமணிமார்பிடமெலாங்கவர்ந்து
வட்டமிட்டடியிட்டுநொளுக்குநாண்மேல்வளர்ந்துபூரித்துமுத்து
மாலையிட்டிருமாந்துமட்டவர்த்தனய னைமத்தகத்தோடெதிர்த்து
வாதிட்டுமெல்லிலைகப்பூச்செண்டினைத்தினம் வட்டப்படுத்திவனையைப்
போரிட்டுமைந்தர்கண்மனஞ்சூறையிட்டுமேற்புளகிததுவச்சிராரத்தைப்
புதுச்செப்பினைத்தோழமைக்கொண்டுபொன்னினைப்பொடியாவராவி மீ
திற்,பொட்டிட்டதென்னவேதேமற்படர்ந்துசெம்பொற்சரிகைவேலையிட்
டுப், புனைதருரவிக்கையையிறுக்கிக்கிழித்துப்புறப்பட்டுவாசனைப்பூந்
தாரிட்டுவரவரப்பளபளப்பாகியுயர் தங்ககிணத்தையொத்துச
சந்தனம்புநுகுகஸ்தூரிகர்ப்பூரஞ்சவாதுகுங்குமமணிந்து
சந்த்ரகாவிச்சேலைவல்லவாட்டுக்குட்ட தும்பியண்ணூந்திடையினிற்
றாங்கருதெனக்கனத்தோங்கிமன்மதனுஞ்சாலமிட்டுநிற்கவுந்த ன்

௰௫

சிரிட்டுநின்றுதந்தலை வணங்காமற்றிரண்டவூண் முலைக்குன்றன்
இருமார்பிலணையவேயொருசிமேலேதலைஞ்செய்கின்றதொக்குமென்னுஞ்
சிறுசோமரோசையாள்வந்தாள்பராக்கென்றுசேவித்துநிற்கிருள்பார்
இகழ்வடிகநாதனுணமெச்சுப்ரதானிசிவசுப்பிரமண்ணியராசனே (க)

—*—

## நையாண்டிப்புலவர்

### விருத்தம்

விற்கம்பத்தடியாலுமடியுண்டான்விண்ணவணவேலுகொள்ளும்
நற்கம்பத்தடியாலுந்தூக்கவசையாளுருநாதன்கோயில்
பொற்கம்பத்தடியினின்றுவன்மீகத்தானேயுன்னிப் போற்றினோர்க்குச்
சொர்க்கம்பத்தாடியப்பான்மோசஷம்பத்தடியாகத்தோற்றுந்தானே (உ)

கட்டளைக்கலித்துறை

செங்கைவரிச்சிலைதங்கமதைச்சம்புத்தீவுதன்னில்
எங்குவைத்தாலுமப்பள்ளிகொண்டான்றமிழ்க்கிவனென்றே
திங்களிரவினிஞ்சுற்றிக்காக்கத்திணைசுருட்டுங்
கங்கைக்குமுத்தரித்தேயொளித்தானுமைகாதலனே (ங)

மேலாடையின்றிச்சமைபுகுந்தாலிதமேதினியோர்
நாலாயிரம்படித்தாலுமென்னார்நுவல்வார்கடலோ
ம லானவரணிபொன்னுடைகண்டுமெகளைத்தந்தே
ஆலாலமீந்ததுதோலாடைசுற்றுமரன்றனக்கே (ச)

வள்ளிகொண்டான்மயிலேறிக்கொண்டான்மதிபோலுமலை
வெள்ளிகொண்டான்விடையேறிக்கொண்டான்விண்ணவர்க்கமுதம்
துள்ளிகொண்டான்புள்ளிலேறிக்கொண்டான்சுபசோபனஞ்சேர்
பள்ளிகொண்டான்புகழேறிக்கொண்டானென்றுபார்க்கவென்றே

எல்லீசு

செந்தமிழ்ச்செல்வனுமோராயிரந்தலைச்சேடனும்யார்
சுந்தரத்தோடிசைவல்லோனும்யாவருந்தோத்திரஞ்செய்
கந்தனைச்சொல்லுங்கவிராமச்சந்த்ரனைக்கண்டுவெட்கி
யந்தரவெற்பிழிபாதாளந்தேடியடங்கினரே (ரு)

## இராமசந்த்ரகவிராயர்

வணக்கம்வருஞ்சிலநேரங்குமரகண்ட
வலிப்புவருஞ்சிலநேரம்வலியச்செய்யக்

கணக்குவருஞ்சிலநேரம்வேட்டைநாய்போற்
கடிக்கவருஞ்சிலநேரங்கயவர்க்கெல்லாம்
இணக்கவரும்படித்தமிழைப்பாடிப்பாடி
எத்தனைநாடிரிந்துதிரிந்துழல்வேனையா
குடக்கடலேயருட்கடலேயசுரரானை
குரைகடலைவென்றபரங்குன்றுளானே (௭)

மாசற்றிடுதிருமேனியின்மறுவுற்றதுபோல
மாரப்பயல்கணைதைத்திடவந்தெய்தனையோ
காசத்தனைபுண்ணாகுதுட்டத்தனையளவாய்க்
கையத்தனையானுன்மகன்மெய்யெத்தனைநோமோ
வாசற்படிகடவாதவன்மனைதெப்படியானுள்
மதனன்சிலுகறியாதவன்மயலெப்படியானுள்
ஆசைப்படுவாரோபுருடரின்மேன்மடவார்கள்
அருணசலராயாதமிழறியும்பெருமானே (௮)

புல்லுக்கட்டும்விறகுஞ்சுமந்தபேர் பூர்வகாலத்துப் புண்யவசத்தினால், நெல்லுக்கட்டும்பணக்கட்டுங்கண்டபின் நீலக்கல்லிற்கடுக்கனும் போடுவார், சொல்லுக்கட்டும்புலவரைக்கண்டக்காற்றாதிப்பாய்ந்து கதவையடைத்தெதிர், மல்லுக்கட்டும் மடையனைப்பாடவோமலையச்சாரலில்வாழ் பெரியம்மையே (௯)

வெண்ணெய்க்கட்டியுஞ்சீனியுமூட்டலாம்
விக்கிக்கொள்வதற்கென்செய்யலாமொரு
வெண்ணைக்கட்டிக்கொடுத்திடலாம்பிள்ளை
பெறுவதற்குமுடன்படுவார்களோ
பண்ணைகட்டியமென்மொழியாளுந்தம்
படுக்கைவிட்டில்வந்தாளேயவடனைக்
கண்ணைக்கட்டியணைப்பாமலேன்விட்டீர்
கழனிசூழிம்பழனியில்வேலரே (௰

ஏதிலேவறியவர்க்குமினியகவிப்புலவருக்குமிரங்கியந்தப்
போதிலேதனங்கொடுக்குந்தஞ்சைநகர்க்குருவப்பபூபனெற்குக்
கோதிலேகிடந்துழலும்பலரிடத்திற்சென்றுதமிழ்கூறுவண்ணங்
காதிலேபொட்டிட்டுத்தாடையின்மோதக்கடுக்கன்றனிட்டானே (௰௧)

வம்பிறைக்குங் கடம்பிறைக்கும் பெரும்பிறைக்கு நிகராகவளர்ந்த வொற்றைக்கொம்பிறைக்குந்தாதையராங்கடனைக்காரோணர் கொன்றைநல்லார், அம்பிறைக்கும்விழிப்பாவையுமையர்குழல் கொல்லனுலையனலி

ற்காய்ந்த, செம்பிறைக்கும் வெண்பிறைக்குங் கரும்பிறைக்கு மொருத்த
தனித்தென்செய்வாளே (௰௨)

மூக்கிலிலேயொளித்திருந்தான்முக்கன் சாமி
முதியகடற்போய்ப்படுத்தான்முகுந்த சாமி
தாங்கமலப்பொருட்டிறைந்தான்றலைநாற் சாமி
தடவரையிலுமூன்றுநின்றூன்றகப்பன் சாமி
தாங்கியுண்ணவழிகாத்தான்வயிற்றுச் சாமி
வாணருக்கிங்குதவுவரார்மற்றோர் சாமி
ஓங்கியசீர்மயிலையிற்பொன்னப்ப சாமி
உதவுயவேங்கடசாமிவுசிதவேளே (௰௩)

வஞ்சகத்திலொன்றனைத்துதிக்கைமிகத்திரண்டானைவணங்காருள்ளே, அஞ்சரணமூன்றனைமறைபொழிநால்வாயனையத்தலைகித், துஞ்சவுணர்க்கஞ்சானை சென்னியணி யாறனைத்துகளெழானைச், செஞ்சொன்மறைக்கெட்டானைப்பரங்கிரிவாழ்கற்பகத்தைச்சிந்தைசெய்வாம்

மூன்றுவெண்பா,

சலமேதோசங்கந்தாபூணாந்தாமே
கலைதாநற்புங்கவன்மால்காணப்-புலவுடைய
கங்காகோணகலாமதியக்கோடீர
சங்காசோணசலா (௰௫)

சீரிலங்குமாடகூடவீதிவீறுதில்லையான்
திருவிருக்குமார்பனெங்கடிருமலைக்குமுன்புபோம்
நீரிருந்துமாலைகேளுமவன்மறுத்துரைக்கிலென்
நெஞ்சுசொல்லும்வார்த்தையாகநீங்கள்சொல்லும்வண்டுகாள்
வாரியொன்றுபாயிரண்டுமாலைமூன்றுநாலுவேல்
மதியமைந்துகங்குலாறுமாரனேழுவாடையெட்
டாரமொன்பதல்பன்றித்தடங்கலும்மொறுக்குமால்
அத்தனைக்கெலாமிலக்கெனுவியொன்றுகாணுமே (௰௬)
ஓரானைவனத்தேதிருவொண்ணுவனிமுற்கீழ்
உறையுர்பெருமான்வீதியுலாவும்பவனிக்கே
நேராகநடப்பேன்வளைபறிபோனதுகேட்பேன்
நில்லென்றுதடுத்தால்வகைசொல்லென்றுமறிப்பேன்
பேரானையைவிட்டான்முலையீரானையைவிடுவேன்
பொழியம்புதொடுத்தாலிருவிழியம்புதொடுப்பேன்

தோராவழக்கிட்டால்வகைவாராமழக்கிடுவேன்
தொல்லைக்கணைகொண்டேவகைவெல்லப்பெறுவேனே (௰௭)

அடல்கொண்டெழுசூலப்படையாரூர்பெருமானூர்
ஐயம்புகவொன்றேறையமதகவாசலில்வந்தார்
கடுகும்படிசென்றேபலிகொண்டேயெதிர்நின்றேன்
கைவந்தனமென்றாரிதுகைவந்தனமென்றேன்
மடவன்னமதென்றாரிதுமடவன்னமதென்றேன்
வல்லோதனமென்றாரிதுவல்லோதனமென்றேன்
கொடுவந்தனமென்றாரிதுகொடுவந்தனமென்றேன்
கொள்ளார்பலிசொல்லாரவர்கோட்பாடறியேனே (௰அ)

வீமனுக்குமைந்தனூர் வேதனுக்கும்வேதனுக்குமைந்தன ரீசனுக்கும், காமனுக்குமைந்தனூர்வீமன் தம்பிகந்தனுக்குமாமனூர்காமன்றானே மாமனுக்குமுன்றமையன் றந்தைகாலன்வையகத்தி லிம்முறைமை வழங்கலாலே, ராமனுக்குச்சீதைதங்கையாகவேண்டும் ராவணனுக்குத் தகப்பன் ராமன்றானே (௰௯)

(வீமன்-கருடனுக்கு இறைவனாகிய-திருமால்) (வே-மூங்கில்-மைந்தன்சிவன்) காமன்-கற்பகத்துக்கரசனாகிய-இந்திரன்-வீமன்தம்பி-அருச்சுனன்) கந்தனுக்குமாமன்-காமன்-இந்திரன்-மாமன்-குதிரைக்கிறைவனாகியநகுலன்-தமயன்-தருமன்-தந்தை-இயமன்)இராமன்இரவுக்கரசனாகிய சந்திரன்-இராவணன்-இருள்நிறமுடையமன்மதன்)

வெண்பிள்ளைப்பிறைநோக்குங் கரும்பிள்ளைக்குறிபார்க்கும் வேதாவென்னும், மண்பிள்ளை இறந்தறற்றுங்கிளிப்பிள்ளைமொழிபயிற்று மடவார்க்கெல்லாம், எண்பிள்ளைசிறுபிள்ளைபெணக்கமளோவொருபிள்ளை யெளியேன்பெற்ற, பெண்பிள்ளைபடுந்துயரம் பெரியபிள்ளைக்காரெடுத்து பேசுவாரே (உ௰)

பிறகுதறிக்கக்கறிநறுக்கவெண்சோற்றுப்புக்கடகுவைக்கப்
பிறகுபிளவுகிடைத்ததென்றாளாறுசப்பிளந்துகொள்ளப்
பறகுபறவென்றேசொறியப்பதமாயிருந்தபாக்குவெட்டி
இறகுமுளைத்துப்போவதுண்டோவெடுத்திராயிற்கொடுப்பீரோ (உக)

கட்டளைக்கலித்துறை

இரவலனேயுனக்கில்லாததென்னவிதயமென்ன
பரவுணவேதுசுவையற்றதென்னசொற்பான்மையென்ன

தரவுரைசெய்திடவென்றனதற்கொன்றுஞ்சாற்றிலன்யான்
வரதிருவேங்கடநாதாவென்றேன்பொன்வழுட்கினனே (௨௨

இல்லாதவெதன்ன-திரு-இதயமென்ன.வேம்.உணவேது-கடன்சுவை யற்றதென்ன-நா-சொற்றான்மையென்ன-த-இந்திப்போந்தபொருள் திருவேங்கடநாதவென்பதாம்

விருத்தம்

கல்லாதவொருவனைநான்கற்றாயென்றேன்
  காடெறியுமவனைநாடாள்வாயென்றேன்
பொல்லாதவொருவனைநானல்லாயென்றேன்
  போர்முகத்தையறியானைப்புலியேறென்றேன்
மல்லாருந்புயமென்றேன்சூம்பற்றோளை
  வழங்காதகையனைநான்வள்ளலென்றேன்
இல்லாதுசொன்னேனுக்கில்லையென்றான்
  யானுமென்றன்குற்றத்தாலேகின்றேனே (௨௩

ஆவீனமழைபொழியவில்லம்வீழ
  அகத்தடியாள்மெய்நோவவடிமைசாவ
மாவீரம்போகுதென்றுவிதைகொண்டோட
  வழியிலேகடன்காரர்மறித்துக்கொள்ளச்
சாவோலைகொண்டொருவனெதிரேசெல்லத்
  தள்ளவொண்ணாவிருந்துவரச்சர்ப்பந்தீண்டக்
கோவேந்தருழுதுண்டகடமைகேட்கக்
  குருக்களோதட்சணைக்குக்கொடுவென்றாரே (௨௪)

கல்லைத்தான்மண்ணைத்தான்காய்ச்சித்தான்குடிக்கத்தான்கற்பித்தானா, இல்லைத்தான்பொன்னைத்தானெனக்குத்தான்கொடுத்துத்தானிரட்சித்தானா, அல்லைத்தான்சொல்லித்தானாரைத்தானோவத்தானையோவெங்கும், பல்லைத்தான்றிறக்கத்தான்பதுமத்தான்புவியிற்றான்பண்ணினானே

வஞ்சகர்பாணடந்தலைத்தகாலிற்புண்ணும்
  வாசற்றோறுமுட்டுண்டதலையிற்புண்ணுஞ்
செஞ்சொல்லைநினைந்துருகுநெஞ்சிற்புண்ணுந்
  திருமென்றேசங்காண்யாற்சேர்ந்தேனப்பா
கொஞ்சமல்லபிரம்படியின்புண்ணும்வேடன்
  கொடுங்காலாலுதைத்தபுண்ணுங்கோபமாகப்
பஞ்சவரிலொருவன்வில்லாலடித்தபுண்ணும்
  பார்க்கின்றேகாட்டிநின்றான்பரமன்றானே (௨௫)

கள்ளிக்கேன்முள்வேலிகழுதைக்கேன்கடிவாளஞ் சிறப்பில்லாத உள்ளிக்கேன் பரிமளங்களுவர் நிலத்துக்கேன் விதைகடொடுத்துப்போடும்,கள்ளிக்கேன்கோடாலி துடைப்பத்திற்கேன் சவசஞ்சும்மாபோகும்,பள்ளிக்கேனதிவிரமழவரங்கபூபனெனும்பட்டந்தானே (௨௭)

கயக்காவிநாறுங்குழம்பிற்பிரசண்டா
காரார்கொடைச்செங்கையசரோதன்மைந்தா
இயக்காநின்மார்பிற்செழும்புன்னையந்தார்
இப்போதுநீநல்கிலென்பேதைமார்பில்
சயக்காமவேளம்புதையாதுமுத்தத்
தாமஞ்சுடர்சந்தனம்பூசினாலும்
செயக்காதுவேயோசெவிக்கும்பொறுக்கும்
தீயென்னமீளாதுதிங்கட்கொழுந்தே (௨௮)

சொன்னமன்னமாடைதந்தான் வீதியில்வெற்றிலைமடித்துச் சுருளுந்தந்தான், கன்னவின்மோதிரந்தந்தான் சரப்பணிதந்தானிரட்டைக்கடுக்கன்றந்தான்,செந்நெல்விளையூர்தந்தான்பேர்தந்தான்மல்லையில்வாழ்சிவந்தானுங்கட்,கென்னதந்தானென்றவர்கட்கெத்தனையுந்தாதந்தானியம்பத்தாமே

நடுவெழுத்தலங்காரம்

அத்திரம்வேலாவலயமிராசியொன்றிற்
கமைந்தபெயர்மூன்றினிடையக்கரத்தால்
மெத்தநடுக்குற்றுனைவந்தடைந்தேனிந்த
விதனமகற்றிடுமற்றையெழுத்தோராறில்
பத்துடையானைத்தடிந்துபெண்ணுச்செய்து
பரிவினுகர்வோனிருதாள்பணிந்துபோற்றும்
சித்தசனேதெளியசிங்கன்றலத்திற்றோன்றுஞ்
சீதாராமப்ரபலதியாகவானே

அத்திரம்-பகழி-வேலாவலயம்-கடல்-இராசகன்னி-இவற்றினடுவெழுத்துக்கடன்-மற்றையவெழுத்து-பழி-கல்-கனி-பழியால்- இராவணனைக்கொன்றுகல்லைப்பெண்ணாச்செய்துசவரியின் கனியைத் தின்றவன்-திருமால் (௨௯)

நல்லர்லயமாந்தேவருமாங்கழுதைகசடர்பொதிசுமக்குங்
கடாவோவுழுதுபயிரிடற்காங்கட்டம்பன்றிக்கிறையாகும்
புல்லேறிசர்வாகனமாம்பொதியுஞ்சுமக்கும்பிணமெனிலோ

பூசிமுடித்துமறையோர்க்குப்பொருளையீந்துபுகழெய்தும்
மல்லர்குட்டிச்சுவரெனிலோமாடுமுளைஞ்சுமறைவாகும்
மதியாத்துடைப்பந்தானெனிலோமாடகூடந்தனைவிளக்கும்
அல்லாதுலுத்தன்றனக்கிணையாயாரையுரைப்பேன்புவிமீதில்
அவனைக்குறித்துக்கூறமிடத்தவனுக்கவனேசரிதானே (௯௰)

வீரவெண்டையப்ரதாபர்தியாகராசர்கமலைசூழ்
வீதிகண்டுபவனிகண்டுவிந்தைகண்டுபந்தியாய்த்
தூரநின்றபூவைகாளடுத்துநின்றகிள்ளைகாள்
அன்பமேயலாதுபாவிசுகமறிந்ததில்லையால்
மாரனம்புபட்டகாயமாறுதில்லையிரவெலாம்
மங்கைமார்தொடுத்தசண்டைமாறுதில்லையென்செய்வேன்
ஆரிருந்துமுதவியில்லையென்றனாசையொழியுமோ
அதுவுமில்லைவிதியைநொந்துமர்வதில்லைகாணுமே (௯௧)

சத்தபங்கி

திமிரமருதபுலாதிகளேதருதேடரிதாய்மாறுஞ்
செனனமகாமால்வசமேமதமுஞ்சிறுமையின்மதியாலே
குமரசிகாமணியேகனிவாயருள்கூடெனவேகூறுங்
குருபரகோலாகலனேவிதியொடுகுறுகியேமிடிதீரால்
நமதுவிநாயகதேவசகோதரநாடொறுமேதேறுந்
நவிமகள்சேர்வேடுவனேபுதுமணநறுமலர்புனைமார்பா
அமரர்பிரானருள்குஞ்சரிதோள்புணராடவனேமீறும்
மரகரவேலாதனேமுதுமறையறுமுகமுருகோனே (௯௨)

திமிரமருதபுலாதிகளேதரு-தேடரிதாய்
மாறுஞ்சொன்னமகாமால்வசமே-மதமுறசிறுமையின்மதியாலே
குமரசிகாமணியேகனிவாயருள்-கூடெனவே
கூறுங்குருபரகோலாகலனே-விதியொடுகுறுகியமிடிதீராய்
நமதுவிநாயகதேவசகோதர-நாடொறுமே
தேறுந்நவிமகள்சேர்வேடுவனே-புதுமணநறுமலர்புனைமார்பா
அமரர்பிரானருள்குஞ்சரிதோள்புணர்-ஆடவனே
மீதும்மரகரவேலாயுதனே-முதுமறைஅறுமுகமுருகோனே

நவபங்கி

அரிமருகாகருணாலயனேதிடவாரணனேயோதன்
உரியுடையோர்சூழ்புனிதர்புலவடாயிலமர்பொற்கரனே

கரிமுகனையசகோதரனேபடிகாரணனேநாதவ
கதியுறவேவரனவனேநலமிகுகயிலையனற்குருவே
குரவலர்நீபமணிப்புயனேவடிகூரமுதேயோதுங்
குருமணிசேர்மார்பினனேயுலகருள்குயிலுதவுத்தமனே
மரகதமாமயில்வாகனனேகொடிவாரணனேகோதின்
மதியகமேவாழ்குமாரகுலவியமயிலைமலைக்குகனே (௫௩)

அரிமருகாகருணையனேஇட்டாரணனே
போதன்னரியிமையோர்சூழ்புனிதாபுலவடர் அயிலர்பொற்கரனே
கரிமுகனையசகோதரனேபடிகாரணனே
நாதங்கதியுறவேவரனவனேநலமிகுகயிலையனற்குருவே
குரவலர்நீபமணிப்புயனேவடிகூரமுதை
ஓதுங்குருமணிசேர்மார்பினனேஉலகருள்குயிலுதவுத்தமனே
மரகதமாமயில்வாகனனேகொடிவாரணனே
கோதின்மதியகமேவாழ்குமாரகுலவியமயிலைமலைக்குகனே

### சத்தபங்கின்பிரிவு

### கட்டளைக்கலித்துறை

இயிரமறுகபுல'இகளேதருதேடரிதாய்
குமரசிகாமணியேகனிவாயருள்கூடெனவே
நமதுவிநாயகதேவசகோதரநாடொறுமே
அமரர்பிரானருள்குஞ்சரிதோள்புணராடவனே ௧

### கொச்சகம்;

தேடரிதாயமறுஞ்செனனமகாமால்வசமே
கூடெனவேகூறுங்குருபரகோலாகலனே
நாடொறுமேதேறுங்கவிமகள்சேர்வேடுவனே
ஆடவனேமீறுமரகரவேலாயுதனே ௨

### கலிவிருத்தம்

மாறுஞ்செனனமகாமால்வசமோகூறுங்குருபரகோலாகலனே
தேறுங்கவிமகள்சேர்வேடுவனே,மீறும்மரகரவேலாயுதனே ௩

### சிந்தடிவஞ்சிவிருத்தம்

மதமுறுசிறுமையின்மதியாலே, விதியெடுகுறுகியபிடிநோய்
புதுமணநறுமலரணிமார்பா, முதுமறையறுமுகமுருகேசனே
யசு

குறளடிவஞ்சிவிருத்தம்

சிறுமையின்மதியாலேகுறுகியமிடிதீராய்
நறுமலர்புனைமார்பா,அறுமுகமுருகோனே

வெண்பா

தேடரிதாய்யாறுஞ்செனனமகாமால்வசமே
நாடோறுமேதேறுகவிமகள்சேர்-வேடுவனே
ஆடவனேமீறுமரகரவேலாயுதனே
கூடெனவேகூறுங்குரு

நவபங்கியிற் பிரிவு,

அரிமருகாகருணாலயனே,கரிமுகனேயசகோதரனே
குரவலர்நீபமணிப்புயனே,மரகதமாமயில்வாகனனே
புலவடரயிலமர்பொற்பரனே,நலமிகுகயிலையனற்குருவே
உலகருள்குயிலுதவுத்தமனே,குலவியமயிலைமலைக்குகனே,

கட்டளைக்கலித்துறை

அரிமருகாகருணாலயனேஇகழாரணனே
கரிமுகனேயசகோதரனேபடிகாரணனே
குரவலர்நீபமணிப்புயனேவடிகூரமுதே
மரகதமாமயில்வாகனனேகொடிவாரணனே

கொச்சகம்

ஆரணனேபோதனரியிமையோர்சூழ்புனிதா
காரணனேநாதக்கதியுறவேவானவனே
கூரமுதேயோதுங்குருமணிசேர்மார்பினனே
வாரணனேகோதின்மதியகமேவாழ்குமரா

சந்தவிருத்தம்

போதன்னரியிமையோர்சூழ்புனிதாபுலவடரயிலமர்பொற்பரனே
நாதக்கதியுறவேவானவனேநலமிகுகயிலையனற்குருவே
ஓதுங்குருமணிசேர்மார்பினனேயுலகருள்குயிலுதவுத்தமனே
கோதின்மதியகமேவாழ்குமரகுலவியமயிலைமலைக்குகனே

கலிவிருத்தம்,

போதன்னரியிமையோர்சூழ்புனிதா
நாதக்கதியுறவேவானவலே
ஓதுங்குருமணிசேர்மார்பினனே
கோதின்மதியகமேவாழ்குமரா ௬

குறளடிவஞ்சிவிருத்தம்

ஆயிலயர்பொற்கரனே,கயிலேயனற்குருவே
குயிலுதவுத்தமனே,மயிலேமலேக்குகனே ௭
இடவாரணனே,படிகாரணனே
வடிகூரமுதே,கொடிவாரணனே ௮

வெண்பா

ஆரணனேபோதன்னரியிமையோர்சூழ்புனிதா
கூரமுதேபோதுஙகுருமணிசேர்-மார்பினனே
வாரணனேகோதின்மதியகமேவாழ்குமரா
காரணனேநாதக்கதி ௯
ஆ-செய்யுள்-எஎஉ,

—*—

## மதுரகவிராயர்

வெண்பா

துங்கவரைமார்பாதுரைரங்கபூபதியே
இங்கோர்புதுவையியம்பக்கேள்-பங்கயக்கை
ஆயிழைக்குநான்குநுதலேத்துகுழையாறுமுலே
மாயவிழியேழாமதி ௧
அந்திவெடிமுல்லையரும்பெடுத்துநான்வந்தேன்
விந்தையதரநாயகற்குமெல்லியல-சுந்தரஞ்சேர்
செண்டுகட்டவேண்டுந்திருவிளக்கிலேதிரியைக்
கொண்டுவந்துபோட்டுக்கொளுத்து ௨
சித்திரமாமண்டபங்கடென்றல்வருசாளரங்கள்
பத்தியுலாவும்பளிக்கறைகள்-இத்தனைவிட்
டிக்குச்சிலேபானிருப்பிடமென்றூர்சொன்று
ரிக்குச்சிலேபானுக்கின்று ௩

### விருத்தம்

மதுமேவுகுவளையணிபுயனென்றேனே
    மருவனஞ்சூழ்கலைசைநகர்மன்னென்றேனே
மூதுக்கிதெய்வசிகாமணிமாலுக்கு
    மூத்தவொருமகனைநான்மொழிந்திட்டேனே
பதுமாசனத்திமகனென்மேற்சண்டை
    பண்ணுகின்றானவனாற்படுந்துன்பத்தால்
இதுவேதாசலமென்றேனிதறவென்னன்னை
    ஏதேதோவைதுபழியிடுகின்றாளே ௰௯

பூங்கமலன்கலைசைவேதாசலன்போலுருவமைக்கும் பொற்பிலாலென், றுங்கயலார்சொலக்கேட்டுவாணியரிபாலுமைக்கவலைடைந்தாளன்றேன்றாங்குவனம்போயிருந்தானரனிடத்திற்சொலப்பித்தாய்ச்சுழலலுற்றான் ஏங்கியந்தத்திறங்கற்பாணிவனுவில் வீற்றிருந்தாளெழிறதுணமானே

ஆக-செய்யுள்-எஅகூ



## பொது

## பலவித்துவான்கள்பாடல்

### கட்டளைக்கலித்துறை

மாப்பிட்டெனுஞ்சிறுநூப்பிட்டுக்காகமண்ணைச்சுமந்தே
ஆப்பிட்டுக்கொண்டடிபட்டசொக்கேசருக்காசைப்பட்டுக்
சேப்பிட்டுமையிட்டுப்பூமாலைகந்தந்திமிர்ந்துமஞ்சட்
சாப்பிட்டுவாழ்க்கைப்பட்டாள்கூடல்வாழுங்கயற்கண்ணியே ௧

காமாகயற்கண்ணிகோபம்பொறுளென்றன்கண்பணிநீர்
சீமான்கரத்திற்றுடைக்கரிதேசெகமேழுமெச்சும்
கோமான்கரத்திற்குனிசிலைராயன்குகன்சிலம்பில்
காமாவின்காலல்லவேமன்னவாவுன்மலர்க்கரமே ௨

கைத்தலந்தன்னிற்பசும்பொன்வளையல்கலகலெனச்
சங்கமொலித்திட நூபுரம்பாதச்சதங்கைகொஞ்சத்
தத்திமியென்றுநடஞ்செய்சம்பீசர்தஞ்சந்நிதிப்பெண்
செத்த குரங்கைத்தலைமேற்சுமந்துதிரிந்தனளே ௩

பரிக்கொம்புபோலப்பகவான்சரிதைபகர்ந்திடினும்
உரிக்கம்பதாயினுமீயார்கடனுடனோடிச்சென்று
கரிக்கொம்புபோன்முலைமின்னாருக்கீவரக்கன்னியர்கை
நரிகொம்புதானுமுண்டோவேங்கடாசலநாயனே ௪

கேளாந்தநாளையின்னைந்தாநின்னைபணைக்கிட்டிமத
வேளைவந்துபூசலிடமதிகாயவெருண்டெனது
தாள்வந்துபற்றிமுன்வாய்புதைத்தேனின்றுதாழ்மைசொன்ன
நாளந்தநாளல்லவேயிந்தநாளந்தநாயகற்கே ௫

கற்றனவொக்கும்புதியனகேட்பனகண்டபன்னாள்
உற்றனவொக்குமொருபகற்காண்பனவொன்னலரைச்
செற்றனவொக்குஞ்சிறுநகைசெய்வனதீயர்செய்யப்
பெற்றனபெற்றியெண்ணான்மறப்பாரெம்பெருங்குன்றனே ௬

பக்குவமாகக்கவிநூறுசெய்துபரிசுபெற
முக்கரணம்மெதிர்பல்காலும்போட்டுமுயன்றிடினும்
அக்கடபே[.]வெனும்லோபவர்ப்பாடியலுத்துவந்த
குக்கனையாண்டருள்வில்வவனத்துக்குயிலம்மையே ௭

பொல்லாமதப்பயலெங்கோசமுஞ்செய்யும்பொருமைனைக்
கொல்லா[.]மற்கொல்லுமதியுங்கடலுக்குயிலுமிவை
எல்லாந்தொ[.]லைத்தென்றெண்ணினன்பாவியிப்போதுன்மனம்
கல்லாயிருக்குமென்றெவ்வளவேனுமுன்கண்டிலனே ௮

காலையுபாதிமலஞ்சலமாமன்றிக்கட்டுச்சியிற்
சாலவுபாதிபசிதாகமாகுமுற்சஞ்சிதமாம்
மாலையுபாதிதுயில்காமமாமிவைமாற்றிவிட்டே
ஆலமுநந்தருளம்பலவாவென்னையாண்டருளே ௯

நாலடிவள்ளுவராமேயிப்பாலைநடந்தபெருங்
காலடிமேலடிமானடியேகட்டுரைவிற்பட்டும்
பாலடிசில்வெண்ணெயுண்டோ[.]ரங்கன்பணிவளையில்
வேலடிமுள்ளுக்குபாயமிட்டேகும்விழைவுநன்றே ௰

புலியைக்கொடுத்துப்பசுவாங்கியோர்புலிப்பூங்குழலாள்
புலியைப்பசுதின்னவிட்டுப்புலியைத்திருதகற்றிப்
புலியையடைத்துப்பவகாரஞ்செய்துபொருந்துமுகப்
புலியைக்களிப்புடன்சாறுவைத்தாடன்புருடனுக்கே ௰௧

(புலி-வேங்கை-பொன்)புலி-பயிர்ச்சாந்து)(புலி-புல்)(புலி-வரிசேல்
(முகப்புலி-முகத்தாமரை) (சாறு-திருவிழா)

வேளாமழகன்றுணைசீதக்காதியென்வீட்டிலொரு
நாளாகிலும்வரக்காண்கிலனேயெந்நாளுமென்
தோளாலணையுஞ்சுகவாலிபத்தைத்துணிக்கவொரு
மாளாப்பிறந்தனையேமைந்தனேயென்னவாயுனக்கே ௰௨

கடந்தானொருத்தன்னீமாராசகேசரிநாட்டிற்கொங்கைக்
குடந்தானசையவொயிலாயதுகண்டுகொற்றவருந்
தொடர்ந்தார்சந்யாசிகள்யோகம்விட்டார்சுத்தசைவரெல்லாம்
மடந்தானடைத்துச்சிவபூசையுங்கட்டிவைத்தனரே ௰௩

நாலாகலைதெரியேகம்பவாணர்நன்னாட்டில்வளர்
சேலாகக்கண்கள்படைத்தபெண்ணேநின்றிகழும்வயி
றாலாகவுமல்குற்பாம்பாகவுமவ்வணையின்மிசை
மாலாகயான்பள்ளிகொள்ளவந்தேனுன்றன்மாளிகைக்கே ௰௪

அரவிந்தனண்பன்சுதன்றம்பிமைத்துனனண்ணல்கையில்
வரமுந்நீயாயதம்பூண்டவன்காணுமற்றங்கவனே
பரமன்றிகிரியையேந்தியமைந்தன்பகைவன்வெற்பை
உரமென்றெடுத்தவன்மாற்றான்றன்சேவகனொண்டொடியே ௰௫

சங்கரன்றேவிதமயன்மனைவிதனக்குமுன்னும்
மங்கையரோடியவாகனங்காணுமற்றங்கவளோ
கொங்கைகளீரைந்துடையவளாயிக்குவலயத்தில்
எங்குந்திரியும்வயிரவரூர்தியென்றேகினையே ௰௬

மாத்தானைப்பித்தனைமாடேறுவானைமதகரித்தோல்
போர்த்தானைவேதப்பொடிபூசவானையிப்பூதலத்தென்
ஆத்தாளுடனெதிர்த்தம்பலத்தேயென்றுமாடிநிற்குங்
கூத்தாடிப்பையலுக்கோமகளேமயல்கொண்டனையே ௰௭

கானவர்தான்றினைகொய்தனரோகண்டகண்ணலவோ
தேனமர்வண்டினங்காள்கிள்ளைகாள்செழுங்கானைவிட்டுப்
போனவன்றானல்லவோநெடுங்கானிப்புள்ளல்லவோ
நானவன்றானல்லவோசொல்லவேண்டுநடுக்கண்டதே ௰௮

தாராளனெங்கடிருநின்றைச்சேடன்சயிலத்தின்பால்
நீரார்முகிற்குழற்பெண்பேதையைவிட்டுநீபிரிந்தால்

சீராமனில்லையழுதில்லையஞ்சனைச்செல்வனில்லை
காராபொழில்வளர்காழிப்பிரானில்லைகாப்பதற்கே ௰௯

அம்பளவெவ்வளவவ்வளவேவிழியார்ந்தகொவ்வைச்
செம்பளமெவ்வளவவ்வளவேயிதழ்சீர்கொள்ளெருஞ்சிக்
கொம்பளவெவ்வளவவ்வளவேயிடைகூறெலுமிச்
சம்பளமெவ்வளவவ்வளவேதனந்தையலுக்கே ௨௰

நச்சணிகண்டத்தாரூர்த்தியாகர்நளினவெற்பில்
கச்சணியும்முலைமாதேயிதுவென்னகாரணமோ
அச்சுதனுமந்திரண்டாமெழுத்திலரையெழுத்தில்
வச்சிரபாணிமனையாள்பகைவந்துவாய்த்ததுவே ௨௧

அச்சுதன்-அரி-இரண்டாமெழுத்து-ரி-அதில்-அரையெழுத்துபாதி
ரி-வச்சிரபாணி-மனைவி-சசி-சந்திரன்(பகை-பாம்பு)

போமேபொழுதுவருமேமதியம்புரண்டெனக்கம்
வேமேமதனன்சரந்தைக்குமேதைத்தபுண்வழியிற்
பூமேவுதென்றல்புகுமேயென்பெண்புத்திபோய்விடுமே
கோமேதகப்புயலேமழவாபள்ளிகொண்டவனே ௨௨

பாலினுமின்சொற்குயிலினுமென்மொழிப்பாவைநல்லாள்
மேலினுங்காமன்சரந்தைக்குமேவடவேங்கடம்விட்
டாலினுமவேலைபடுவினும்பாம்பினுமாத்தூர்த்துங்
கோலினுங்கண்வளர்வாய்மழவாபள்ளிகொண்டவனே ௨௩

மெய்யினுநல்லவரினம்பொருர்மயிர்வீழ்தொடக்கம்
செய்யினுமானக்கவரியுய்யாசிற்றினக்கயவர்
வையினும்வாழ்வர்தகளையக்காதுமயிருமொக்கக்
கொய்யினும்பின்செலுமேமழவாபள்ளிகொண்டவனே ௨௪

மாலாக்கியென்னைப்பெருவயதாக்கியென்மார்பின்முலை
பாலாக்கியங்கம்பசுரம்பாக்கியப்பாவையுமை
மேலாக்கிசசிக்குவிளக்கெண்ணெயாகியென்பேணிவெக்கும்
தோலாக்கிவேழமுகனைபிள்ளையாய்வந்துதோன்றினையே ௨௫

சதிரசயிருந்தர்திமாமிவன்மதன்சற்பனைசெய்
தெதிராளியானைக்கணைதூவவானததிருந்துசனல்
மதியாரிவீசவிருவைமறந்துமதிமயங்கிப்
பதினுயிரங்கொட்டைப்பாக்காயிருந்தனள்பைங்கொடியே ௨௬

பதினுயிரங்கொட்டைப்பாக்கு-அம்மணம்,

அன்பட்டதிக்கெங்கும்போற்றுந்தென்கோட்டுக்கதிபதியாய்
பொன்பட்டஞ்சூடுமரகுநாதபூபதிப்பூதலத்தே
நின்பட்டமேபட்டநீயேதுரைமற்றிந்நிலத்தோர்
தன்பட்டமென்பட்டந்தோலாலடிபடுந்தம்பட்டமே (௨௭)

சோமன்புதல்வன்செழுங்குன்றவேலன்செழுங்கிரியில்
காமன்பகைவன்கரிபூந்துமாகினங்கைவல்லவா
பூமன்கணையுமதியுமிவ்வாடையும்பூசலிட
மாமன்றமையன்றகப்பனெனத்தேவஞ்சிவாடுவளே (௨௮)

(சோமன்-இடபவாகனன்,)காமன்கரி-இந்திரனூர்தியாகிய-மேகம் (மாமன்-நகுலன்-அவன்-தமையன்-தருமன்,)

சூலேறிச்சங்கமடைவார்குடையுத்துறைக்கொதுங்கி
வேலேறுங்கண்ணியர்கைக்குடநீர்புக்குமீண்டுமுழுச்
சாலேறிமுத்தந்தனையீனுந்தண்வயலூரனைப்பல்
மாலேறுவான்பரிமாவேழுனடிமாயயிலே (௨௯)

யாட்டுக்குப்பாத்திரநல்லோரைப்பாடிப்பதம்பெறலாம்
மோட்டிக்குலாமரைப்பாடிலென்றுமுழத்துண்டமுண்டோ
வீட்டுக்குச்சோற்றுக்குண்டோவெள்ளைவாய்க்கொருவெற்றிலையோ
ஏட்டுக்குச்சேதங்கண்டாய்வெள்ளைநாவலிருப்பவனே (௩௰)

கெலிக்குஞ்சிங்கத்துக்கும்யானைக்கும்வெற்றிக்கெருடனுக்கும்
வலிக்குஞ்சிங்கியரவுக்குநண்டுக்குமவன்கவிக்கும்
புலிக்குஞ்செம்மானுக்குஞானிக்குமூடர்க்கும்பூனைக்கும்வீட்
டெலிக்குஞ்சங்காத்தமுண்டோவெள்ளைநாவலிருப்பவனே (௩௧)

சலங்காதவீரியராகிலும்போகின்றகாலம்வந்தால்
கலங்காமலேவெல்லமாட்டுவரோவிந்தநானிலத்தில்
சலங்காணுங்கொட்டமதிதேழ்தலைபத்துதானிருந்தும்
இலங்காபுரிநின்றதோவெள்ளைநாவலிருப்பவனே (௩௨)

எரிக்குமதிச்சடையண்ணமலைபொழிற்கிரியில்
பரிக்கின்றபூவைமிதிக்கப்போனாளந்தப்பாதத்தினால்
பொரிக்கண்பிசாசுகணெற்கலைத்தூவிப்பொரிபொரித்துக்
கொரிக்கின்றபாலையிலெப்படிபோயினள்கோமளமே (௩௩)

திரைகடலோடித்திரவியந்தேடென்றுசெப்புமௌவை
உரைபழுதன்றெனச்சோர்ந்தாள்கழுக்குன்றத்தோர்மடமான்
அரைபணிநீர்ச்சந்தனங்கொண்டுபாங்கியராற்றியபின்
இரைகடல்போய்வரவெத்தனைநாளென்றெழுத்தனளே (௩௪)

யள

மேகம்பிறைசிலைவேல்குமிழ்வள்ளைவெண்முத்தந்தொண்டை
ஆகம்பசுங்கணைதேனுமிழ்காந்தள்பொற்பாலிலைநூல்
நாகங்கதலியலவன்வரானன்னளினமுண்டி
மாகம்பொழிற்றிருத்தில்லையிலேயொருவல்லியிலே (௩௫)

இளந்தனத்தையேநல்லமுகத்தையேசித்தென்கரத்தில்
வளர்ந்தத்தையாதுமுணர்ந்திலையேபயலாகிமனந்
தளர்ந்தத்தையேயென்றிருவரங்கேசர்க்குச்சாத்தச்சொன்னால்
அளந்தத்தையேயளந்தாய்பின்னையாதுமளந்திலையே (௩௬)

ஆபத்துறையிற்பிறந்துவந்தந்தணர்பால்குடித்து
மாபக்கண்வேசையுடத்தேவனர்துவண்டொருநாள்
ஏயப்புலவரிடத்தெட்டுகொள்செட்டியேயென்றபின்
போயக்கசாலைபுகுந்தனள்காணந்தப்பொய்மகளே (௩௭)

பூச்சிலைகன்னற்மைச்சேஷாசலேந்த்ரபொருப்பிடத்தே
காச்சியபாலைக்குடியேவென்றனந்தககாரிகையும்
பேச்சுளைத்துக்கள்ளிபின்சைகைராமற்குமுன்சொன்னதாய்
வாய்ச்சுதென்றேநடந்தாள்பாலையானவனந்தனிலே (௩௮)

தோப்பிடுவாரில்லைதென்றல்வராமற்சுமெதிக்குக்
காப்பிடுவாரில்லைகாமன்வராமற்கருங்குயில்வாய்க்
காப்பிடுவாரில்லைதென்னரங்கேசர்க்கபயமென்று
கூப்பிடுவாரில்லையேவண்டுகொள்ளென்குறைசொல்லியே (௩௯)

அணியார்கடுக்கைகருந்தும்பைக்கங்கையறுகுடனே
இணியார்சடாடவிக்கச்சாலநாதர்பணிவளையில்
தணிபாதமாமதப்பேய்பிடித்தாடுமித்தையலுக்கு
மணியாட்டினால்விடுமோசொல்லுவீரிந்தமாநிலத்தே (௪௰)

பாதாதிகேசமுதலாயிவளைப்படைத்தமலர்
வேதாமருக்குழல்வெளிவைப்பேனோவிரிபூதலத்துள்
ஆதாரமின்றியிரண்டினைநீரந்தாங்கிக்குமோ
ஏதாகிலுஞ்சற்றங்கில்லாதிராதிடையேந்திழைக்கே (௪௧)

குணமிருந்தாலுங்குயிலிருந்தாலுங்கொழுந்தமிழின்
மணமிருந்தாலுமதியிருந்தாலும்வழுத்திடுவங்
கணமிருந்தாலுமோர்காகம்பெறுதுசிங்காரவரைப்
பணமிருந்தாலவர்க்கெல்லாருமஞ்சலிபண்ணுவரே (௪௨)

உரகத்திலேயிடப்பான்சக்ரபாணியுயர்ந்தகும்ப
கரகத்திலேயிடப்பான்குறுமாமுனிகன்னியர்கள்
விரகத்திலேயிடப்பான்காமராஜன்மிகுந்தவெழு
கரகத்திலேயிடப்பான்கொழுமூர்முத்துநாகப்பனே (௪௩)

செய்க்கதியுண்டசிவன்வேலன்பற்றவன்சிசியவன்
வாய்க்கதியாதவிடக்கானதுமில்லைமாக்கதியுங்
காய்க்கதியென்பதும்வேண்டான்சப்பாரங்கனக்கவிட்ட
நாய்க்கதியும்புசிப்பான்கொழுமூர்முத்துநாகப்பனே (௪௪)

தருக்கரானகரன்செல்வநாளுந்தழைக்கும்புல்லூர்ப்
பெருவயனூர்தனிலெலனைப்போலோர்பிடாரன்வந்தே
ஒருகுடங்கொண்டொருபாம்பாட்டினனிவ்வுலகிலுள்ளே
இருகுடங்கொண்டைம்பாம்பாட்டுவதென்னவேந்திழையே (௪௫)

தேனாட்டுமுல்லைத்தொடைரகுநாதன்செருத்தபுகழ்
நூனாட்டுமன்னர்தொழுமணிரார்மணிப்பூணணிந்த
வானாட்டம்பையர்மண்ணாட்டரசர்மனத்திலுக்குங்
கானாட்டுவரின்னகாட்டுவேலினைக்கண்டுகொண்டே (௪௬)

ஞாயிறுபேய்விழத்திங்கள்வந்தெய்திடநண்ணியசெல்
வாயனல்நாவப்புகனம்புகாயநல்வியாழம்வர
மேயிருவெள்ளிக்கலைசேரநாஅன்னைமேவுதற்குத்
தாய்சனியாகினளேரகுநாததளசிங்கமே (௪௭)

ஆடியநாகஞ்சரோருகம்தானுநல்லம்புலியும்
சூடியநாதர்நயனமுமாலம்புஞ்சொற்பனுவல்
பாடியபாலனுமாய்வந்ததால்வெண்பணிலவயல்
கோடியகோன்இவன்தான்திருமார்பிற்குளிர்தொங்கலே (௪௮)

சிவந்தான்மாலை-மதனையும்-கடலையும்-அடக்கி-இளைப் பிறைப்பித்தமையின் பரமசிவன்கண்ணையும் திருமாலமையும் சம்பந்த சுவாமிகளையும் ஒத்தது

மருகார்முளரியுமுள்ளியுமுண்டகமுரியரம்
பொரிகாரிரும்புங்கனகமும்பொன்பொறித்தாரகையும்
குருகாருக்கொண்டையிபீனைநல்போலென்குரிசிலுக்கு
வருகாதலேதந்தமங்கையுநானுமடந்தையரோ (௪௯)

நகைக்கோட்டிளங்கன்றுநன்லனாரமுகயந்தளிப்பான்
விகையூட்டுதார்ப்புயன்தெற்பிழமன்னனென்றேவிரும்பிக்

ROJA MUTHIAH

கலைபோட்டமீதின்மாக்கலம்போட்டுன்னைக்காணவந்தால்
திரைபோட்டுவீற்றிருந்தாய்சிங்கபூபசிரோமணியே ௫௰

வண்டோவிழிநுதல்வான்பிறையோவல்குன்மாள்குளம்போ
வென்டோமுலைசித்திலமோநகையிடைசேர்துடிகற்
கண்டோமொழிகுழல்கொண்டலோமுகங்கமலம்பவளத்
துண்டோவிதழ்தன்னித்தண்டேசதுறையிந்தத்தோகையற்கே ௫௧

வண்டொதுவுண்டிசைபாடுஞ்செங்கிலின்மாரன்வரக்
கண்டிருந்தும்வடிவேலிரண்டுங்கருப்புவில்லும்
குன்றும்மருந்தும்பொற்றேருந்தாமற்குழலைத்தந்தால்
நன்றிகொண்டெப்படிவென்றிடலாமடிதார்குழலே ௫௨

ஆலங்குடியர்சங்கஞ்செறிபத்தரஞ்சக்கரப்பொன்
மேலம்பரந்தினர்நாகமெடுத்தவர்மேவிடையர்
சூலக்கண்மெய்யினர்பார்பதிகோன்மதிதோய்கவினர்
பாலன்னைக்கோர்படைக்கூர்மைக்கண்ணுயிந்தப்பைந்தொடிக்கே ௫௩

ஆசைவிசழ்ந்திடலாமாவினியுனையன்றிவினை
போமாவுனைவிட்டுப்போமாவெனக்கிந்தப்புன்மைவர
லாமோபராமுகமாமோபுபத்தினணிகடம்பத்
தாமாகுகனெலுமாமாவயிற்கரச்சண்முகனே ௫௪

ஆக-செய்யுள்-௮௪௰

---*---

வெண்பா.

சென்னிமலைவேலவர்க்குச்சேர்ந்தகொம்பிரண்டுண்டு
கன்னிகுறவள்ளிக்குக்காலில்லை-முன்னமே
ஆட்டுக்குக்கொம்பில்லைபானைக்குக்காலில்லை
பாட்டுக்குளாராய்ந்துபார் ௧

தார்க்கொன்றைதாவென்றேன்றுவேருலொன்றென்றான்
ஊர்க்கஞ்சிரான்மூன்றிலொன்றென்றேன்-ஆர்க்குந்
பொதுவென்றான்பூவென்றேன்போயினன்தோழீ
இதுவேனமக்கணியல்பு ௨

பறைவகாய்நாகம்பகைவிலங்குபங்கம்
செறியுபிருணாஞ்சிதடன்-குறகிழவன்
என்றுரைக்கவிரைந்துமேற்றண்டத்திற்பண்பாய்
ஒன்றுமெனவுரைப்பரால் ௩

பரியூர்வார்பாலருந்தல்பண்பாமுடற்குக்
கரியூர்வார்பொன்னின்பங்காணல்-விரியும்

சிவிகையூர்வார்க்குமைத்தவின்பஞ்சேசெல்வர்
பசிவியவுண்டல்பயன் ௫

தக்கசகுனஞ்சபதஞ்சாமுத்திரியஞ்சொன்
மிக்கவசரீரிகனுவெண்ணைந்தும்-இக்கிலியில்
கூடினுங்கைகூடிவருங்கூடாதொழுகிதொருக்கால்
வீடினும்வீடினிடும் ௬

நக்கனார்சோணகிரிநாதனார்வேள்வியிலே
தக்கனைத்தகர்த்ததக்கனார்-பொக்கைவாய்
ஆக்கினார்சூரியனையம்புவியைத்தேய்த்தரியைத்
தாக்கினாரோடோடத்தான் ௭

ஓடினனென்பதுணர்ந்துமுனைக்குச்சரியா
நாடினார்க்கென்னரகமே-நீடியே
ஆகவிடங்கோன்றியபோதம்பலவாறுசெடிய
மாதவிடஞ்சஞ்சரியாதே ௮

அசனமிதுப்பகத்தாதன்னையேநம்பார்வி
வசனமிதுதவறுவாய்மை-இசைநாகைச்
சின்னப்பால்வெண்மதியஞ்சேரிமையத்தேபிறந்த
அன்னப்பாலிந்துவந்தாலாம்(அன்னப்பால்-பரமசிவன்) ௯

தலையிலிரந்துண்பான்றன்னுடலிற்பாதி
மலையின்மடமகளிக்கீவான்-உலையில்
இருப்புவனமேனியனேயென்றுலோவாவாம்
திருப்புவனத்தீசன்றிறம் ௰

ஆச்சரியந்தென்னமரமத்தனையுங்குத்துமுலை
காய்ச்சிருக்குந்தென்குடந்தைகாவலா-மாச்சான்
வரக்குப்பையர்நீமருவாநாளெல்லாம்
சரக்குப்பையாமேதனம் ௰

கல்லுமுருத்நாதுகவின்முட்டையாது
எல்லைமார்த்தாண்டன்சூடேறாது-தொல்லைமரு
மாலையிருளில்வழிநடக்கக்கூடாது
காலிற்செருப்பிருந்தக்கால் ௰௧

தந்தைபோய்த்தாய்போய்த்தமர்போயென்சுத்தமும்போய்
வெந்தைபுரியாகிவிட்டேனே-முந்தவே
ஆழாழிசுஞ்சுண்டவாபுறசகாமனெனும்
பாழாவரன்கண்ணேறுபட்டு ௨௰

கைக்குடமும்வெண்டுகனகும்பக்குடமும்
முக்குடமுங்கொண்டான்முறியாதே-மைக்குழலீர்
வேய்ககாற்றினால்விளங்கும்வீரநந்திமாநகரில்
ஈக்காற்றுக்காற்றுவிடை ௰௩

ஐயம்புகழுமயிராயிரமெடுத்துக்
கையிலாருமாமலரைக்காணமல்-வையகத்தில்
செங்கண்மாலீசன்றிருவடிக்கெண்ணாயிரமாத்
தங்கண்மலர்சாற்றினன்றான் ௰௪

பாம்புசேர்தோளிணையாள்பாளயத்துமாமாரி
சாம்பசிவன்றன்னடியைச்சாராரை-வேம்பின்
இலையையுடுத்திபவரீனமாணம்போக்குத்
தலையில்விளக்கேற்றிவைப்பாடான் ௰௫

அட்டமியிலோதினலாசானுக்காகாது
சிட்டனுக்குப்புன்னுகுதீதாகும்-கெட்டவுவர்
வித்தைக்குநாசமாம்வெய்யவிரதமையில்
பித்தரும்பேசார்பிழை ௰௬

ஆயிரம்பாக்கன்னமுலைபன்னாண்டக்கன்னிபதி
னாயிரம்பாக்கானாளென்னாசையினால்-நீயிரங்கி
வந்தாளவேண்மெலைப்பழனிவேலவனே
சந்தாளவேறில்லைதான் ௰௭

(ஆயிரம்பாக்கு-கலசம்) (பதினாயிரம்பாக்கு-அம்மணம்)

பிறப்பித்தோன்வித்தைதனைப்பேணிக்கொடுத்தோன்
சிறப்பினுபதேசஞ்செய்தோன்-அறப்பெரிய
பஞ்சத்திலன்னம்பகர்ந்தோன்பயந்தீர்த்தோன்
எஞ்சாப்பிரதாக்களெனவெண் ௰௮

காணக்கடன்கல்லைக்கார்வண்ணன்றானுமால்
நாணக்குழன்மடவீர்நானுமால்-ஆனக்கால்
தன்கையிற்சங்காழிகாமிநக்கப்போவதேன்
என்கையிற்சங்காழியின்று ௰௯

கட்டியடிப்போர்க்குத்தண்டீதிலேற்றுவர்க்கும்
எட்டியடிப்போர்க்கு மீவரே-திட்டமுடன்
மாடுவோர்க்கியாரேபல்லுதிரத்தாடையினிற்
யோடுவோர்க்கீவார்பொருள் ௨௰

செய்யாள்கணவாசெகராஜசேகரா
ஐயாவடகன்னைக்காரியா-துய்யா

சுட்ஞ்சுட்டுப்பின்போனகோபாலமுத்து
வடஞ்சுட்டுக்கண்டுயிலாண் மான் ௨௧

உன்றன்மகளையொறுப்பதற்குக்காரணமேன்
என்றன்மகடனியல்புகேள்-குன்றச்
சிராப்பளியனே நீவருஞ்சேவின்மணியோசை
சிராப்பளியுங்கொள்ளாளியள் ௨௨

நீருறுஞ்செஞ்சடைமேனீருரும்பாம்பணிந்து
நீருரிலைவர்தநீதியோ-நேரே
யடவரவஞ்சாடப்பலியிடெனவந்தால்
இடவரவஞ்சாளோவிவள் ௨௩

வாலைப்பொருந்துதலால்வல்லாரவம்பற்றுதலால்
மாலையடுத்தகெடுவோனுறவால்-சேலைதிசம்
உம்பர்பூசித்திருளைமொற்றியூரன்வளையில்
அம்புலியுகன்கருடனும் ௨௪

அம்மையிலேயேறியடியேனிடர்தீர
இம்மையிலேவந்தென்னையிடேற்றி-மும்மையிலே
எந்தப்பாவஞ்செய்தேனந்தப்பாவந்தீரக்
கந்தப்பாவக்திப்போகா ௨௫

எழுதரிதமுன்னமெழுதியபின்னத்தைப்
பழுதறவாசிப்பறிதுபண்பா-முழுதுமதைக்
கற்பரிதுநற்பயனைக்காண்பரிதுகண்டால்
நிற்பரிதுதானங்கிலே ௨௬

எரேறுநீரேறுமெண்ணிலுயிர்க்குயிராம்
பாரேறுங்காஞ்சற்படியளக்கும்-வீம்றறும்
அன்னங்காணிசனரியயனுந்தாமன்று
துன்னுபுகழ்மாரியப்பாசொல் ௨௭

கோடுதிக்குங்கும்பமுலைக்கோதையரைக்கூடவென்றால்
மாடுதின்னியென்னைமறுத்தானே-மாடுதின்னி
தன்பொழுதும்போச்சுதேதன்னந்தனித்திருந்த
என்பொழுதும்போச்சுதேசென் ௨௮

(மாடுதின்னி-வைக்கோலாற்செய்தமருள்)

செஞ்சடைந்தவேட்கையெல்லாநீக்கியிருவிழியும்

பஞ்சடைந்துள்ளாவிபடுமுன்னே
வெள்ளாறுவெண்ணாறும்வேள்விப்புகையாறு
கள்ளாறுவென்னுகவில் ௨௯

மூவாகவிமுன்னூறுமுன்சோழனேர்நூறு
நாவலராமாணிக்கர்தலநாற்பத்தெட்-டோவறுசீர்
நூதனசிவாலயங்களூற்றறுபதுங்கூட
ஓதவருமாயிரத்தெட்டோர் ௩௰

நாலெழுத்துப்பூநெடுவேநாயிருக்கும்
காலுத்தலையுங்கடைச்சாதி-மேலாக
ஒட்டுமுதலெழுத்துமோதுமூன்றும்மெழுத்தும்
விட்டார்பரமனுக்குவீடு(புகையிலை-புலை-கையிலை) ௩௧

முனியதட்டுமூட்டேக்குமுன்னீரளிக்கும்
கனியுதிர்க்குங்கவ்வுநாய்காக்கும்-தனிவழிக்குப்
பத்திரமதாக்கும்பயந்தீர்க்கும்பாம்படிக்கும்
கைத்தலத்திற்றண்டிருந்தக்கால் ௩௨

பகலோன்றெறுங்கிரணம்பாய்மறைவையெச்சம்
மிகமேலுறுதகற்றும்விண்ணின்-முகிலதனுல்
பெய்யுமழையைத்தடுக்கும்பேரழகுமாமொருவர்
கையிற்குடையிருந்தக்கால் ௩௩

வந்தவளைக்கையாதுவாய்முத்தந்தருள்வாய்
தொந்தவளைக்கையாதுவாரகையா-சந்துவளை
கோடையிடத்தானேகுயிலோசைக்கஞ்சியுளத்
தாசையிடத்தானேயறிந்து ௩௪

அறிந்துவிதப்பாரையருள்கோசைய்யர்ன்மேல்
செறிந்துதவிப்பாரைத்திருத்தும்-திறந்தழைந்த
வைகுந்தனூர்வாய்மடமனனேகொவ்வைநிகர்
வைகுந்தனூர்வாய்மடுத்து ௩௫

மடுக்குஞ்சரமழைக்கும்வான்கோசைமாலே
விடுக்குஞ்சரமழைக்குமேலாய்-முடுக்கும்
அகங்கனையஞ்சங்கமடுத்தேனையாள்வாய்
அகங்கனையஞ்சங்கவலர் ௩௬

அலரோதிமத்தானறைகோசைமாலே
அலரோதிமத்தாலடிக்கும்-அலரோதி

நத்தனகத்தாளுறவேநண்ணிநின்றேயானடைந்தேன்
உந்தனகத்தாளுறவேயோர்ந்து (௯௭)

ஓர்ந்தண்டனாயாளுமுத்தமநற்கோசையனே
ஈர்ந்தண்டனையாளுமிந்திரையும்-சேர்ந்திலகு
தூயத்திருக்கருப்பா.தோற்றியடியேனுடைய
மாயத்திருக்கருப்பாய்வந்து (௯௮)

ஆகும்போதாகுமனைத்துமதிவொழிந்து
போகும்போதெல்லாமும்போகுமே-வேக
நவசாரம்பட்டார்போனலின்றுமடநெஞ்சே
அவசரம்பட்டாலாகுமா (௯௯)

சல்லடைககண்ணாகித்தளர்ந்தாளருள்புரிவாய்
மல்லடையுங்கோசநகர்வைகுந்தா-கல்லடையும்
பாந்தாளினைதேர்காலன்பாணம்வருத்துதலாம்
மாந்தாளினைத்தேர்மாலாண்மார்பு (௱)

காரங்கமேனிக்கருணைக்கடலான்
சீரங்கநாதரோசெல்வரோ-நீரங்கே
அள்ளியுண்டோவெண்ணெய்க்காலம்மையடிப்பளென்று
பள்ளிகொண்டாற்போமோபயம் (௱௧)

படைப்பானுங்காப்பானும்பார்க்கிலருணேசன்
படைப்பானயனென்னல்பாவம்-படைக்கிலயன்
ஐந்துதலையிலொன்றையரனறுத்தபோதிலவன்
தன்றலையைப்பண்ணறியான்றான் (௱௨)

நாறுங்கடம்புநடையுடையும்பாவனையும்
வீறுமுனக்கேன்பழனிவேலவா-ஆறுதனில்
வெட்டுண்டானுங்களையன்வெண்ணெய்தனையேதிருடிக்
கட்டுண்டானுங்களம்மான்காண் (௱௩)

தூதுமதுரைதுவாரகைடையிடைமுன்
ஓதுகின்றமூவெழுத்துமோக்குமே-நீதி
செகராஜசேகரன்வாழ்சிங்கையெனுஞ்செல்வ
நகராயிழையார்நகை (து-து-து-மூத்து.) (௱௪)

பூங்கோதைமார்தர்புனைகின்றமுத்தாரம்
வாங்கோங்குடிக்குவடுவென்றே-நாங்கள்

டு

முலைக்கோடணிவதெல்லாமுக்கண்ணன்சென்னித்
தலைக்கோடுபட்டதழும்பு (௪௫)

இவ்வளையுமாவிக்கிரங்குவோர்தாமில்லை
ஐவளையுங்காததவவனுதலினல்-மைவளைசொல்
வானீரங்குமுத்துகிருஷ்ணமன்னனமதுதொண்டை
மானிரங்குவானென்ருண்மான் (௪௬)

வாரிதாளஞ்சொரியமாலையினூடுருவிச்
சேரனமர்நாடளவுஞ்சேர்ந்ததே-மூரிமதன்
அம்போடலைகின்றவாயிழைக்குநீகுதிரைக்
கொம்போகுலோத்துங்காகூறு (௪௭)

தேமிருக்குமாந்தளிரைசெந்தீவனமென்றும்
பூமுருக்கையத்தீப்பொறியென்றும்-நாமிருக்கு
மாய்ப்படுமேயென்றெண்ணிவாடிமனந்தளர்ந்து
கூப்பிடுமேயந்தக்குயில் (௪௮)

காமனூர்வீட்டினிலேகள்ளன்புகுந்தானே
சோமனைப்பாம்புசூழ்ந்ததோ-மாமரந்தான்
தீப்பட்டுவேகுதோதியாகேசற்நன்னாட்டில்
கூப்பிட்டதேயந்தக்குயில் (௪௯)

செந்தமிழோருய்யவன்புசெய்யவந்தசோழவள்ளல்
சந்ததமுஞ்சேராநாடாழ்குயிலே-வந்தனைசெய்
ஐங்கரனைவேலவனையன்றழற்கண்வந்தவனைச்
சங்கரனைவாசுகியைததான் (௫௰)

கருப்பு வில்லைமுறிக்க-ஐங்கரனையும், கடலையடக்க-வேலவனையும் சந்திரனைத்தேய்க்க-வீரபத்திரனையும்-மன்மதனையெரிக்கசங்கரனையும்-தென்றலையுண்ண-வாசுகியையும்வந்தனைசெய்

முக்கண்ணன்வாழ்வெற்றைமுறித்துவரியிட்டக்கால்
முக்கணனையப்பில்விழமோதாதோ-முக்கணன்றன்
வேணிக்காகாமலர்வைத்தேகினன்மெல்லியலை
சாணிற்குறைந்தான்றலை (௫௧)

முக்கணன்வாழ்வெற்பு-மேரு-கால்-காற்று-முக்கணன்-தேங்காய் முக்கணன்-வேணிக்காகாமலர்-தாழம்பு-சாணிற் குறைந்தான்-ஒட்டடச் செடி.

சேலகரோமதுரைசீர்ச்செழியனேசெழியன்
சாலவதிலுள்ளோரேசங்கத்தார்-சீலமிகும்
கம்பாலதேவன்கடம்பவனவாசர்
தம்பாரிமீனாட்சித்தாய் (௫௨)

மங்கையர்கள்யோனிமிசைவைத்திருக்குமாசைதனைப்
பங்குசெய்துநூற்றிலொருபங்கெடுத்துக்-கங்கைமதி
வேணியரன்பாதாரவிந்தத்தில்வைத்தக்கால்
காணலாங்காணாக்கதி (௫௩)

துர்ச்சனரும்பொன்னுந்துடியுந்துரகதமும்
அச்சமறமுன்னிற்குமாயிழையும்-நச்சரவும்
கண்டித்தவெள்ளுங்கரும்புமிளநீரும்
தண்டித்தார்க்கல்லோசயம் (௫௪)

புட்டவல்பட்டாணிபொரிதேங்குழலப்பம்
மட்டவிழ்பூந்தாசைவடையுடனே-சட்டமுடன்
ஓயாமற்சோறுகறியுண்டையுண்டையாயடைக்கும்
வாயாநமச்சிவாயா (௫௫)

குச்சிலியமாதர்குயமுங்குவலயத்தோர்
மெச்சுதமிழ்மாதர் வியன்முலையும்-சிச்சீ
தெலுங்கமடமாதர்சிங்காரக்கொங்கைக்
கலிங்கமெனவேசொற்கவி (௫௬)

இங்கிருக்கவென்றாலெமனோட்டானிவ்விடம்விட
டங்கிருக்கவென்றாலயனோட்டான்-எங்குவைத்துப்
பேணுவேனிவ்வுடலைப்பித்தாபிறைசூடும்
தாணுவேசொக்கநாதா (௫௭)

வெள்ளிமலைபொன்னின்மலைமேவமகிழ்வீடாகி
பிள்ளைகளோபுத்திசொலும்பிள்ளைகளாய்-தெள்ளுமுசப்
வாடாவடிவுடையானமாமனையாளானக்கால்
ஆடாரோவொற்றியப்பனார் (௫௮)

அடியார்க்கெளியன்சிற்றம்பலவன்கொற்றம்
குடியார்க்கெழுதியகைச்சீட்டுப்-படியின்மிசைப்
பெற்றான்சாம்பானுக்குப்பேதமறத்தீட்சைசெய்து
முத்திகொடுக்கமுறை (௫௯)

பரமரகசியத்தைப்பாழானவாயால்
இரவுபகலெங்நேரமின்றிக்-குரனெரியக்
கூப்பிட்டுங்காணுமோகோலமடநெஞ்சேமால்
பூப்பிட்டுங்காணுப்பொருள் (கூ௰)

காந்தனுக்கென்றன்கொடியகாமவிகாரமெலாம்
போந்தறிவித்தாலுனக்குப்புண்ணியமாம்
தேனிபடவாடுந்திரைக்கடலேமன்மதன்கை
வாளிபடவாடும்மனம் (கூக)

கம்பனென்றுங்கும்பனென்றுங்காளியொட்டக்கூத்தனென்றும்
கும்பமுனியென்றும்பேர்கொள்வாரோ-அம்புவியில்
மன்னுமலர்புடைசூழ்வாழ்குடந்தைபாரியப்பன்
அங்காளிலேயிருந்தக்கால் (கூ௨

பூமன்றிருக்கண்டியந்தகன்கோவல்புரமதிகை
மாமன்பறியல்சலந்தரன்விற்குடிமாவழூர்
காமன்கொறுக்கைநமன்கடவூரிங்வக்காசிணிக்குள்
தேமன்கொன்றைச்சடையான்பொருதிட்டசேவகமே (கூ௩)

மெய்ச்சரசமாகவிளையாடும்வேளையிலே
கைச்சரசமென்றதல்லற்கைச்சரசமென்றேனோ
அச்சனகியார்மீதிலாசைகொண்ட ராவணனைத்
தச்சுருவவாளிதொட்டதாமோதரேந்திரனே (கூ௪)

மீன்பார்த்துவிண்பார்த்துவேளையும்பார்த்தாள்வரவு
தான்பார்த்தெனைப்போற்சரிபார்க்கும்வெண்குருகே
மான்பார்த்துவாளிதொட்டமால்சிவநாராயணனை
நான்பார்த்துமாதர்நகைபார்த்திருந்தேனே (கூ௫)

முல்லைமுல்லையாய்த்தொடுத்துமோகமதனெய்யவந்த
வில்லைவில்லையாய்நறுக்கிமெல்லமெல்லத்தாராயோ
இல்லையில்லையென்றுசொல்லியேற்கவரும்பாவலர்கள்
தொல்லைதவிர்க்குங்களந்தைச்சுப்ரமண்யபூபதியே (கூ௬)

ஆயிரங்கண்ணுகமதனம்புமேலம்புவிட
வீயிரங்குசெங்தேனிருலினங்கமானேனே
தாயிரங்கவேணபெண்கட்ரிரங்கவானிரங்க
வேயிருங்கும்வாயாவிசயரகுநாயகனே (கூ௭

சன்னலெனுஞ்சிறுகுருவிகனமழைகாற்றுமல்
மின்னெனும்புழுவெடுத்துவிளக்கேற்றுங்கார்காலம்
மன்னவனுர்தென்மதுரைமாவலிவாணனைப்பிரிந்திங்
கென்னபிழைப்பென்னவிருப்பென்னநகைப்பின்னமுமே (கூஅ)

ஆ. செய்யுள்-கூ௱அ



## விருத்தம்.

கைத்தலத்தழற்கணிச்சிவைத்திடப்புறத்தொருத்தி
கட்கடைப்படைக்கிளைத்ததிறலோராம்
முத்தலைப்படைக்கரத்தெமத்தர்சிற்சபைக்குணிற்கு
முக்கணக்கருக்கொருத்தர்மொழியாரோ
நித்திலத்தினைப்பதித்தகச்சறுத்தடிக்கனத்து
நிற்குமற்புதத்தனத்தினிடையேவேள்
அத்தரத்தினைத்தொடுத்துவிட்டுகெட்டயிற்கணத்த
லக்கணுற்றிடச்செய்விகருமதுதானே (க)

கருப்பாலேபணையடித்துப்பனிநீர்தேக்கிக்
கதலிபலாக்கனியதனுல்வரம்புகட்டும்
திருப்பாலைவாழீசர்பவனியாடுந்
தெருவிற்பால்விலைபகர்சிற்றிடைச்சியாரே
அருட்பாலோபொருட்பாலோகாமப்பாலோ
ஆழிதனைக்கடைந்தெடுத்தவமுதப்பாலோ
இருப்பாலேமனம்படைத்தீர்நில்லீர்செல்லீர்
எந்தப்பால்விற்கவந்திரியம்புவீரோ (உ)

பூப்பார்த்துப்புகழ்பார்த்துப்பொருள்பார்த்துக்
கவிதைசொல்லும்புலவோர்தங்கள்
நாப்பார்த்துக்கொடைகொடுக்குநல்லதம்பி
சந்தசொக்கநாதவென்றல்
காப்பாற்றமுடியாதுகையிலொருகாசுமில்லை
கடனென்றாலும்
பாப்பாத்திசோறிடுவாளிருந்தாலுமுறங்கமுதப்
பயலொட்டேனே (ங)

கெட்டசாறுதவிடுகஞ்சிகிருமியுண்டமாவனைக்
கீரைவேர்தெளிந்தமோர்குழிந்தபாகுகிண்டிமா

இட்டசோறுகோருயலும்பிடாதபுற்கையாயினும்
  எங்குமன்பதாகனுங்கவின்பமாயிருக்குமே
பட்டபாருபசுவிகெய்பருப்புமுக்கனிக்குழாம்
  பாளிதங்கடாளிதங்கள்பண்ணிபாரவகையுடன்
அட்டபாற்குழம்புகன்னலமுதமோடமுதவினும்
  அன்பிலேனளித்திடாதவசனமென்னவசனமே (௪)

துங்கவடகயிலாயமுதலானமைந்து
  துளுவென்றுதொண்டைவளநாட்டெண்ணைங்கு
தங்குநடுநாட்டிருபத்திரண்டுபொன்னித்
  தலநூற்றுத்தொண்ணூறுமலைநாட்டொன்று
கொங்கேழுசிங்களத்திலிரண்டுவைகைக்
  குளிர்தமிழ்நாட்டீரேழுமேலஞ்சுலச்
செங்கையார்தலமிருநூற்றெழுபானன்கில்
  தென்பாகக்கயிலாயந்திருக்குற்றாலம் (௫)

ஓதுமைந்திலொன்றிலைந்திலொன்றுமன்னவன்பிதா
  ஊர்திதொட்டவேழின்மீதிலுற்றசாபநிருபனுர்
தாதுகொண்டதாளிமாலைசூடிதம்பிதம்பிசேய்
  தன்குடைப்பினைவன்மற்றவைக்கிரீடதுவாசனுர்
காதனண்பன்றந்தைபாகன்பின்னவன்பகைச்சுமைக்
  கலையெடுத்தகையனாயர்கதிபெறத்தவஞ்செய்தோன்
திதிருதைகொண்டுவந்தசிலைவதிந்தபதிமினுன்
  சிரமரிந்தவன்கொள்பாரிசேரிலாலுறைந்ததே (௬)

ஓதும் - ஐந்துபஞ்சபூதம் - அதிலொன்று- நிலம்-அதில்-ஐந்து-ஐந்திணை - அதில்ஒன்று - குறிஞ்சி - அதற்குமன்னவன்- முருகன்-அவன்பிதா-சிவன்- அவனூர்தி-இடபம் - அதற்கேழ் - விருச்சிகம் - அதன்மீதிலுற்றசாபம்- தனுசு - அதையுடையநிருபன் - இராமன் - அவன்தம்பி-மனைமாலைசூடியபலரான்-அவன்தம்பி-கிருஷ்ணன் - அவன்சேய் - மன்மதன் அவன்குடை- திங்கள்-அதற்குப்பின்-ஐவன் - சனி-அவன்கிரீடம்-அரவம்-அதைக்கொடியாகவுடையவன்-துரியோதனன் - அவன் - நண்பன்கர்ணன்-அவன்தந்தைசூரியன்- அவன்பாகன் - அருணன் - அவன்பின்னவன் - கருடன், அவன்பகை - ஆதிசேடன்-அவன்சுமை-பூமி-அதன்கலை கடல்-அதையெடுத்தகையர் - அகஸ்தியா - அவனாயர் - பிரமதேவர்-அவர்கதிபெறத்தவஞ்செய்தோன், அனுமான்,அவன்றந்தை,வாயு, அவன்கொண்டுவந்தசிலை . மேரு சிகரங்கள், அவைகளைப் - பதியாகவுடையவ

ன்-இராவணன்-அவன்சிரமரிந்தவன்-திருமால்-அவன்கொப்பூழ்-இலக்கு-இவள்சேர்இல்-தாமரைப்பூ-ஆலுறைந்தது-ஆலமரத்தின்கீழிருந்தது-(இதுது) பொருண்மேற்பிரிந்ததலைவன் ஆலின்கீழ்வைத்தஅலர்க்குறியைக்கண்டுபோந்திதலைவிக்குணர்த்தியது

தொடுத்தமுத்தமிழ்ச்சகத்தியனெனவே தேன்றியபுன்னைச்சேனையர்கோன், சொலக்கணம்புலவனிலக்கணக்கவியைத் துதித்தகங்களித்திடுங்களியேம், மடத்தினிற்புகுந்துமதுத்திலக்தவனார்வடித்தகட்டிகுடித்துநின்றவனார், வறுத்தசுட்கடித்துக்குதட்டுகின்றவனார் மயக்கியுட்டியக்கமுற்றவனார், கடுக்கனைமிடற்றிலொடுக்கியிட்டவனோ கையிலேசிலம்பையிட்டவனோ கனத்தநூற்கொடியைநாவிலிட்டவனோ கண்ணிலேகுழையையிட்டவனோ, முடுக்கியவயற்றிலாழியிட்டவனோ முகத்திருபதக்கமிட்டவனோ, முனைத்தகைதானொருபான்சதங்கையிட்டயவனோ முழுப்பட்டவர்க்கலாதிலையே ௭

கடுவிஷம்-சிலம்பு-மலை-நூற்கொடி-வாணி-கண்குழை-கட்செவி-ஆழி-கடல்-இருபதக்கம்-இருபதுகண் ஒருபான் சதங்கை ஆயிரங்கை.

தேமதுரக்கவிவிரகன்றெவ்வைவருபெருமான்
செல்வச்சங்கராதானைத்தினம்வணங்குகளியேம்
யாமதுண்போலுமகுதுமக்கடிமையிலர்போல
எமைமயக்குமொமயக்காகினியியம்பக்கேளீர்
வீமன்மகத்தியனேகுபேரன்மகன்புதனே
விருனைமுகனொருதன்விரும்புமகன்குகனே
காமன்மகன்சயந்தனேவேதன்மகன்சிவனே
காலன்பாற்பிறந்தமகன்கடல்கடந்துளானே ௮

வீமன்-பிறமன்-குபேரன்-சந்திரன்-விருனைமுகன்-விருன்-ஐம்முகன்-காமன்-இந்திரன்-வே-மூங்கில்-கால்-காற்று

சந்தப்பாவிருத்தப்பாகலிப்பாவெண்பா
தாழிசைப்பாகொச்சகப்பாத்தனிப்பாவுக்கும்
விந்தையப்பாவாகியசிறந்தப்பாவும்
வெல்லம்பாவதுபோலவிகடப்பாவும்
எந்தப்பாவுரைத்திடினுமொருபேறில்லா
எதப்பாவிக்குநினதிணைப்பாதத்தைக்
சந்தப்பாமுருகம்பாபோரிவாழ்வே
கையப்பாமெய்யப்பாகட்டப்பாவே ௯

ஆதிசிவன்செத்தானோவுமைசெத்தாளோ
ஐங்கரனுஞ்செத்தானோவரிசெத்தானோ
வேதியனுஞ்செத்தானோ நீசெத்தாயோ
வெட்டவெளியானந்தம்வெறும்பாழாச்சோ
நாதியற்றுப்போனேயோவழிகாட்டாயோ
நாயேனுக்கிரங்கிவந்துநலந்தாராயோ
பாதிவழிதனிலயதிப்படுத்துவாயோ
பாதகாதிருச்செந்தூர்பதியுள்ளானே ௰

நீருஞ்சுமந்தேன்விறகெடுத்தேனித்தஞ்சுமந்தேன்சரணங்கம்
நிகழவடிபட்டுதைப்பட்டேநின்றேன்வைகையைக்காளாக
ஆரும்விரும்பார்த்துகிலெடுத்தேனழகுமேனிகரிக்கோலம்
ஆனேனதனாலல்லோவுன்னடியாளுனக்குச்சரியானேன்
காரும்விரும்புங்கடுவணிந்தகளனேகருணைப்பெருங்கடலே
கமலத்தயன்மால்காணுதகாலகாலாவென்றுயாம்
தீரும்படிதண்ணருள்புரிவாய்சிவனேயமரர்க்கொருவிருந்தே
தேவேதெய்வமறைப்பொருளேதிசழுங்கடலூர்ச்சேவகனே ௰௧

காளமேகப்புலவர்பாடியது-

எறுகட்டியகொட்டிலரங்கமேவீரிரண்டுமுகன்வாயிலாயமே, மாறு சண்ணப்பன்வாய்மடைப்பள்ளியேவாய்த்தவோடைதிருமால்மதனமே, வீறுசேர்திருத்தொண்டனில்லாளுந்திவேட்டநற்கறிகாய்க்கின்றதோட்டமே, நாறும்பூம்பொழில்சூழ்தில்லையம்பல நாரிபாகற்குநாடகசாலையே()

நடுவெழுத்தலங்காரம்

திருமால்வாகனநாவாயிராசியொன்று
சினைதெவிட்டார்மாதுலன்கோகிலமிவ்வேழின்
உருவாமேழெழுத்திரடுவெனக்குச்செய்தான்
உகந்துபதினன்கனையுந்தானேகொண்டான்
ஒருபாகத்திருத்தினன்கையிலேற்றான்
ஒருமதலைதனக்களித்தானுண்டான்பூண்டான்
பரிவாயொண்கரத்தாமைத்தானுகந்தானிந்தப்
பைம்பொழிற்றில்லையுளாடும்பரமன்றானே ௰௨

திருமால்வாகனம் - நாகாரி - நாவாய்-கலகம்-இராசி-கன்னி-சினை-கவடு - தெவிட்டார்-ஆரார்-மாதுலன்- மாமன்-கோகிலம்-பல்லி - இவற்றி

ண்-நடுவெழுத்துகள்காலன்வாராமல் இவற்றினனையவெழுத்துக்களின்ப
யன்நாரிகூமை(கம்-கபாலம்)(கனி-பழம்)(கடு-விஷம்)(ஆர்-ஆதி)(மான்-ப
லிபிச்சை

கூற்றுவனை வின்மதனையரக்கர்கோவைக்
கூனிலவைக்குஞ்சரத்தையிஞ்சிமூன்றை
ஏற்றுலகின்புறவுருவமாளத்தோள்க
ளிறவெறிப்பவிமையப்பெண்வெருவவேவக்
காற்றொருதலையணைத்தால்விரலாற்கண்ணைக்
கதிர்முடியாற்கரதலத்தாற்கணையாற்பின்னும்
ஊற்றாறிபவுதைத்தெரித்துநெரித்துச்சூடி
உரித்தெரித்தானவனென்னையுடையகோவே ௰௪

பொன்னைவாளரக்கனை நாற்றுவரைக்காவைப்
பொருசிலையைக்கனைகடலைப்பொன்னனீற்ற
நன்மகற்காய்ச்சுரர்க்காவெவ்வரக்காய்க்காதல்
நட்பினுக்காய்ச்சானகிக்காய்நடைவைக்காக
மன்னுகிருல்வடிக்கணையால்வளையாற்புள்ளால்
வயங்குதோள்வலியால்வானரங்களாலும்
உன்னுடற்கிறிச்சிரங்கொண்டமரில்வீழ்த்தி
முதலோடுங்கொண்டிருந்தடைத்தமோகூரானே ௰௫

இந்துமுடிக்குஞ்சடையாளரிக்குந்தொண்டைவளநாட்டிற்
சிந்துபடிக்கக்கவிபடிக்கத்தெரியாமடவாயுன்றனுக்குக்
கெந்தப்பொடியேன்பூமுடியேன்கிழமாய்நரைத்துமுகந்திரைந்தும்
இந்தமுறுக்கென்வீறுப்பேயெனெப்பேனுன்னைக்கொடிப்பேனே ௰௬

ஏழாலேயடித்தபுலிதனையடித்தான்வீரசென்னனென்றேகாட்டில்
வாழாமற்சிறுபுலிகளிப்புலியோவெலிப்புலியாய்வடிவங்கொண்டு
பாழாகிக்காடெல்லாம்பாதலிக்கவடுகரடிப்படியில்வந்து
கூழாகிவயிற்றினிற்போம்பொழுதுகுணம்போகாமற்குழறுந்தானே

கட்டளைக்கலித்துறை

காவென்றுஞ்சிந்தாமணியென்றுஞ்சொல்லியென்கையிலள்ளித்
தாவென்றுகேட்கத்தரித்திரம்பின்னின்றுதள்ளவென்னைப்
போவென்றுரைக்கவுநாணமங்கேயென்னபோலதிங்கு
வாவென்றழைக்கவும்வந்தேன்விராலிமலைக்கந்தனே ௰௮

கொச்சகம்

காரொன்றுபேர்படைத்தாய்கசனத்துரும்போது
நீயொன்றுபேர்படைத்தாய்நெடுந்தனாயில்லைந்ததற்பின்

வாரொன்றுமென்முலையாராச்சியர்கைவந்ததற்பின்
மோரொன்றுபேர்படைத்தாய்முப்பேரும்பெற்றாயே ௰௯

முன்னாகநீரளக்குமுடிமன்னர்க்காத்திருக்குமுனிகளென்னை
மன்னாமலோட்டுவிக்குமாதனைச்சொற்கேட்பிக்குமடக்குமாட்டைப்
பன்னாகத்தலைநக்கும்பாலனைச்சொற்கேட்விக்கும்படிப்புண்டாகும்
என்னாளுங்கிழவருக்கோரிடுப்பாகுநடைகொடுக்குமென்கைக்கோலே
கருந்தலைசெந்தலைதங்கான்றிருக்கால்கடையிற்சுற்றி
வருந்திக்குடைவைக்குந்தாட்டிக்குங்கொத்திமேய்வதல்லால்
கரந்தைகளாண்டிலொருக்கால்வருவதுகண்டிருந்தும்
அரும்புக்குங்கொத்துக்கும்வந்தார்பினழைப்பதரிதென்பரே ௨௰

சங்கையிலாமதன்விடுத்தபகழிதைத்தபுண்வருத்தந்தனைநோக்கிக்
கொங்கையையொத்திடக்கொடுத்துக்குஞ்சமச்சாந்தப்பற்றுங்குளிரப்பூ
சிச்,செங்கனிவாயுதம்மருந்துமுள்ளுக்கேகொடுத்தெனக்குச்செய்தநன்றி
மங்கையரோயிந்திரவிதெற்குவடக்குதித்திடினுமறந்திடனே ௨௧

ஏமிராவோரியென்பர்ளெந்துண்டிவஸ்தியென்பான்
தாமிராச்சொன்னதெல்லாந்தலைகடைதெரிந்ததில்லை
போமிராச்சூழுஞ்சோலைபொருங்கொண்டைத்திம்மிசையில்
நாமிராப்பட்டபாடுநமன்கையிற்பாடுதானே ௨௨

## சுந்தரகவிராயர் விருத்தம்

ஒருகோட்டுக்கலைமுனியுமொளிதிகழும்புலியாடையுடுத்தகோவும்
மருமலர்வாழ்திசைமுகனும்வானவர்களுயகனுமிடன்றானும்
கரியசிறத்திருமாலும்வாலியும்பராசனுமேகாமனம்பால்
பெருமையிழந்தனரென்றாற்சிறுமனிதர்க்கெப்படியோபேசுங்காலே ௨௩

வாசவனும்பிறர்மனைக்கவுடலானொருவனராவடிவமானான்
தேசுபுகழ்க்கலைமதியுமுடலிழந்தான்மலர்வேதன்சிரமொன்றற்றான்
ஈசனுதல்விழிதிறந்தானிராவணனுஞ்சுந்தோபசுந்தரிறந்தார்மண்மேல்
காசினிப்புன்மானிடரோமோகசாகரமதனைக்கடக்கவல்லார் ௨௪

உணங்கியொருகான்முடமாகியொருகண்ணின்றிச்செவியிழந்து
வணங்குநெடுவாலறுப்புண்டுமென்னுமுதுகில்வயிறொட்டி
அணங்குநலியமெலிவெய்தியகல்வாயொடுகழுத்தேந்திச்
சுணங்கன்முடிவல்பின்சென்றால்யாரைக்காமன்றுயர்செய்யான் ௨௫

கட்டிற்றலைதிருப்பிவைத்தாற்றலைவலிபோமோவந்தக்கீதைபோலாட்
டுக்,குட்டியிதென்னடிசகியேசெட்டிவயித்திடன்யள்ளிக்கெண்டா பா

ம்பின், வெட்டியினுங்கையிலேனுண்டையும்பாய்ச்சிடுவனென்றுய்ப்பிலமா
ய்க்காயங், கட்டிடுவனிதல்லாலன்றே மதன்விடும்பகழிப்புண்டானே.

மரமதுமரத்திலேறிமரமதைத்தோளில்வைத்து
மரமதுமரத்தைக்கண்டுமரத்தினன்மரத்தைக்குத்தி
மரமதுவழியேசென்றுவளமனைக்கேகும்போது
மரமதுகண்டமாதர்மரமுடன்மரமெடுத்தார் ௨௮

இராமசாமிக்கவிராயர்பாடியது

மாலைதனைப்புனைந்தாலுமலரணையிற்படுத்தாலுமருவார்பன்னீர்
ஞாலமுறத்தெளித்தாலுமெவ்வளவேனுங்குளிரவில்லையென்செய்வேன்
கோலமுறுமணிமயிலேகிளைகளொடுசுகம்படைத்துக்குலாவுமெங்கள்
சோலைதனைச்சேராமற்காமவிடாய்தணியாதேதோகைமாரே ௨௯

பாலைநிகர்மொழிமாதேயென்னிடத்தில் பூரணமாய் பட்சம்வைத்து
க், காலைமுகிலனையகரன்மணமியில்வாழ் சோலையெனுங்கண்ணன்பாற்போ
ய், மாலைகேண்மறுத்தாலென் மனத்தைக்கேண் மறுக்கின்மதன்வாராவ
ண்ணம், ஓலைகேண்மறுத்தக்காற் கிள்ளைக்குக்கேள் வேறென்றேதிடா
யே. ௩௰

அரக்கனலையிலங்கையைவென்றோன்மருகன்றணிகேசன்பர்வானஞ்
சிரக்கனலையாமலுனைக்காப்பானென்றனையடிதேமொழியேமாலை
வரக்கனலைமதிவீசப்படுமோவவ்வேளைதனில்வாதுக்கேம
துரக்கனலைமதப்பயலென்றனங்குனிக்கத்தகுமோசொற்றோகைநீயே
என்னையவரமறந்தும்மானவளைமிகநினைக்கிருந்துவாட
முன்னைவிதிப்படிதானோமுற்பிறப்பிற்செய்தவினைமுடிந்தவாறோ
கன்னலொங்கள்பிராமன்வரதுங்கராமனியற்காசிநாட்டில்
அன்னவயற்குருகினங்காடணித்திருக்கமுடியாதென்றறைகுவீரோ ௩௨

தன்மனையிரதமாக்கித்தன்மகன்வலவனாக்கித்
தன்மகன்பேரனேதனக்குமைத்துனன்காலாக்கித்
தன்னைநாரியாக்கித்தானுமோரம்புமானோன்
தன்மனமிடங்கொண்டுய்த்தசங்கரன்றனகுமாயன் ௩௩

முன்னொருவூரின்பேராமுதலெழுத்தில்லாவிட்டால்
நன்னகர்மன்னர்பேராநடுவெழுத்தில்லாவிட்டால்
கன்னமாமிருகத்தின்பேர்கடையெழுத்தில்லாவிட்டால்
உன்னிடதேனின்பேராமூரின்பேர்விளம்புவீரோ ௩௪

(மதுரை-துரை-மரை-மது.)

புதுவைமுத்துக் குமாரதொண்டன்றமிழ்போலக்கவிமதுரம் பொரு யப்பாடும், சதுரருண்டோ வெனவிரிஞ் சன்வினவி ஞன் சேடனுன் ரு னென்றானேர், பதமெனிலுந்தோன்றுமன்மால்கொண்டு கடல்வீழ்ந் தா ன்பதுமன்சீறி, மதமுறுநாவைப்பிளந்து காதறுத்துமுன் சுமக்க வைத்தி ட்டானே. ௯௫

மதுகரத்தையிகழ்ந்துகுயில்வடிவேலர் தமையழைத்துவாரோவென் றே, இதமுணாத்துச்சென்ற தென்னையின்னமுங் காணே னதனுக்கிரக்க மேது, சதமிதெனவளர்த்தெடுத்ததாய்க்குதவா தார்க்குதவுந் தத்தையே கேள் முதுமைசேர் குமார் தமையழைத்துவா மதப்பயலை முடுக்கத்தா னே ௯௬

குருமூர்த்தமாய்வந்து வினையொழித்துமுத்திதனைக்கொடுக்கத்தியாகர்
ஒருமூர்த்தியல்லாமன்மற்றுமொருமூர்த்திகளுமுண்டோ நெஞ்சே
திரிமூர்த்தியென்பார்களவரவர்வாகனமேறிச்சேணிற்சும்மாய்
திரிமூர்த்தியல்லாமலொருமூர்த்தியுங்கதியிற்சேர்த்திடாரே ௯௭

இருக்கோலமிடுங்கலைசைத்தெய்வசிகா மணிமுகில்வந்திணங்கா நா ளில், உருக்கோலவடிவானுன்மைந்தனுமைத்துனனு நிதமோய் விலாம ல், மருக்கோலஞ்செய்வதிலும்வடவனலைச்சொரிவதினு மயக்கமுற்றுத், திருக்கோலங்கொண்டமகடயங்குகின்றுண்மயங்குகின்றுடினமுந்தானே

மூந்தனத்தைதாது விட்டேன்வரவுமில்லை மதராஜன் முனிந்தேவில் லால், எந்தனதுக்கிலக்காகமலர்வாளியெய்கின்று னினியென்செய்வே ன், கந்தனத்தையகலாதபூம்பாவைவேலப்பன்கையாற்பூசுஞ், சந்தனத்தை சவ்வாஸதனினைந்துமனதுருகுதடிதையலாளே ௯௯

வெறிவிலக்கல்

குருத்துக்கதலிபசுந்தேனையள்ளிக்குரங்குகுட்டிக்
கருத்திக்களிக்குங்குருங்குடிவாழ்தருமண்ணல்வெற்பில்
பருத்திப்பொதிக்கிட்ட தீப்போலக்காமம்படைத்தவிந்த
ஒருத்திக்கொருவன்பகையோடுச்சொல்லுமோவரோ ௱

தொட்டிக்கலைசுப்பிரமண்ணியதம்பிரான்வெண்பா

வல்லவகுளத்திருக்குமன்னவாவாசமலி
நல்லகுளத்திருக்குநாதனேமெல்ல
வடிவாளைக்கொண்ட மணவாளாகணிச்சி
வடிவாளைக்கொண்டென்னிடர்மாற்று ௱௧

(குளத்திருக்குநெற்றிக்கண்)

கட்டளைக்கலிப்பா

பொன்முகநோக்கினின்றனைமுகநோக்குமுன்போயினளென்
றுன்னிடைவீழ்ந்தனள்கைதொடவுய்ந்தனளுன்னுடனே
பின்னும்புணர்ந்திடமுன்னறிவுற்றிடப்பெற்றபிறப்
பொன்னலமென்றனளோரகத்தான்மலையீரங்கொடியே ௪௨

ஒட்டக்கூத்தர்

தற்கோலிப்பாசப்பூசற்கேதட்டாமற்சாலைக்கேகிற்பீர்
முற்கோலிக்கோலிப்பூசித்தேமுட்டாமற்சேவித்தேகிற்பீர்
வற்றாநெட்டோடைப்பாரச்சேன்மைப்பூகத்தேறித்தாவிப்போல்
நெற்றாளூற்றாலைப்பாகிற்சேர்செய்த்தானத்தானைத்தியானித்தே ௩௩

புகழேந்தி

விக்காவுக்காவித்தாவிப்போய்விட்டானட்டார்சுட்டோர்புக்கார்
இக்காயத்தாசைப்பாடுற்றேயிற்றேடிப்போய்வைப்பீர்கிற்பீர்
அக்காடப்பேய்தொக்காடச்சூழப்பாடத்தீவெப்பாடப்பூண்
நெக்காடக்கானத்தாடும்போசெய்த்தானத்தானைத்தியானித்தே ௪௩

ஆக-செய்யுள்-௯௫௨

---

இப்பதிப்பில் நூதனமாகச்சேர்ந்த

பலவித்வான்கள்பாடியபாடல்

கலித்துறை

நீத்தாவறிஞர்பிணியாளர்கல்விநெறியறியார்
பூந்தாரமஞ்சிவிருந்தொளிப்பார்பொருட்கேசிவிகை
யூர்ந்தேசுமைசுமந்துண்போரிவர்களுயிரிருந்து
வீழ்ந்தாரிவரைவர்காண்செழியாதிருவேங்கடமே ௧

கொடுத்தாவிகாக்கின்றகாவேரிவற்றிக்குறைந்திடினு
மடுத்தோரண்டிநீருண்ணுவாரதுபோலிந்தமாநிலத்தி
லடுத்தாரைரட்சிக்குந்தாதாவென்பார்க்கடையாளம்பிச்சை
யெடுத்தாகினுங்கொடுப்பார்வெள்ளைநாவலிருப்பவனே ௨

வெண்பா

மாமிக்கோர்மாமியுண்டுவாணருக்கோவாணருண்டு
சாமிக்குமேற்றகப்பன்சாமியுண்டு-பூமிக்குள்
எல்லாந்தெரிந்தவருமில்லைதெரியாதவரு
மல்லாமற்கண்டவர்களார் ௩

ஆங்காலமெய்வருந்தவேண்டாமதுவன்றித்
தேங்காய்க்கிளநீர்போற்சேருமே-போங்காலை
காட்டானைதின்றகனியதுபோலாகுமே
தேட்டாளன்தேடுந்தனம் ௬

சொல்லிச்செய்வார்பெரியோர்சொல்லிச்செய்வார்சிறியோர்
சொல்லியுஞ்செய்யார்தவர்கடர்-சொல்லுங்கால்
குலமாலைவேற்கட்குறிப்பறிந்துபார்க்கிற்
பலமாநற்பாதிரியைப்பார் ௭

கலித்துறை.

முற்றுந்தில்லையும்வாசமுமுள்ளருமுனையுமெவர்
சற்றிலுஞ்செய்துனைத்ததுண்டோவன்புஞ்சர்க்குணமும்
பெற்றுப்பிறவிக்குணங்கானதுகண்டுமேதையர்கள்
கற்றல்வராதுகண்டாய்கச்சிமாநகர்க்காவலனே ௮

வெண்பா

மிக்குப்பெருகிபுமிகுனல்லாய்ந்தாலும்
உப்பொழிதல்செல்லாவொலிகடல்பால்-மிக்க
இனநலநன்குடையராயினுமென்று
மனநலமாகவாங்கிழ் ௯

உடைப்பெருஞ்செல்வத்துயர்ந்தபெருமை
அடக்கமிகெஞ்சத்தினும்-நடக்கையின்
ஒள்ளியனல்லான்மேல்வைத்தல்குரங்கின்கைக்
கொள்ளிகொடுத்துவிடல் ௰

சத்துவம்புத்திவித்தைச்சதுர்விதார்த்தங்களான
இத்தனைவிதமுஞ்செல்வமில்லையே-வில்லையாகும்
சத்துவம்புத்திவித்தைச்சதுர்விதார்த்தங்களான
இத்தனைவிதமுஞ்செல்வமெய்திடிலெய்துமன்றே ௰௧

கதிரவனிலையேறகண்ணிற்காண்பனமறையுமாபோல்
விதியமொன்றிலையேலியார்க்குநீதிமான்ஞானபோதம்
துதிபெறுகீர்த்தியாண்மைச்சூழ்ச்சிமந்திரவிசாரம்
கதிரபிமானமெல்லாந்தன்னிலேமறைந்துபோமால் ௰௨

கலித்துறை.

மாலுக்குச்சர்க்கரையில்லையென்பார்க்கும்பருக்கையற்ற
கூழுக்குப்போடவுப்பில்லையென்பார்க்குங்குத்திதைத்த
காலுக்குத்தோற்செருப்பில்லையென்பார்க்குங்கனத்ததண்டு
மேலுக்குப்பஞ்சணையில்லையென்பார்க்கும்விசனமொன்றே ௰௩

மேவுமென்போகம்விளம்பில்பெண்ணுடையியன்கலன்பாற்
றுவியம்போசனந்தாம்பூலம்வீசுசுகந்தமன்பி
ணுவெழிற்பட்டலர்மெல்லணையாமிவையெண்கணமைந்த
வாவிக்கடவுளருட்பாழிபெற்றவரசிடமே (௰௨)

வெண்பா

எண்கோவைமேகலைக்காஞ்சியிருகோவை
கண்கோல்கலாபமிருபத்தொன்று-பண்கோள்
பருமம்பதின்மூன்றுமுப்பத்திரண்டு
விரிசிகையென்றுணரப்பாற்று (௰௩)

மன்னவன்குணங்கொடிதெனவருத்தலுற்றதற்குத்
துன்னுமையங்கொடியடுத்தகொம்பதனையேகுழும்
கன்னிமாதருமன்னருந்தங்களைக்காத்தே
பன்னுமிங்கிதஞ்செயுமவர்யாற்செய்வார்பரிவு (௰௪)

பாவிளகத்தைப்போலும்பலவிரதியர்கள்போலும்
ஓவருசகாயர்போலுமுறைமுறைசுத்தர்போலும்
மே[illegible]ரைச்சேரின்மேன்மையரேனுமுய்யார்
பூவைமுயலுமுன்னோர்ப்பூணையச்சேர்ந்தவரே (௰௫)

வேந்தருங்கொடுந்தீயும்வெவ்விடம்பொழிபகுவாய்
பாந்தளுஞ்சரியாதலினன்னவன்பக்கல்
போந்துநன்புகொண்டடலிகீபுரக்குமாறென்னும்
மோந்திடும்படிக்கடிக்கடிப்பதுமன்னர்தம்முறையே (௰௬)

ஒருவருக்கமுதளித்தானுண்பனேலுலகமாரு
மிருவருக்கமுதளித்தாலிந்திரன்பதவிசேர்வார்
மருவியபூசைசெய்துவந்தவரிளப்பையாற்றில்
திருமடவன்னதானஞ்சிவாலயமாகுந்தானே (௰௭)

வெண்பா

அருக்கனையுஞ்சோமனையுமைம்மூன்றுநாளதனிற்
பெருக்கவாரவந்தீண்டினற்பேசுங்கால்-செருக்களத்தின்
மன்னர்மடிவார்மடிதாரேயாமாகில்
அன்னைபரிதாய்விடும் (௰௮)

பருதியும்பஞ்சமாகிற்பார்மதிவெள்ளமாகுங்
குரிதியுங்கூச்சலாகுங்கொடும்புதன்காற்றதாகும்

பெருத்ததோர்வியாழம்வெள்ளிப்போகபோரவிற்குங்
கருத்ததோர்சனியுமாஇற்கலகமும்பற்றுதே (௰௬)

வெண்பா

கல்லாடர்செப்பனவல்கல்லாடம்நூறுநூல்
வல்லார்சங்கத்தில்வந்தருளிச்-சொல்லாட
மாமதுரையீசர்மனமுவந்துகேட்டுமுடித்
தாவசைத்தார்நூறுதரம் (௨௰)

இடுகாட்டுமெங்கையெலும்பிற்புரண்மால்
சுடுகாட்டுலாடுவார்சுட்டிடுகோட்டுஞ்
சம்பந்தாவென்றநின்பாறந்தாக்கிக்கொண்டிலனே
கும்பந்தானென்னுமூலைக்கொம்பு (௨௧

கலித்துறை

அரியெச்சில்போலவரடெச்சிலுமஞ்சரியெச்சிலும்
எரியெச்சிலேழுமுனியெச்சிலும்போராவேந்திழையாள்
கரியெச்சில்போன்றனள்விக்கிரமச்சோழன்கனைத்தகன்றின்
புரியெச்சிலுண்டபுயல்வண்ணனெச்சிற்புரந்தரனே (௨௨)

வாக்குமனமுடையானென்றோர்தமனமுடிநீ
ராக்குந்திறமையிருங்கோளன்வெற்பிலனயனடுக்கம்
போக்கும்புனிதனுங்கந்தனுமாலும்புரந்தரனும்
நாக்குமகழுத்துந்தலையுமில்லான்மகைநானல்லவே (௨௩)

காயுங்கடுஞ்சுரமீதென்றுகாட்டியகையுஞ்சொன்ன
வாயும்புகையெழும்பாலையிலேமணிமாமகுடம்
தோயும்புகழ்ச்சிச்சந்தராபாண்டியன்தோகைவெற்பிலே
தாயுந்தமருமமில்லாளின்மனேனின்றதார்குழலே (௨௪)

ஆக-செய்யுள்-௯௩௬

—※—

கடிகைமுத்துப்புலவர்பாடிய

மடக்கு

கருப்பஞ்சிலையுமோர்காமே-கண்டேநானுஞ்சுகாமே
காமப்பயலுமூர்க்கரமே-கணையைத்தொடுப்பால்சீக்கிரமே
விருத்தம்புரிதாரனேகரமே-வல்லார்மடவார்பிசகாமே
மாமால்வெங்கடேசரெட்டன்-வருவான்வருவானென்றிருந்தேன்

திருத்தும்படிக்குமனோகரமேசெய்தானினித்திவாகரமே
இனியில்வருவாயெனக்கரமேதெரியவுதித்தான்சக்கரமே
பொருத்தந்தருகண்ணோகரமேபோர்வேட்கிலைவீராகரமே
பூவைமாருஞ்சேகரமேபுகழ்ந்தேன்ரத்தினகரமே ௧

கையான்முகத்தைத்துடைத்துமலர்க்கண்ணாலேலையும்பார்த்துபலர்
காலான்வண்டுகுடைந்தமலர்க்கணியையெனதுகுழற்கணிந்து
மெய்யானதையேதடவியென்றன்மேலேயிலங்குமுடைமையெலாம்
வெவ்வேறாகக்களைந்ததனைமீட்டுநிறையாத்தரித்துமங்கே [ம்
நையாவிடையத்துகிலாலேநன்றுப்பொதிந்தமனம்விரும்பி
நகைத்தான்வெங்கடேசுரெட்டன்நானுமகிழ்ந்தவனைப்பார்த்தேன்
மையார்விழியார்தமைக்கல்விவகையாலுருக்கிவசப்படுத்தும்
மார்க்கமவனுக்கல்லாமல்மாரன்றனக்கும்வாராதே ௨

தலைவனைச்சேர்ந்தவகைக்குங்-கடலுக்குஞ்சிலேடை;

மடிமேலேந்திமலர்வாய்த்தேன்வழங்கித்தனபாரத்துகிரும்
வைக்கத்தனமேகசங்குமென்றுவணிவாய்முத்தம்பலகொடுக்கக்
கொடியினிடைகால்விசைத்தெழும்பிக்கொள்ளப்பலைப்பாயசைக்கவந்து
கூடவரைச்சோமனுந்தோயக்கொட்டுமமிர்தங்கொப்பளிக்கப்
படியையளந்தகாலாற்கற்பாறைமிதித்துமடமாதைப்
பார்த்துமுனியேதிதுவெனவேபகர்ந்தோன்வெங்கடேசுரெட்டன்
அடியுமுனையும்படைத்தவெற்றித்துரையைச்சேர்ந்தவிதம்போலத்
தோற்றுங்கடலேநானுனக்குச்சொல்லிக்காட்டவேண்டாமே ௩

அப்புறத்தொதுக்கடிக்குமத்தொழிற்கொருப்படுத்தி
அக்கணத்தினிற்றொடைக்குளப்படிப்படித்தெழுப்பி
இப்புறத்திழுத்தொருத்திஎப்படிச்சமத்திகெட்டி
இத்தனைக்குமுந்தரித்ததிப்படிக்கெனப்படப்பை
குப்புதக்கிடத்தும்வித்தைகுற்றமற்றவித்தைகுத்து
குத்தெனச்சொலச்சொலிக்கொடுத்துரைத்தடுத்தடுத்து
மெய்ப்புறத்தொழிற்பயிற்றிவெங்கடேசுரெட்டமன்
விடியுமட்டுமெனுபவித்தவித்தைநல்லவித்தையே ௪

ஒருகரத்தில்விடவிலைப்பின்உபரிவித்தைமுதனடத்தி
உகிர்செலுத்துகரகரத்தில்உரகனுச்சிமணியசைத்து
மருவியும்புமமுதுடைத்துவரவெழுப்பியதிலெனக்கு
வலுமயக்கம்வாவிரித்தமலரணைக்குள்விழவுயர்த்தும்

இருதொடைக்குளவனிருக்கஎனைமலர்த்திமுலைசுவைத்தும்
இதழ்சுவைதந்துமொருதரத்தில்இருவருக்குமனம்ருசிக்க
விருதுகட்டியனுபவித்தவெங்கடேசுரெட்டமன்
விரகதாபமதுதணித்தவேளைநல்லவேளையே ௫

தந்திதங்கலந்துகண்டதந்தரங்கமென்றுசந்த
தந்திடம்புரிந்தணைந்ததந்திரந்தெரிந்திசைந்து
பந்தெழும்புகின்றதென்றுபந்திகொண்டெழும்பவுஞ்ச
பந்தருஞ்சுகம்பொருந்துபந்தயங்களும்பகர்ந்து
வந்துவந்திருந்தகொங்கைமந்தரங்குலுங்கவண்டு
மண்டுகொண்டைகொண்டலென்று வந்தொதுங்குசண்டைக
விந்தைவிந்தையென்றியம்பிவெங்கடேசுரெட்டமன்
விரகதர்பமதுதணித்தவேளைநல்லவேளையே ௬

மடியில்வைத்துமுலைபிடித்துவலியமுத்தமிடமுகத்தில்
வதனம்வைத்துமதனவித்தைவகைபிறக்கவலுணைத்து
முடியுறைக்கநகமழுந்திழுதுகினிற்கைபடவணைத்து
முறுகிமெத்தவிறுகிவெட்கமுழுதும்விட்டுமெலவசைத்து
நெடியபுட்கள்குரலெழுப்பிநிலைதரித்தவிழியிமைக்க
நினைவுமற்றபரவசத்தினிறைவெனக்குவரமயக்கி
விடியுமட்டுமனுபவித்தவெங்கடேசுரெட்டமன்
விரகதாபமதுதணித்தவேளைநல்லவேளையே ௭

மடக்கு

சுரதஞ்செயவேகடிதடவிச்சுரதந்தனையேதொட்டதுமீ
சுரதந்திரமாமதனையுமீசுரதந்திரமென்றெண்ணேனே
சரசஞ்சொலியேநகைத்ததுமிஞ்சரசந்தானேமுடித்ததுபூச்
சரசம்பிரமவேளெடுத்தசரசஞ்சலமுந்தவிர்ந்தேனே
கரசஞ்சமுமென்முலையாணகரகந்தொடுமப்போதிலநங்
கரகந்தையும்போய்விட்டதரகரகந்திருவமணமிதுவே
அரவந்தருபுட்குரன்முழங்கஅரவந்தனிலேநடித்தமுகில்
ஆமால்வெங்கடேசுரெட்டன்அனுபோகத்தைதொடுத்தானே ௮

மடக்கு

சேலையுரிந்தான்கடிந்துவிழிச்சேலையுருட்டிப்பார்க்கையிலே
செவ்வாயிதழைக்கொடுத்தானுஞ்செவ்வாய்சீவிப்பற்பதித்தேன்
மாலைசரிந்தபிடரினுக்குள்மாலையமைந்தபிறைபோல
வைத்தானகத்தைச்சவளையுஞ்சவைத்தாயமிதென்றுணர்ந்தேன்

காலையிருப்பிலிறுக்கியொருக்கலைவகையாலிங்கனத்தாற்
கட்டியணைக்கத்தொடுத்தவளைக்கட்டிசொலவுமனம்வருமோ
வேலையெடுத்ததிரைக்கடலேவேலையெடுத்தமுருகனைப்போல்.
வெங்கடேசரெட்டவனையேவச்சமயம்வாய்த்ததுவே ௯

மடக்கு

கலசமுலையைதொட்டேனையுங்கலசமதியாமெனிற்பிடித்துக்
கசக்குமுலைக்காம்பையும்பருகக்கசக்குமெனவுநினையாதே
சலவையுரிவேனுயர்ந்தபுயாசலவையிலுநான்விடுவேனோ
சவாதுவழித்துக்கழுத்தினிற்பூசவாதுவரைநேரிதழ்பருகு
புலவிதனையேநினைப்பதுநான்புலவிதலைவோசமயமென்றே
புகழ்சேர்வெங்கடேசரெட்டபூபாவுனையேநானினைந்தேன்
நிலவானதுவுங்குளிரமந்தாநிலவாசமும்வந்தடிக்கவுநான்
நினைப்பாயலிலேமருவவுநீநினைப்பாயலிலேயென்றேனே ௰

கனவில்வருமன்னவனென்னதுகையைப்பிடித்துமடியில்வைத்துக்
காற்போற்குழலைக்கோதியவன்கையான்முதுகைத்தடவியுமென்
மனதுகுளிரமுன்புசுதன்வழங்கியவனேபின்புமுத்தம்
வழங்கித்தலையைவளைத்ததரமாறிச்சுவைத்தான்வகைக்காரன்
சனகன்மகளைமணம்பொருந்துந்தாமோதரன்போலிருபுயமுஞ்
சரிவைச்சக்கண்மலநஞ்சந்திரோதயம்போற்றிருமுகமும்
எனதுவிழியிற்குளிரவுங்கண்டிருந்தேன்வெங்கடேசரெட்ட
மேந்த்ரன்கலவிதனைக்கடலேஇன்னம்புகல்வேன்கேட்பாயே ௰௧

ஆழியிட்டிலிருந்தாளென்றவளுமுனைப்பமகிழ்ந்தவனை
ஆழிகொடுத்தானதனுடனே அதிகவிலைமுத்தமுங்கொடுத்தான்
ஊழிகாலம்வாழியெனஉரைக்கத்துதியெமைப்புரக்கும்
உரவோன்வெங்கடேசுரெட்டன்உகந்துவெகுமானமுங்கொடுத்தா(ன்)
சூழியானையென்றமுலைத்துணைமேலேற்றிமுரசமெனத்
தொனிக்குஞ்சிலம்புமலம்பவளைதுகிலுந்தரிக்கமனைக்குள்வந்தே(ன்)
வாழியெனவேநானிருந்தேன்மராப்பயிலும்புறம்போனான்
மையலொழித்துகண்பொருந்திமன்னல்வரவுங்கண்டேனே ௰௨

மடக்கு

கடலேயுன்போல்வந்தவளைக்கண்டேன்மகிழ்ந்தேன்வார்த்தையும்
கண்டேயுரைப்பதெல்லாநீகண்டேயெனவுங்கண்டேனே
உடலேன்பசந்தாயென்றுளார்உறவேன்பசந்தாயுரைக்கவெனக்
கொருவரிலாதவாறென்றேன்உள்ளதெனவேதலையசைத்துத்

இடமேபுகன்றாள்புவிபுரந்தசெயமால்வெங்கடேசுரெட்ட
தீரன்கொலுவிற்சென்றேனென்செய்தியுரைத்துன்பவனிகண்ட
தடமென்முலைபார்பொதுமாதர்தம்மிலொருத்திபதுமினிப்பெண்
தாமங்கொடுக்கவேண்டுமென்றாள்சாமிகருத்துமிசைந்தானே ()

மடக்கு

காமனிவனேயென்னிலவன்கறுப்பனிவனைச்சிவப்பனென்பார்
காளைவேலனென்னிலவன்கண்ணீராறுங்கலந்திருப்பான்
பூமன்னவரைநிகருமையாப்பூமான்வெங்கடேசுரெட்டன்
புகழ்சேரெட்டப்புரந்தழைக்கப்புருகூதனைப்போல்வரக்கண்டே
சோவன்றனக்குமாமனையேதுணையாயிருக்குமாமனையே
சூழூர்புவிக்குள்வளைபட்டேதுடித்தேன்மதனால்வளைபட்டே
ஆமன்மதன்சேர்வைப்பறையேஆரமணிசேர்வைப்பறையே
ஆழநிலையாய்ப்பயநிலையேஅன்னையாலும்பயனிலையே ௰௪

கடலுக்குத்தலைவிக்குஞ்சிலேடை-மடக்கு

அச்சங்கடக்கவடக்காக்கொங்கைக்கும்பசலைபொருந்தியனங்
கைக்கும்படிக்குமிருந்துமடல்கைக்குந்தரிக்கவெண்ணிமதி
உச்சம்பார்க்குமடவார்கள்உள்ளங்கவரக்காமனைப்போல்
உதித்தோன்வெங்கடேசுரெட்டன்உலாவப்பார்த்தேன் பெருமட
அச்சங்கூறுமுன்னிடத்தில்அச்சங்கூறுமென்னிடத்தில் மேலை
அம்பாலசைவாய்நீயுமதன்அம்பாலசையுமெனக்குண்டே
மச்சங்கடவாதுன்னையுங்காமச்சங்கடவாதெனக்குமுண்டாம்
வணங்காராகுமுனக்கெனக்கும்வணங்காராகுஞ்சிலதியரோ ௰௫

மடக்கு

வருந்துஞ்சனகிமுகம்பார்த்துவரிவிற்பலத்தைப்பின்பார்த்து
மணக்கோலஞ்செய்திருந்தவன்வேள்மணக்கோலஞ்செய்ததைப்
பாரான், இருந்துவளையும்போச்செனவேதெரிவைமாதர்மயலாகுஞ்
செயவேள்வெங்கடேசுரெட்டதீரனிளசைக்கடற்றுறைவாய்
இருந்திடனாகக்காவேளென்னைத்திடனாகக்காவே
ஏற்றதாலறகிடந்தாரேஎசுந்தாலத்திடந்தாரோ
பொருந்துமணவின்வாய்த்திட்டேபொருப்பேனோதாய்வாய்ந்திட்டே
புதிதாமதியாநந்தினமேபொருகாமதியாநந்தினமே ௰௬

மடக்கு

காரியனைப்பகைக்குமுபகாரிதழ்பாராட்டும்விப
காரிமதியேசனையாலுங்காரியகர்மம்பகர்வோன்

வேரிவனசத்திருமாதைநவிழியுளிருத்திப்பணையளைத்தும்
வென்றோன்வெங்கடேசுரெட்டன்மேவுமிசைக்கடற்றுறைவாய்
வாரிமுகட்டிலெழுகலமேவளைபோனதுவுமெழுதலவே
வந்தால்வருமீசுரப்பாரேமேயலெனகருஞ்சுறப்பாரே
நீரிறுமீன்புலவேநெடுநாட்செலுமோநான்புலவே
நெய்தறிபடருங்கொடியாரோநேயரனைமார்கொடியாரே ௪௭

மடக்கு

கனத்துப்புடைத்துப்பருத்துவிம்மிக்காம்புதிரண்டுகண்கறுத்து
காமன்மகுடம்போற்பரந்துசச்சுக்கடங்காக்கனதனத்தார்
மனத்துக்கிசைந்தவடிவழகன்மதவேள்வெங்கடேசுரெட்டன்
வைகைநதியும்வைப்பாறுமவந்துபெருகுங்கடற்றுறையே
உனக்குள்ளேவாசஞ்சலமேஉள்ளத்துலவாசஞ்சலமே
ஒழியாதுப்புமயக்கம்மேஉண்டேதுப்புமயக்கம்மே
இனத்துமோதுவரியாரோதெரிந்துமோதுவரியாரோ
தேனுக்கேகடமலைத்தேனேசித்தன்கோடமலைத்தேனே ௪௮
பாட்டுடைத்தலைவன்குணத்துக்குங்கடலுக்குஞ்சிலேடை.

மடக்கு

தெரியவமுதம்பழகுமதிதெரிநவாரம்பிரியாமற்
றீரத்திடமுநீங்காமற்செழிக்கவாய்மைகடவாமல்
வரிசைபுரிந்துதமிழ்ப்புனையவந்தேன்வெங்கடேசுரெட்டன்
மனதுநிறையுங்குணம்போலவளரும்பெரியகடற்றுறைவாய்
பெரியமீனேசினக்கயலேபெண்பாலெவருமெனக்கயலே
பெருகுந்திரையிற்செல்லீரோபிழைக்கத்தூதுசெல்லீரோ
அரியின்மனையேமுடலையே அமைத்தாரொவருமுடலையே
ஆனார்க்குரித்தாங்கணைக்கூடே அனுங்கன்மலர்தாங்கணைக்கூடே

ஆ செய்யுள்-௯௯௫,

---

பின்முடுகுவெண்பாவும்-வெண்டுறையும்,

கல்விக்குஞானக்கருத்துண்டாங்காயமுறும்
தொல்வினைகளெல்லாந்தொலையுமே-வில்லைத்
னிற்புபற்றிருக்கணக்கனித்தன்வச்சிரப்புயத்தோர்
கற்பகத்தினைத்துதித்தக்கால் ௧
சிந்தாகுலந்தீருஞ்செய்கருமங்கைகூடும்

சந்தானமென்றுந்தழைத்தேறும்பைந்தாமற்
றானைவயத்தானைமலைப்பாவையளித்தானைமகத்
தானைமுகத்தானைநினைந்தால் உ

செல்வம்பெறலாஞ்செழித்தபுகழ்சேரலாம்
வில்வம்புனைவார்விரிஞ்சேசர்-புல்லுமதன்
கோளைமுடித்தாரிமயக்கோதையிடத்தார்கமலத்
தாளைமனத்துநினைத்தால் ௩

அண்டர்தமக்கரசாமன்புபடாக்கொம்பாம்
மண்டவுணர்தம்முயிர்க்குவன்னியாம்-பண்டுநிறத
கஞ்சனஞ்சிடுங்கடம்பணிக்கெழுந்துகந்துரை
மிஞ்சிநெஞ்சுறிக்கெழுந்தவேல் ௪

ஆகாவாவென்னருகிலஞ்சலென்றுவந்துநின்று
போதரவுசெய்யுமெய்ப்போதுமே-ஓதுதமிழ்ச்
சந்ததமுந்தலங்கீர்தஞ்செறிந்தோங்குயர்ந்துதங்கு
விந்தைகொண்டிலங்குசெந்தில்வேல் ரு

இங்கிதமாநல்வாழ்வெமக்களுக்குமற்பகல்செய்
சங்கடமாம்வேலைதணிக்குமே-பொங்குமுறத்
தற்பாற்கனுக்ரகித்திடக்கருத்தளித்தசத்த
வெற்பினைத்துளைத்தவுக்ரவேல் ௬

ஈட்டும்வினைகளறுத்தின்பமுறவேயெனது
பாட்டுக்குகந்தருள்பாலிக்குமே-நாட்டமிகும்
மண்டலங்கலங்ககண்டர்கண்டர்துண்டர்மிண்டர்வி
விண்டொடுங்கமண்டியுண்டவேல் ௭

உன்னவினிதாயிருக்குமோங்குசெல்வமும்பெருக்கும்
நன்னலருளைக்கொடுக்குமோறும்-பன்னும
சகடமுருளநெருடுகமலசரணகருணையறியின்மருகன்
விகடகரிபிளிளையமுருகன்வேல் அ

ஊழ்வினையைப்போக்குமேபுள்ளொலியைக்காட்டுமே
வாழ்வதற்கோர்வித்தாய்வளருமே-தாழ்வார்
தடபடவெனவதிர்கடலதின்முடிமிசை
விடவதிபொடிசெயும்வேல் ௯

ஓராருசென்னியொருமுருகாவென்றளவில்
தீராதவல்வினைநோய்தீருமே-போராடிக்

கொக்கரித்துவெற்படர்த்துக்கொக்காக்கனைத்துணித்த
விக்ரமத்திருக்கரத்துவேல் ௰

கந்தாகடம்பாகயிலாயமாமலையான்
மைந்தாசுவாமிவடிவேலா-சந்தக்
குறமகளாசைகொள்கணவாகுருபரனாகியகுமரா
அறுமுகவாபழனியின்வேலா ௰௧

அன்பர்பயங்கெடுக்குமக்கிரிகிரியைத்துளைக்கும்
இன்பவல்லிகண்ணுக்கெதிராகும்-மின்பரந்த
வாகுதோளிலேறிமீறிவாகுசாரியோடியாடி
வேகசூரன்மார்பிளந்தவேல் ௰௨

அஞ்சிமயல்சகியாதங்கமுருகிநின்ற
வஞ்சியைச்சேர்தென்றணிகைவள்ளலே-பஞ்சமலர்
அங்கசனுக்குங்கிரணத்தங்கமதிக்குங்கடலுக்
குங்குழலுக்குங்குயிலுக்கும் ௰௩

வாங்குசிலைநுதலார்மாயக்கலவியிலே
ஏங்கிமனமேயிளையாதே-மாங்கனிக்காத்
தம்பியொக்கச்சண்டையிட்டுத்தந்தையைச்சுற்றந்தவொற்றைக்
கொம்பனைச்சற்றன்புவைத்துக்கூறு ௰௪

தாமரைப்பூந்தேனையுண்டுதாதளைந்துவண்டிமிர்ந்து
காமாஞ்செய்வாவிகள்சூழ்கந்தர்சிவ-மாமலைவாழ்
பூவையரங்கந்தஞ்சம்பூசமிலங்குங்கண்டம்
காவையரங்கஞ்சங்கண்காண் ௰௫

வந்துமழைபொழியும்வானேவெஞ்சூர்தடிக்குங்
கந்தர்திருவிழாக்காலத்தில்-தொந்தமையர
நீர்துளியையூற்றிவிடனேர்த்தியலமாற்றிவிடு
கீர்த்திவருநாட்டென்மொழிகேள் ௰௬

போற்றுவார்வல்வினையைப்போக்குமேபூமலர்கொண்
டேற்றுவாரைக்கயிலையேற்றுமே-தோற்றறிய
சந்தந்தங்குஞ்செஞ்சொற்சங்கம்பொங்குஞ்சேந்திற்
கந்தன்செம்பொன்றண்டைக்கால் ௰௭

ஆறுமுகமென்றளவிலச்சந்தவிர்க்குமே
வேறுவினைவந்தால்விலக்குமே-கூறுபுகழ்

மாரியொத்தசூரபத்மன்மார்பிளக்கவேதொடுத்த
வீரசத்தியான்மிகுத்தவேல் ௰அ

வேலாவிராலிமலைவீராவுனக்கொருபெண்
மாலாகியேநின்றுவாடுகிறாள்-நீலான
உம்பலக்கயற்கணிச்சியுத்தரித்திடசமர்த்தி
அற்பசிற்றிடைக்கொடிச்சியாள் ௰௯

கந்தனென்றும்வேலனென்றுங்கானமயில்வீரனென்றும்
செந்தனென்றுமேன்புலவீர்செப்புகிறீர்-மூந்தவிளங்
கூனற்பிறைசூடச்சிவனுக்குபதேசித்தருள்
ஞானக்குருவேடப்பயலை ௨௰

பன்னிரண்டுதோளாமரங்குன்றுவெப்பொழுதும்
என்னிரண்டுதோண்மீதிலேயிருப்பாய்-பொன்னின்
கதிர்முடியப்பாகுகிடக்கனவணையப்பாபழனிக்
கதிபதியப்பாகுமரப்பா ௨௧

நோகாதோவேலாநீநோக்குமட மானுக்காப்
போகாவனந்தேடிப்போதுக்கால்-வாகாத
தினநினைந்திட்டுவணங்கித்திரியுமன்பர்கருள்செயும்பொற்
கனகதண்டைச்சிறுசதங்கைக்கால் ௨௨

வாரீர்பழனிவடிவேலரேகடம்பைடி
தாரீரொன்சிந்தையினிற்றுனுறையீர்-சேரீர்நீர்
கன்றுநஞ்சுபிஞ்சுமஞ்சுகண்களுஞ்சிவந்துபொங்க
என்றனங்களுங்கசங்கவே ௨௩

மேகவிறமான்மருகவீறுதணிகேசவிது
வாகடினமேவுமி ளை விருள்-வா குவ ளை
நத்தத்தத்திற் ற்றிசெசுப்பைகுட்டத்து
நிர்த்தத்திற்கிச்சித்தநீர் ௨௪

பூவைக்குநண்ணுயகற்போதுகமதாமெலிந்தாள்
வாவிக்கவின்றணிகைவாழ்குமரா-பாவிமதன்
அம்புரம்புகுந்தலைக்கவம்பகந்தணந்தெறிக்க
வெம்பிநெஞ்சமுந்திகைக்கவே ௨௫

அம்பிறைசகுமைந்துமலரம்பிறைக்குநொந்துமிக
அம்பிறைக்குங்கண்ணுக்கருள்புரிவாய்-நம்புதணி

கைக்கிரிக்குளுற்றசித்ரவைச்சுடைத்தனைக்குறத்தி
யைக்கலித்தணைத்தவத்தனையே ௨௫

எண்ணிடத்திலேமாரவெண்ணுதபேதகமா
உன்னிடத்திற்கொண்டமயற்கோதாயோ-தன்னிரவு
செல்லாப்பகட்டுப்பெண்கண் செல்லாப்புரட்டுமெங்கும்
பொல்லாப்பரத்தைவஞ்சிபோல் ௨௭

செங்கமலைக்கண்கலங்கிச்சிந்தைநொந்திராமுழுதும்
வெங்கலைக்குஞ்செங்கலைக்கும்வேலோவே-அங்கசன்றன்
பூங்கணையெத்தைத்தப்பூங்கொடிகத்திப்பட்டுத்
தாங்காமையத்தைத்துத்தான் ௨௮

சங்கநிதியேரகம்வாழ்சண்முகவேநின்மோக
மங்கையெழின்மேனிசவாம்வண்மருங்கு-கொங்கைசெங்கண்
கந்தந்தங்கந்தங்கங்கம்பந்தந்தந்தம்
பந்தந்தந்தண்கஞ்சம்பார் ௨௯

நீமருவவாமுருகாநித்திலங்களுஞ்சிந்தக்
காமருதேன்பூட்டிநெடுங்கன்னல்வளைத்-தேமதனன்
வண்டுவரக்கண்டுளநிவண்டுமெதியும்பரிபோய்
வண்டுவரவாய்ப்புலம்புவாள் ௩௰

நூறுமுகமாய்ப்புகழ்ந்துநூறுயிரம்பேர்தம்
வேறுமுகம்பார்த்திருக்கவேண்டாமே-ஆறுமுகச்
சுத்தனைசித்தத்துவைத்துச்சொற்றமிழ்ச்சித்ரக்கவிக்குட்
கத்தனைசற்றுதித்தக்கால் ௩௧

பங்கயக்கண்வேலவனைபைங்கொடியாடேடிநித
மங்கிமிகவுந்தளர்ந்துவாடுகிறாள்.செங்கமலர்
அன்னநடைமின்னலொளிசின்னவிடைவன்னமுலை
கன்னல்மொழிமன்னுமிவள்காண் ௩௨

எத்திக்கும்போற்றுமிவளையெழிற்குமரா
தித்திக்குநின்கனிவாய்த்தேனுறல் -முத்தமிட்டுச்
சித்திரைசெப்புத்தனத்தைச்சிக்கெனக்கட்டிப்பிடித்துச்
சித்தமொத்துப்பொற்பதத்திற்சேர் ௩௩

வேலவர்தாநேற்றணைந்தவிந்தைதனையநானேதுசொல்வேன்
கோலவடமோனசையிடக்கொட்டனையே-சீலமுடன்

கட்டிமுத்தமிட்டணைத்துக்கட்டிமைக்கணைச்சுவைத்து
வெட்டினைப்பதந்நிலிட்டுமேல் ௫௪

வேலவனேநின்கலவிவிந்தையசற்சேற்றமங்கை
கோலவரிக்கண்கழற்றிக்கொஞ்சுகிளி-போலமுலைக்
கச்சுக்குட்சிக்கச்சொக்கப்பொறகட்டிக்கட்டிப்
பச்சைப்பொட்டிட்டத்தைப்பார் ௫௫

ஏவிழியார்மூரலிளநிலாக்கண்டுகருங்
காவிமுகையவிழுங்காஞ்சியே-மேவலருக்
சக்கரக்கரக்குதைக்கதக்கணைக்கிலக்கென [illegible]
[illegible]க்கரககரக்கணைக்காந[illegible] ௫௬

நாலாநாள்சேர்ந்தணைத்தநன்னயத்தைதயெண்ணிமெத்த
மாலாநாள்வேலவனேமாரனெய்யும்-கோலாலே
வண்டுகுடியானகுழல்வஞ்சியெனமேயயந்து
வண்டுருடியாணமருவவா ௫௭

வானுதித்தமாமதிக்கும்வாரிவிட்டவேள்கணைக்கும்
மீனுநித்தவாரிதிக்குமேதினிக்குள்-நானெருத்தி
சிந்தைதவாடிநொந்தசேதிசெங்கைவேலர்பங்கிலோடி
மந்தமாருதஞ்சொலோதுமா ௫௮

செந்தழல்போல்வீசுதினிச்சேர்ந்தணைவாய்வேலவனே
கந்தமலர்ச்சோலைவண்டுங்கார்குயிலுந்-தொந்தமுடன்
பாடுதுவம்புந்தும்பும்பார்மதனுந்தும்வந்துஞ்
சாடுதுவம்புந்தும்புந்தா ௫௯

வாகந்தாவல்லவென்றுல்வாகந்தாராகிலுந்தா
சோகந்தாமீறிவளைத்தோய்ந்திடவே
மாலையிந்துசோலைவண்டுமாரனைபுகுழுநொந்திவ்
வேழைநெஞ்சமேகலங்கினள் ௬௰

பாகாருமின்சொல்வள்ளிபாகாதேவேந்தனருள்
வாகானகுஞ்சரிவிவாகா-நீயேகாவல்
என்றும்புவென்றனெஞ்சசிந்தைபண்புபொங்கவந்து
நின்றுகொண்டிரங்குகந்தனே ௬௧

வாநாவுன்னுறுநடவாதாவோராறிரண்டு
காதாவுன்சித்தமிரங்காதா-நீதாவென்

சிந்தைக்கிசைந்தபடிசெஞ்சொற்கிரங்கியருள்
கந்தப்ரசண்டமுருகா

வந்தனையாவென்றுதுயர்மாற்றிமனவேட்கையெல்லாம்
வந்தனையாத்தந்தருளுமாதவர்-பந்தனைய
கொங்கைக்குறமங்கையொடுகுஞ்சரியுமந்தழுவு
கங்கையுமைதந்திகுகா

அந்தணர்கள்போற்றுமழிஞ்சணிகைவேற்குமரர்
வந்துகலந்துமருவாநாள்-பைந்தொடிக்கு
மேல்படுத்தமூத்தனங்கன்வேல்படப்பொரிந்துதென்றற்
கால்படச்சரித்ததென்பல்காண்

மெத்தமயலாகிமெலிந்தயர்ந்துவாடிநின்றாள்
சித்தமுமவந்தாண்டருளுஞ்செய்வேளே-இத்தலத்தில்
கண்டுமொழிகண்டஞ்சுங்கருங்குழல்கண்டஞ்சும்
வண்டுவிழிகண்டஞ்சுமான்

இருபுறமுங்காவேரியேர்மாலையாச்சூழ்
திருவரங்கவெங்கள்குலதேவா-வெருவா
எரிபுரிந்துவிழிசிவந்துமணிநீண்டவுருவுகொண்டே
வரவுகண்டுதிகிரிகொண்டேவா

ஒருத்திமிகப்பல்கொண்டென்சமுகம்வந்தாள்
இருத்தியவணையென்றுவகைசெப்பி-யுரைத்திடலாற்
செம்புழுலைசொற்பகழிக்கொத்தவிழிச்சித்திரவிற்
பொற்புருவத்துப்பதாத்தாள்

பாலாழிநீங்கியிந்தப்பார்தனிலோர்கள்ளனுக்கா
மாலாழிசங்கொளித்துவந்தருளக்-காலாழி
அன்றனைதக்கடித்திழுக்கவங்கவற்களித்தமுத்தி
இன்றளிக்கவென்றனக்குநீ

பாரோர்புகழவரும்பங்குனியுத்திரத்தில்
ஆரூர்வீதியணுகினார்-நேரோ
பணைச்சர்ப்பாங்கரித்துப்பொற்பதத்திற்றண்கிணிச்சத்தங்
கிணுக்குக்கிண்கிணுக்கென்னவே

திருவாவாயிற்பதியிற்சேவேறுமீசா
மருவுளகொன்றைத்தார்வாங்கில்-வெருவு[illegible]

சினத்துவட்டமிட்டுசெப்பெனப்பிணைத்துதித்தபொற்
றனத்திலிட்டமுத்துவெக்கைதான் ௫௮

இங்கேநாகீயவளையின்பாரணமேபுரிவாய்
தன்னேரருணசலதுரையே-மன்னுமதன்
பூவினம்பையெய்யவநின்றுபோர்செய்கின்றதான்வெலிந்து
காவியங்கண்ணுண்கலங்கினள் ௫௯

கோங்கினரும்போகுமிழியோபொற்பந்தோ
ஓங்குவரையோவொளிர்செப்போ-மாங்குயிலின்
மன்னுமொழிபன்னநடைமின்னலிடையென்னவரு
கன்னிவளர்சின்னமுலைகள் ௬௰

இத்தலத்தோர்போற்றுமிறைவனே தஞ்சைநகர்
வித்தகனேசிவசிவாவேந்தேகேள்-சித்தசன்றன்
சமரிலங்கங்குழலுநந்தஞ்சதிருறும்பெண்டிருமுகஞ்செங்
கமலமுஞ்சந்திரனுமஞ்சுங்காண் ௬௧

பூமிதனிற்பேசும்புனிதாசிவாசிமன்று
காமியின்மேலின்றுபகைகண்டதுகேள்-காமனவன்
மாகரமுந்தேர்வகையருமாமதியும்பாலனமும்
சாகரமுங்கோகிலமுந்தாம் ௬௨

மண்டலத்தோர்பேசுகின்றமாலேசிவாசிமன்று
கண்டஞ்சுங்கன்னிதனங்கைத்தாளம்-செண்டுசிமிழ்
கும்பமம்புயங்கிரீடங்குஞ்சரங்குரும்பைமேரு
பம்பரஞ்சிரந்தகுதுபார் ௬௩

மாதங்கவத்திறற்குவட்டமளித்தோனுதவும்
மாதங்கவத்திரற்பின்வந்தகுகா-மாதங்கந்
தங்கங்கம்பும்போந்துந்தண்கஞ்சங்கண்கண்டம்
பங்கந்தங்குஞ்சங்கம்பார் ௬௪

கடுமொழிசேர்சூரைவென்றகந்தாவிம்மாதின்
நடுமொழிகளங்கண்முனைநற்றாள்-ஓடுசேரத்
தந்தஞ்சுங்கண்டஞ்சகஞ்சங்கஞ்சும்வண்டஞ்சும்
பந்தஞ்சும்பஞ்சஞ்சும்பார் ௬௫

என்றுவடிவேலிளங்குமரனைக்கண்டாள்
அன்றுமுதறசேரமனதாகியே-இன்றுநம்

